










"அதுதானே பார்த்தேன் இந்தக் குதிரை இவ்வளவு வேகமாக ஓடி வருவதற்குக் காரணம் இப்பொழுதுதான் புரிந்தது. வீட்டுக்கு வந்து கொள்ளுத் தின்கிற அவசரம்!"

புதிதாகச் சுதந்திரம் பெற்ற பிலிப்பைன் தீவுகளும் உள்நாட்டுக் குழறல்களிலிருந்து முற்றிலும் விடுபடவில்லை.

மேற்படி நாடுகளில் ஏற்பட்டுள்ள நிலைமையையும் அவற்றின் விஷயத்தில் பிரிட்டிஷ், பிரஞ்சு, அமெரிக்க வல்லரசுகளும் காமன்வெல்த் நாடுகளும் காட்டிவரும் சிரத்தையையும் பார்த்தால் தென்கிழக்கு ஆசியாவில் மூன்றாவது மகா யுத்த அரங்கத்துக்கு இடம் தயாராகி வருகிறதோ என்று தோன்றுகிறது!

சென்ற வாரம் சிட்னியில் (ஆஸ்திரேலியா) நடந்த காமன்வெல்த் மகாநாட்டில் பிரிட்டன், இந்தியா, இலங்கை, பாகிஸ்தான், கானடா, ஆஸ்திரேலியா நியூஸிலந்து முதலிய நாடுகள் கலந்து கொண்டன. அந்த நாடுகள் அப்போது தங்களுடைய எதிர்காலத்தைக் காட்டிலும் தென்கிழக்கு ஆசியா நாடுகளின் எதிர்காலத்திலே அதிக அக்கறை காட்டின. கம்யூனிஸம் என்ற இருள் ஆசியா முழுதும், குறிப்பாக தென் கிழக்கு ஆசியா நாடுகள் முழுதும் கவிந்து கொண்டு வருவதாயும், அந்த இருளிலிருந்து மேற்படி நாடுகளைக் காப்பாற்றுவதற்கான முக்கிய வழி, அந்தப் பிரதேசங்களிலுள்ள ஜனங்களின் வறுமையை ஒழித்து வாழ்க்கை நிலையை உயர்த்துவதுதான் என்றும் பல பிரதிநிதிகளும் பேசினார்கள். தெ. கி. ஆசியா நாடுகளுக்கு உதவியாகச் சுமார் முப்பது கோடி ரூபாய் செலவில் திட்டங்களும் வகுக்கப்பட்டன.

இந்தியா உள்பட காமன்வெல்த் நாடுகளே அந்தத் தொகையைக் கொடுப்பதென்றும் தீர்மானித்தார்கள். இதிலிருந்து தென் கிழக்கு ஆசியா நாடுகளில் ஏற்பட்டுள்ள நெருக்கடியைத் தீர்ப்பதில் சிட்னியில் கூடிய நாடுகள் எவ்வளவு சிரத்தை கொண்டிருக்கின்றன என்பது தெரிகிறது அல்லவா?

தென் கிழக்கு ஆசியா நாடுகளில் கொந்தளிப்பு அடங்காமல் போய் விடுமாயின், பிறகு இந்தியா, பாகிஸ்தான் இலங்கை முதலிய நாடுகளில் கூட பயங்கரமான நிலைமை ஏற்பட்டு விடும் என்று சர்வதேச ராஜதந்திரிகள் பயமுறுத்திய வண்ணமாக இருக்கிறார்கள்.

எனவே, இன்று வல்லரசுகளின் கவனத்தை இழுத்துள்ள தென் கிழக்கு ஆசியா நாடுகளின் முக்கியத்துவம், சரித்திரம், பூகோள அமைப்பு, இந்தியாவுக்கும் மேற்படி நாடுகளுக்கும் உள்ள புராதனத் தொடர்பு, இன்றைய உறவு பற்றி விவரமாகப் பரிசீலனை செய்வது பிரயோஜனமாக இருக்கும். (தொடரும்)




ஆசியா நாடுகளில் ஒரு சில சுதந்திரம் பெற்றுள்ளன என்றாலும், தென் கிழக்கு ஆசியாவைச் சேர்ந்த பல நாடுகளும் சுதந்திரமில்லாமல் பிற நாடுகளின் கைப்பாவைகளாகத் தத்தளித்து வருகின்றன.

சுதந்திரம் பெற்ற நாடுகளின் நிலைமையும் வித்திய கண்டமாக இருந்துவருகிறது. உதாரணமாக சுதந்திர பர்மாவின் இன்றைய நிலை என்ன? சுதந்திரம் பெற்றபின் உள்நாட்டுக் கலகங்களால் அல்லல் பட்டுவரும் பர்மா வெளி நாடுகளின் அவசர உதவியை நாடும்படி நேர்ந்திருக்கிறது. அந்த உதவியைக் கொண்டாவது பர்மா உள்நாட்டுக் கலகங்களிலிருந்து உய்ய வழி இருக்கிறதா? கலகக்காரர்கள் பர்மா சர்க்காரிடமிருந்து பல நகரங்களையும் கைப்பற்றுவதில் வெற்றி பெற்றார்கள் எனில், அங்கு சர்க்காரின் பலவீனத்தைத் தெரிந்து கொள்ளலாம். இப்போது சர்க்கார் மறுபடியும் அந்த நகரங்களையெல்லாம் தங்கள் வசப்படுத்திக் கொண்டு விட்டார்கள். எனினும் பர்மா சர்க்காரின் வெற்றி நிரந்தரமாக இருக்குமா? மீண்டும் அங்கு உள்நாட்டுக் கலகங்கள் பீறிட்டு எழாமல் தடுக்க முடியுமா? இந்தக் கேள்விகளுக்கு எதிர்காலம்தான் விடையளிக்க முடியும்!

அடுத்தபடியாக மலாய் நாட்டைப் பாருங்கள். சென்ற மகா யுத்தம் முடிந்ததும் முடியாததுமாக மலாயாவை மற்றொரு யுத்தம் ஆட்கொண்டு விட்டது. சென்ற மூன்று வருஷங்களுக்கு மேலாக அங்கு சர்க்காருக்கும் கலகக்காரர்களுக்கும் உக்ரமான யுத்தம் நடந்து வருகிறது. சர்க்கார் தரப்பிலும் கலகக்காரர்களிடையும் பொது ஜனங்களிலும் ஆயிரக் கணக்கானவர் பலியாகிவருகிறார்கள். ஐந்து வருஷ காலத்தில் பிரமாதமான ராணுவ பலம் பொருந்திய இரண்டு வல்லரசுகளான ஜெர்மனியையும் ஜப்பானையும் முற்றிலும் வீழ்த்தி அடிபணியச் செய்த வல்லரசுகளில் ஒன்றான பிரிட்டன், மூன்று வருஷங்களாக எவ்வளவோ முயற்சி செய்தும் கேவலம் ஐயாயிரம் கலகக்காரர்களை ஒடுக்க முடியாமல் கதிகலங்கி நிற்கிறது.

ஒரு ஊரில் இரண்டு பைத்தியக்காரர்கள் இருப்பது போல இந்தோ சீனாவில் ஒன்றுக்கொன்று போட்டியாக இரண்டு சர்க்கார்கள் இருந்து வருகின்றன. அந்த சர்க்காரை இந்த சர்க்கார் பிரான்ஸின் பொம்மை சர்க்கார் என்றும், இந்த சர்க்காரை அந்த சர்க்கார் ருஷ்யாவின் பொம்மை சர்க்கார் என்றும் குற்றம் சாட்டி வருகிறார்கள். இரண்டு சர்க்கார் துருப்புகளுக்கும் இடைவிடாமல் யுத்தமும் நடந்து வருகிறது.

ஸயாம் சுதந்திர தேசமாக இருந்தும், நாலாபுறத்திலும் கொதித்துக் கொந்தளித்துக் கொண்டிருக்கும் பர்மா, சீனா, இந்தோ சீனா, மலாயா தேசங்களுக்கு நடுவில் அது எவ்வாறு அமைதியாகவும் சுபிட்சமாகவும் இருக்க முடியும்?

இந்தோனேஷ்யாவில் குடியரசு ஸ்தாபிக்கப் பட்டிருக்கிறது என்றாலும், ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கலகக்கோஷ்டியினர் கிளம்பிக் குடியரசு சர்க்காருக்குத் தொல்லையைக் கொடுத்து வருகிறார்கள்.

பணியை எவ்வளவு பாராட்டினாலும் தகும் என்று தோன்றுகிறது அல்லவா?

அது மாத்திரமல்ல, தற்போதைய உலக நிகழ்ச்சிகளைக் கவனிக்கும்போது அந்த மாணவரின் வாக்கு பலித்து, அது ஒரு தீர்க்க தரிசனமாகி விடுமோ என்று பயப்படவும் இடமிருக்கிறது!

★

இரண்டாவது மகா யுத்தத்தின் போது அமெரிக்கா அணுகுண்டுப் பிரயோகம் செய்தது உலகம் முழுவதையும் நடுக்கிடச் செய்தது. அந்த நாசகரமான ஆயுதத்தை அமெரிக்கா பிரயோகம் செய்து இரண்டு ஜப்பானிய நகரங்களை அடியோடு அழித்தது மன்னிக்க முடியாத குற்றம் என்று உலக மக்கள் ஆத்திரம் அடைந்தனர்.

எனவே, அந்தக் குற்றச் சாட்டிலிருந்து அமெரிக்கா தப்பித்துக் கொள்ள முயற்சித்தது. யுத்தத்தைச் சீக்கிரமாக முடித்து மற்றும் பல்லாயிரக் கணக்கானவர்கள் பலியாகாமல் தடுக்கும் ஜீவ காருண்ய நோக்கத்துடனேயே அணுகுண்டை உபயோகித்ததாக அமெரிக்க ஜனாதிபதி ட்ருமன் கூசாமல் கூறினார்.

ஆனால் அமெரிக்க ஜனாதிபதி கூறிய சமாதானம் உலக ராஜதந்திரிகளில் பலருக்குத் திருப்தியைக் கொடுக்கவில்லை. சில மாதங்களுக்கு முன் ருஷ்யாவும் அணுகுண்டு உற்பத்தி இரகசியத்தைக் கண்டு பிடித்து விட்டதாகச் செய்தி வெளியானதால், அணுகுண்டு உற்பத்தியைத் தடுத்து எதிர்காலத்தில் அணுகுண்டு யுத்தம் நேராமல் தவிர்ப்பதற்காக ஐக்கிய நாடுகள் சபையில் இந்தியா முதலிய நாடுகள் பெரு முயற்சி செய்தன.

ஆனால் அந்த முயற்சி வெற்றி பெறவில்லை. எனினும் இடைவிடாமல் முயற்சி செய்து வந்தால் அந்த நோக்கம் பூர்த்தி பெறலாம் என்ற நம்பிக்கையை அந்த நாடுகள் இன்னும் இழக்கவில்லை!

ஆயினும் சமீபத்தில் வெளியான ஒரு செய்தி அந்த நம்பிக்கையையும் அடியோடு தகர்ப்பதாக இருக்கிறது. அதிலிருந்து, ஜப்பான் மீது அணுகுண்டுப் பிரயோகம் செய்ததைக் குறித்து அமெரிக்கா சிறிதும் பச்சாத்தாபப்படவில்லை என்பதுடன், இனி எந்த விடத்திலும் அணுகுண்டைப் பிரயோகிக்க அமெரிக்கா சிறிதும் தயங்கப் போவதில்லை என்பதும் நிச்சயமாகத் தெரிகிறது!

அமெரிக்காவிலுள்ள ஒரு நகரில் ஜனாதிபதி ட்ருமன் இந்த மாதம் பத்தாம்தேதி பேசிய போது, மறுபடியும் அவசியமானால் அமெரிக்கா அணுகுண்டைப் பிரயோகித்தே தீரும் என்று ஆணவத்துடன் குறிப்பிட்டார்.

உலகத்தைச் சிறப்பிக்கவும், உலகில் அமைதியை உண்டாக்கவுமே அணுகுண்டு உபயோகிக்கப்பட வேண்டும் என்பது தம்முடைய உறுதியான தீர்மானம் என்று ட்ருமன் பசப்பினார்.

அதாவது உலக சமாதானத்தின் பெயரால் அமெரிக்கா எந்த நேரத்திலும் எந்த நாட்டிலும் அணுகுண்டு யுத்தத்தில் ஈடுபடலாம் என்பதே ட்ருமனின் கூற்றுக்கு அர்த்தமாகும்!

இந்த நிலையில், முதலாவது அணுகுண்டு யுத்தம் நடக்கப் போகும் 'பெருமை' ஆசியாவுக்குக் கிடைக்கலாம் என்று ஜப்பானிய மாணவர் கூறியிருப்பதை வெறும் கற்பனை என்று அலட்சியமாகத் தள்ளிவிட முடியுமா?

★

ஐரோப்பாவைக்காட்டிலும் ஆசியாக் கண்டமே இன்று அதிகக் கொந்தளிப்பான நிலையில் இருக்கிறது.

சில மாதங்களிலோ அல்லது சில வருஷங்களிலோ ஏற்படப் போகும் மூன்றாவது உலக மகாயுத்தத்துக்கு, பொதுவாக ஆசியா நாடுகளும் குறிப்பாகத் தென் கிழக்கு ஆசியா நாடுகளும் கேந்திர ஸ்தானங்களாக விளங்கலாம் என்று அரசியல் நிபுணர்கள் கருதுகின்றார்கள்.

அவர்களுடைய கூற்றுக்கு ஆதாரமான எத்தனையோ சம்பவங்கள் இன்று ஆசியாவில் நிகழ்ந்து வருகின்றன.



பசிபிக் மகா சமுத்திரத்தில் அமெரிக்கா அணுகுண்டைப் பிரயோகித்துப் பரீட்சை செய்த போது கடலில் எழுந்த பயங்கரமான புகை மண்டலங்களின் கோரக் காட்சி.




“ஆசியாக் கண்டத்தின் அருமை பெருமைகளை விளக்குக. உலகத்திலுள்ள மற்றக் கண்டங்களைக் காட்டிலும் ஆசியாக் கண்டம் எந்த வகையில் சிறந்தது?” என்று ஒரு பேராசிரியர் கேட்டார்.

அந்தக் கேள்விக்கு ஒரு மாணவர் இவ்வாறு பதில் அளித்தார் :

“உலகத்திலுள்ள எல்லாக் கண்டங்களையும் காட்டிலும் ஆசியாக் கண்டம் தான் மிகப் பெரியது. ஆசியாக் கண்டத்திலிருப்பது போல் உயர்ந்த, பரந்த பீடபூமிப் பிரதேசங்கள் வேறு எங்குமில்லை. இந்தக் கண்டத்தில்தான் வேறு எங்கும் காணமுடியாத மகோன்னதமான மலைச் சிகரங்கள் இருக்கின்றன. உலகத்திலுள்ள ஜனங்களில் பெரும்பாலோர் இங்குதான் வசிக்கிறார்கள். ஆசியாவில் இருப்பது போன்ற குளிர்ந்த பிரதேசங்கள் உலகிலே வேறு எங்குமே இல்லை. இங்கு இருப்பதுபோல் அதி உஷ்ணப் பிரதேசங்களும் வேறு ஒரு கண்டத்திலும் கிடையாது. இந்தக் கண்டத்தைச் சேர்ந்த சிற்சில இடங்களில் தினசரி மூன்று அல்லது நாலு அடி மழை பெய்து ஆறுகளாக ஓடுகின்றது. தினசரி இவ்வளவு அதிக மழை பெய்யும் பிரதேசம் உலகத்திலே வேறு எங்கும் இல்லை. ஒரு நாளும் ஒரு சொட்டு மழையும் பெய்யாத வறண்ட பாலை வனங்களும் ஆசியாக் கண்டத்தில்தான் இருக்கின்றன.”

இதுதான் முதலாவது மாணவர் அளித்த பதில்.

“உலகத்திலுள்ள பிரபல மதங்களைச் சிருஷ்டித்த அவதார புருஷர்கள் யாவரும் ஆசியாவில்தான் ஜனித்தார்கள். ஆகையால் ஆசியாவின் பெருமை வேறு எந்தக் கண்டத்துக்கும் இல்லை” என்று மற்றொரு மாணவர் பதில் அளித்தார்.

மூன்றாவது மாணவர் விடுத்த பதிலைப் பாருங்கள் : “உலகத்தில் மனிதனால் சிருஷ்டிக்கப்பட்டுள்ள சகல ஆயுத வகைகளுடனும் கூடிய ஒரு பெரிய வல்லரசை ஆயுதமே இல்லாமல் தோல்வியுறும்படி செய்த காந்திமகான் பிறந்தது ஆசியாக் கண்டத்தில்தான். அதன் காரணமாக ஆசியா தனிச் சிறப்பு பெற்றிருக்கிறது.”

நாலாவது மாணவரின் பதில் பேராசிரியரைத் திடுக்கிடச் செய்தது.

“உலகத்திலேயே முதலாவது அணுகுண்டு விழுந்த பெருமை ஆசியாவுக்குத்தான் கிடைத்தது. முதலாவது அணுகுண்டு யுத்தம் நடக்கப் போகும் பெருமையும் ஆசியாவுக்குத்தான் கிடைக்கப் போகிறது” என்று அந்த மாணவர் ஒரு வெடிகுண்டைத் தூக்கிப் போட்டாராம்!

சில தினங்களுக்கு முன் ஜப்பான் தேசத்தில் இத்தகைய சம்பவம் நிகழ்ந்ததாகக் கூறப்படுகிறது.

வேறு யாருக்கும் தோன்றாத நாலாவது மாணவரின் அந்த அற்புதமான கற்

''கவலைப்படாதே! முக்கிய காரியமில்லாமல் நான் வருவேனா? காஷ்மீர் மத்தியஸ்தர் ஸர் டிக்ஸன் இங்கே வரப் போகிறாராம். இந்தச் சமயத்தில் நான் ஒரு தடவை காஷ்மீருக்கு வந்து போனால் தேவலை என்று காஷ்மீர் பிரதமர் ஷேக் அப்துல்லா கேட்டுக் கொண்டார். அதனால்தான் வந்தேன். கொஞ்சம் இரு; இதோ ஒரு பிரசங்கம் செய்து விட்டு நானும் வருகிறேன்'' என்றார். பின்னர் பண்டிட் ஜவாஹரும் நானும் சேர்ந்து புது டில்லிக்கு வந்து சேர்ந்தோம். ஜவாஹரின் வருகைக்காக இரண்டு முக்கியஸ்தர்கள் முக்கியமாகக் காத்திருந்தார்கள். அவர்கள் நமது உணவு மந்திரி ஸ்ரீ ஜயராம்தாஸ் தௌலத்ராமும், விதி மந்திரி டாக்டர் ஜான் மத்தாயும்தான். நேருஜி அவர்களிருவருடைய சேவையையும் பாராட்டிப் புகழ்ந்து மந்திரி சபையிலிருந்து அவர்களிருவருக்கும் விடை கொடுத்தனுப்பினார். மேற்படி பிரிவுபசாரக் கூட்டத்தில் பேசிய நேருஜி மந்திரிப் பதவி என்பது 'முள் நிறைந்த படுக்கை' என்றும், இந்தப் பதவிக்குச் சிலர் ஆசைப்படுகிறார்கள் என்றும் பச்சாத்தாபம் தெரிவித்தார்.

அன்றிரவு நேருஜியின் ஜாகையிலேயே தங்கினேன். நேருஜி இரவெல்லாம் தூங்காமல் பைல்களை வைத்துக் கொண்டு மும்முரமாக எழுதிக் கொண்டிருந்தார். ஒரு வேளை முள் நிறைந்த படுக்கையில் படுக்க இஷ்டப்படாமல் அப்படிக் கண் விழித்துக் கொண்டிருந்தாரோ என்னவோ? நான் மெதுவாக நேருஜியின் படுக்கை அறைக்குள் புகுந்து அவருடைய படுக்கையைத் தொட்டுப் பார்த்தேன். பிறகு நேருஜியிடம் சென்று, ''தாங்கள் கூறியது போல் தங்கள் படுக்கையில் ஒரு முள்கூட இல்லையே! மெத்தென்று மிருதுவாகவும் சுகமாகவும் அல்லவா இருக்கிறது!'' என்றேன்.

''விடாக் கண்டரே! யாருக்கு மந்திரி பதவி முள் படுக்கையாகத் தெரிகிறதோ, அவர்தான் அந்தப் பதவிக்கு லாயக்கானவர். யாருக்கு அது சுகமாகவும் மிருதுவாகவும் இருக்கிறதோ, அவர் அப்பதவிக்கு லாயக்கில்லாதவர்!'' என்றார்.

நேருஜி கூறுவது உண்மைதானா என்று பரிசோதிக்க எனக்கு ஆசைதான். அதற்காக ஒரு மந்திரி பதவியை வகித்துப் பார்க்கவும் நான் தயார்தான். ஆனால் நேருஜி 'பதவி வேண்டாம்' என்று கூறுகிறவர்களைத்தானே அதை ஒப்புக்கொள்ளும்படி வற்புறுத்துகிறார்!

பொழுது விடிந்ததும், ''கூடிய சீக்கிரம் தங்களை இந்தோனேஷ்யாவில் சந்திக்கிறேன்'' என்று கூறிவிட்டுச் சென்னையை நோக்கி ஆகாச மார்க்கமாக வந்தேன். ரயில் மந்திரி ஸர் கோபாலசாமி ஐயங்காரே விமானத்தில் வந்திறங்கும் போது ரயில் மார்க்கமாக வர எனக்கென்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?

பண்டித ஜவாஹர்லால் நேருவால் அமெரிக்கா தேசத்துக் குழந்தைகளுக்குப் பரிசளிக்கப் பட்ட ''அசோக்'', ''சாந்தி'' என்ற குட்டி யானைகள் வாஷிங்டன் மிருகக் காட்சி சாலைக்கு வந்தபோது, மேற்படி பரிசளிப்பு வைபவம் வெகு விமரிசையாக நடந்தது.



விரும்பினதையும், முக்கியமாக, "அவசரப் படேல்!" என்று போதித்திருப்பதையும் நேயர்கள் தினப் பத்திரிகைகளில் படித்திருப்பார்கள்.

ஸர்தாரிடம் விடைபெற்றுக்கொண்டு அமெரிக்காவை நோக்கிப் பாய்ந்தேன்.

நியூயார்க் நகரின் மாடமாளிகைகள் என்னைத் தடுத்தாட்கொண்டன. ஓர் உயர்ந்த கட்டிடத்தின் மாடியில் இறங்கி அங்கிருந்த 'லிப்ட்' வழியாகக் கீழே இறங்கினேன். நல்லவேளையாகப் பாகிஸ்தான் பிரதமர் ஜனாப் லியாகத் அலிகான் அதே கட்டிடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தார். சில பிரபல அமெரிக்கத் தொழிற்சாலை முதலாளிகளும், வர்த்தகப் பிரமுகர்களும், செல்வச் சீமான்களும் ஜனாப் லியாகத்துடன் சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள்.

பாகிஸ்தான் பிரதமர் பச்சை உடையில் பளபள வென்று பிரகாசித்துக் கொண்டிருந்தார். அவருடைய தலைத் தொப்பி கைகளில் இருந்தது.

"ஜீ. ஜீ! தொப்பியைத் தலையில் மாட்டிக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால் நீங்கள் இந்த முதலாளிகளிடம் மாட்டிக் கொள்வீர்கள்!" என்றேன்.

"ஏன் அப்படிச் சொல்கிறாய்? என்ன விசேஷம்?" என்று கேட்டார் ஜனாப்.

"தாங்கள்தானே அமெரிக்காவுக்குப் புறப்படுமுன் கூறினீர்கள்? அதற்குள் மறந்து விட்டீர்களா? 'நான் அமெரிக்காவுக்குக் கையில் தொப்பியை ஏந்திக் கொண்டு யாசகத்திற்குச் செல்லவில்லை' என்று. இப்போது இந்த முதலாளிகளுக்கிடையில் தொப்பியைக் கையிலே ஏந்திக் கொண்டு உட்கார்ந்திருக்கிறீர்களே? இந்தப் பொல்லாத சமயம் பார்த்துத் தங்கள் தலைத் தொப்பியிலே டாலரைக் கொட்டி விடுவார்களே!" என்று சொன்னேன்.

"விடாக் கண்டரே! நீர் ரொம்பப் பொல்லாதவர். அமெரிக்கா தேசம் ஆசியாவில் மூலதனம் போட விரும்புகிறது. இவர்கள் எல்லாம் பிரபல தொழிற்சாலை முதலாளிகள். இவர்களுக்கு ஆசியாவைப் பற்றியும், முக்கியமாக ஆசியாவைச் சேர்ந்த பாகிஸ்தானைப் பற்றியும் விவரமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். அமெரிக்கர்களுக்குப் பாகிஸ்தானின் உண்மையான நிலையை எடுத்துச் சொல்வதே என் நோக்கம். உலக சுபிட்சத்துக்கும் சமாதானத்துக்கும் இவர்களுடைய மூலதனம் ஆசியாவில் இருக்க வேண்டும் என்றுதான் சொல்லிக் கொண்டிருக்கிறேன். பாகிஸ்தானுக்கு என்று தனிப்பட்ட முறையில் நான் யாசகம் கேட்கவில்லை. தெரிகிறதா?" என்று கூறினார் ஜனாப்.

"தெரிகிறது, தெரிகிறது! தாங்கள் யாசகம் கேட்கவில்லை என்பது தங்கள் உள்ளங்கை தொப்பி போல் தெள்ளத் தெளியத் தெரிகிறது. நான் வருகிறேன். தாங்கள் அமெரிக்காவின் இதர நகரங்களையும் சுற்றிப் பார்த்துவிட்டு, பாகிஸ்தானின் பொருளாதார நிலைமை அங்கெல்லாம் விளக்கமாகச் சொல்லிவிட்டு வாருங்கள்!" என்றேன்.

அதற்குள் காஷ்மீர் மத்தியஸ்தரான ஆஸ்திரேலிய நீதிபதி ஸர் ஓவன் டிக்ஸன் ஜனாப் லியாகத்தைக் காண உள்ளே பிரவேசித்துக் கொண்டிருந்தார்.

"ஜனாப்! இதோ, இவர்தான் ஸர் டிக்ஸன். அப்படியே காஷ்மீரின் உண்மையான நிலையைப் பற்றியும் இவரிடம் விவரமாகச் சொல்லுங்கள்" என்று கூறிவிட்டுக் காஷ்மீருக்குப் புறப்பட்டேன்.

இதற்குள் ஸர் டிக்ஸன் என்னை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டு, "விடாக் கண்டரே! கொஞ்சம் இரும்; நானும் உம்முடன் இந்தியாவுக்கு வர வேண்டும். வந்து உங்கள் தலைவர் நேருஜியைக் கண்டு பேசவேண்டும்" என்றார்.

"தாராளமாய் வாருங்கள். தாங்கள் வருவதற்குள் நான் இந்தியாவுக்குப் போய் நேருஜியிடம் சொல்லி வைக்கிறேன். நேருஜி இம் மாதக் கடைசியில் இந்தோனேஷ்யாவுக்குச் செல்லுவதால் அதற்குள் வந்து சேருங்கள்" என்று கூறிவிட்டுக் காஷ்மீரை நோக்கிப் பாய்ந்தேன்.

ஸ்ரீநகரை அடைந்ததும் குளிர்ந்த தென்றலும், நிழல் தரும் அடர்ந்த மரங்களும், வாசனை வீசும் நறுமலர்களின் சுகந்த மணமும், காஷ்மீர் பிரதமர் ஷேக் அப்துல்லாவும் என்னை அன்புடன் வரவேற்று உபசரித்தார்கள்.

"விடாக்கண்டரே! இங்கேயும் வந்துவிட்டீரா?" என்ற ஒரு குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினேன். "பண்டித ஜவாஹர்லால் நேரு வாழ்க! காஷ்மீர் வாழ்க!" என்ற கோஷம் காஷ்மீர் பள்ளத்தாக்கெங்கும் எதிரொலி செய்தது.

கூட்டத்தினிடையில் இருந்த பண்டிட் என் பக்கமாக வந்து, "பார்த்தாயா? காஷ்மீரின் அழகே அழகு! இது என் ஜன்ம பூமி!" என்று சொன்னார்.

"ரொம்ப அழகுதான்!" என்றேன்.

"ரொம்ப அழகா! எதைச் சொல்கிறாய்?" என்று கேட்டார் பண்டிதர்.

"உங்கள் ஜன்ம பூமியைப் பார்க்க இதுதானா சமயம்? தலைநகரில் உதவிப் பிரதமர் பட்டேலும் இல்லை, தாங்களும் இப்படி வந்து விட்டால்......" என்றேன்.

# 'போர் முனை'யில் பேட்டி

நமது விசேஷ விடாக்கண்ட நிருபர்

"டில்லிக்குப் போய் வரட்டுமா?" என்று ஆசிரியரிடம் உத்தரவு கேட்டேன்.

"அடிக்கடி டில்லியில் உமக்கென்ன வேலை? அங்கே இப்போது வெய்யில் தாங்க முடியவில்லையாம் ஆகையால் நீர் வேறு எங்கேயாவது போய் வாரும்!" என்றார் ஆசிரியர்.

"நான் தலைநகரம் டில்லியைச் சொல்லவில்லை. ஐ. என். எஸ். டில்லி என்ற கப்பலைச் சொல்கிறேன். நமது உதவிப் பிரதமர் ஸர்தார் வல்லபாய் பட்டேல் அந்தக் கப்பல் மூலமாகத்தான் பம்பாயிலிருந்து கொச்சி செல்கிறார்..." என்றேன்.

"ஓஹோ, நமது போர்க் கப்பல் ஐ. என். எஸ். டில்லியைச் சொல்லுகிறீரா?...... போ...போ...ஜல்தி!" என்று துரிதப் படுத்தினார் ஆசிரியர்.

நான் பம்பாய்த் துறைமுகத்தை அடைந்த சமயம் துறைமுகத்துக்குக் கொஞ்சம் அப்பால் நடுக் கடலில் வெடிச் சத்தங்களும் புகை மண்டலங்களுமாக அமர்க்களப் பட்டுக் கொண்டிருந்தது. 'டார்பிடோ'க்களும், நாசகாரிகளும், பாம்பர் விமானங்களும், டில்லிக் கப்பலைச் சுற்றி வட்ட மிட்டுக் கொண்டிருந்தன.

அடாடா! அந்த மாபெரும் போர்க் கப்பலுக்குள் அல்லவா நமது அரும் பெரும் ஸர்தார்ஜி அகப்பட்டுக் கொண்டிருக்கிறார்! ஐயோ, பாவமே! ஸர்தார் பட்டேல் மீது இந்தக் கப்பல் படையினருக்கு என்ன கோபம்? அவரை எதற்காகத் தாக்குகிறார்கள்? அங்கே இருந்த கலாட்டாவில் என்னுடைய சந்தேகங்களுக்கு ஒருவரும் பதில் சொல்லத் தயாராயில்லை.

இந்தச் சமயம் நல்ல வேளையாக 'ரஞ்சித்' என்ற நாசகாரிக் கப்பல் என் பக்கமாக வந்தது. இதுதான் சமயம் என்று 'ரஞ்சித்' கப்பலுக்குள் தாவிப் பாய்ந்து உள்ளே சென்றேன். கப்பல் படை கமாண்டர் என்னைப் பார்த்து "யார் நீ?" என்று அதிகாரமாகக் கேட்டார்.

"நான் விடாக்கண்டன், சர்தார்ஜியை அவசரமாகப் பேட்டி காண வேண்டும்" என்றேன்.

"விடாக்கண்டரே! உம்மை எனக்குத் தெரியும். என்னைப் பற்றியும் உமது பேட்டியில் எழுதுவதானால் உம்மைத் தட்சணமே ஸர்தார்ஜியிடம் அனுப்பி வைக்கிறேன்" என்றார் கமாண்டர்.

கமாண்டர் பேச்சைத் தட்ட முடியுமா? "ஆகட்டும். எழுதுகிறேன்" என்று சொல்லி வைத்தேன். உடனே கமாண்டர் என்னைப் பலவந்தமாகப் பிடித்து ஒரு பீரங்கிக் குழாய்க்குள் திணித்து ஒரு இயந்திரத்தை இயக்கினார். அவ்வளவுதான்; டில்லிக் கப்பலுக்குள் குண்டு மாதிரி போய்த் தொபீல் என்று விழுந்தேன். என்னைக் கண்ட பட்டேல்ஜி. "விடாக்கண்டரே! இங்கே எப்படி வந்தீர்?" என்று விசாரித்தார்.

கப்பல் படை கமாண்டர் கொடுத்த கடிதத்தை ஸர்தாரிடம் நீட்டினேன். ஸர்தார்ஜி அதைப் படித்துப் பார்த்து விட்டுக் 'கலகல' வென்று சிரித்தார்.

"ஏன் சிரிக்கிறீர்கள்? என்ன சேதி?" என்று கேட்டேன்.

"இதோ, கப்பல் படையினர் எனக்கு அனுப்பியுள்ள இந்தக் கடிதத்தைப் பாரும்! இவர்களுக்கு என்னுடைய கையெழுத்திட்ட போட்டோ ஒன்று வேண்டுமாம்" என்றார் ஸர்தார்.

நான். "அட கஷ்டமே! ஒரு போட்டோவுக்காகவா இத்தனை அமர்க்களம்? போட்டோ வேண்டுமென்று சாத்வீக முறையில் தங்களைக் கேட்டிருக்கலாமே. கொடுத்திருப்பீர்களே! இதற்குக் குண்டு போட்டுத் தங்களைப் பயமுறுத்துவானேன்?" என்று கேட்டேன்.

"இல்லை, அப்பனே! இவ்வளவு நேரமும் அவர்கள் தாக்குதல் நடத்தியது நிஜமான தாக்குதல் அல்ல. தமாஷாக ஒத்திகைதான் நடத்திக் காட்டினார்கள். என் முன்னிலையில் கப்பல் படையின் திறமையைக் காட்டுவதற்காகவே இந்த ஒத்திகை. போட்டோவுக்கும் இதற்கும் சம்பந்தம் கிடையாது" என்றார் ஸர்தார்.

பின்னர் ஸர்தாரின் கையெழுத்திட்ட போட்டோ ஒன்று கப்பல் படை கமாண்டரிடம் அளிக்கப்பட்டது. ஸர்தார்ஜி கப்பல் படையினரின் திறமையை வெகுவாகப் பாராட்டி அவர்களுக்காகக் கப்பலிலேயே ஒரு விருந்தும் நடத்தினார். விருந்துக்குப் பிறகு. "ஸர்தார்ஜி! தாங்கள் கொச்சிக்கும் திருவாங்கூருக்கும் சென்று தங்களுடைய அலுவல்களை முடித்துக் கொண்டு வாருங்கள்; அந்தப் பிரதேசங்களில் வீண் சண்டை வளர்த்துக்கொண்டிருப்பவர்களுக்குக் கொஞ்சம் நல்ல புத்தி சொல்லி விட்டு வாருங்கள்!" என்றேன். அதன்படியே ஸர்தார் பட்டேல் அவர்கள் திருவாங்கூர்—கொச்சி வாசிகளுக்கு நல்ல புத்திமதியைச் சொல்லி

மகா-ா-ா-ஸ்ரீ பொதுஜனத்தின் விஜயத்தைக் கண்டு விகடர் (ஸ்ரீவாஸன்) சற்றுத் திகைக்கிறார்.



# ஸ்ரீ வாஸன் குமாரியின் திருமணம்

சென்னையின் சரித்திரத்தில் என்றும் இம்மாதிரி நிகழ்ந்ததில்லை என்று சொல்லும்படியான கோலாகல வைபவங்களுடன் ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் அவர்களின் செல்வக் குமாரி சௌபாக்கியவதி லக்ஷ்மி நாராயணியின் திருமணம் மே மாதம் 19ந் தேதி சுபமுகூர்த்தத்தில் சிறப்பாக நடந்தேறியது. மிக பாக்கியசாலியான மாப்பிள்ளை ஸ்ரீ வேங்கட சுப்பிரமணியம் பி. எஸ்ஸி., பிரசித்தி பெற்ற ஹைதராபாத் என்ஜினியர் ஸ்ரீ கோபால ஐயர் அவர்களின் செல்வக் குமாரர் ஆவர்.

ஜெமினி அதிபரும் 'ஆனந்த விகடன்' ஆசிரியருமான ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் எந்தக் காரியத்தை எடுத்தாலும் இணையில்லாத சிறப்புடன் நடத்துவது போல் தம் புதல்வியின் திருமணத்தையும் நடத்தி வைத்தார். சென்னை நகரிலுள்ள பிரமுகர்களும், மந்திரிகளும், ஹைகோர்ட் ஜட்ஜுகளும், பத்திரிகாசிரியர்களும், ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர்களும், மற்றும் ஏராளமான நண்பர்களும் விவாகத்துக்கு விஜயம் செய்து கௌரவித்தார்கள்.

"விகடன்" அடிக்கடி மகா-ள-ள-ஸ்ரீ பொதுஜனம் அவர்களுடன் உறவு கொண்டாடுவது வழக்கம் அல்லவா? அந்த மகா-ள-ளஸ்ரீ பொதுஜனம் சாக்ஷாத்தாகவே விகடர் வீட்டுக் கலியாணத்துக்கு விஜயம் செய்திருந்தார் என்று சொல்வது மிகையாகாது! ஸ்ரீ பொதுஜனம் போகுமிடமெல்லாம் அவருக்கும் பிறருக்கும் சிறிது அசௌகரியம் ஏற்படுவதும் அதைப்பற்றி அவர் புகார் சொல்வதும் வழக்கந்தானே? அம்மாதிரியே இங்கும் ஓரளவு நேர்ந்தது. ஆயினும் பொறுமைக்குப் பெயர் போன ஸ்ரீ பொதுஜனம் தமக்கும் பிறருக்கும் நேர்ந்த சிறு அசௌகரியங்களைப் பொருட்படுத்தாமல் விகடரிடம் தம்முடைய தனி நட்புரிமையை நிலை நாட்டிக் கொண்டார்.

கலியாண வைபவம் நாலு தினங்களிலும் மறுநாள் கிரகப்பிரவேசத் தன்றும் பிரபல வித்வான்களின் சங்கீதக் கச்சேரிகளும் நடனக் கச்சேரிகளும் நாதஸ்வரக் கச்சேரிகளும் அமோகமாக நடைபெற்றன. ஆயிரக் கணக்கான ரஸிகர்கள் கண்டும் கேட்டும் ஆனந்தித்தார்கள்.

மணப் பெண்ணுக்குத் தந்தை அளித்த சீர் வரிசைகளும் தம்பதிகளுக்குப் பிரமுகர்களும் சிநேகிதர்களும் அளித்த பரிசுப் பொருள்களும் கண் காட்சியாக வைக்கப்பட்டிருந்தன. ஒரு ராஜ குடும்பத்தில் நடக்கும் கலியாணத்தில் கூட இவ்வளவு பரிசுப் பொருள்கள் வந்து குவிந்திருக்குமா என்பது சந்தேகந்தான்.

மூன்றும் நாள் இரவு ஊர்வலத்தின் போது நூற்றுக்கணக்கான 'காஸ்லைட்'டுகள் இரு புறமும் வரிசையாக வர, ஆயிரக்கணக்கான ஜனங்கள் ஒரு பர்லாங் நீளம் திரண்டு வந்த காட்சி கண் கொள்ளாக் காட்சியாயிருந்தது.

இந்தியக் குடியரசுத் தலைவர் பாபு ராஜேந்திர பிரஸாத், ராஜாஜி. பவநகர் மகாராஜா. ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் ஆகிய பெரியோர்கள் மணமக்களுக்கு மனமுவந்த வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தார்கள்.

ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் அவர்களும் அவருடைய அருமை மனைவியாரும் தங்கள் வாழ்க்கையிலேயே மிக முக்கிய சம்பவமான இந்தத் திருமணக் கொண்டாட்டத்தில் காட்டிய ஊக்கமும் உற்சாகமும் வந்த விருந்தினரை அகமும் முகமும் மலர்ந்து உபசரித்த விதமும் பார்த்தவர்களின் மனதிலிருந்து என்றும் மறையாத வண்ணம் பதிந்தன.

மணப் பெண் சௌ லக்ஷ்மிநாராயணி, தனது பால் வடியும் குழந்தை முகத்தில் நாணமும் குதூகலமும் போட்டியிட, பிரபல ஸினிமா நட்சத்திரங்கள் கண்டு வியக்கும்படியான முத்துப் பல் வரிசை தோன்ற அடிக்கடி புன்முறுவல் பூத்து விளங்கியது, இந்தத் திருமண வைபவத்துக்கே சோபை அளித்து வந்தது.

இவ்வளவு சீர் சிறப்புக்களுடன் திருமணம் புரிந்து கொண்ட பாக்கியசாலிகளான இந்த இளந் தம்பதிகள் நீடூழி காலம் வாழ்ந்து இல்லறம் இனிது நடத்திச் சகல சௌபாக்கியங்களையும் அடைந்து பெற்றோர்களுக்கும் பிறந்த நாட்டுக்கும் பெருமை அளிப்பார்களாக.

கொடுக்கவோ வேண்டியதில்லை என்கிறீர்களே. இது உண்மையா? சர்க்காரே பொது ஜனங்களின் வைத்தியச் செலவை ஏற்றுக் கொண்டால் அவர்களுக்குக் கட்டுப்படியாகுமா?"

"இதற்குத் தேசிய ஆரோக்கிய இன்ஷியூரன்ஸ் திட்டம் என்று பெயர். ஒருவர் தமக்குப் பிடித்தமான டாக்டர் ஒருவரிடம் தம் பெயரைப் பதிவு செய்து கொள்ளலாம். அவருக்கு என்ன வியாதி வந்தாலும் அந்த டாக்டர் அவரைப் பரிசோதனை செய்து மருந்து எழுதிக் கொடுப்பார். அந்தச் சீட்டை மருந்துக் கடையில் காண்பித்தால் இலவசமாக மருந்து கொடுப்பார்கள். ஒரு தெருவில் சுமார் மூவாயிரம்பேர் ஒரு டாக்டரிடம் தங்கள் பெயரைப் பதிவு செய்கிறார்களென்று வைத்துக் கொள்ளுங்கள்; அந்த மூவாயிரம் பேர்களின் ஆரோக்கியத்தைக் கவனித்துக் கொள்வதற்காக அந்த டாக்டருக்கு சர்க்கார் மாதா மாதம் பணம் கொடுத்து விடுவார்கள். நோயைப் பற்றிய கவலையே இங்கிலாந்து தேசத்தில் இப்பொழுதில்லை.

"ஆரோக்கிய இன்ஷ்யூரன்ஸ் திட்டப்படி வாரா வாரம் ஒவ்வொரு தொழிலாளியின் சம்பளத்திலிருந்தும் குறிப்பிட்ட தொகையைச் சர்க்கார் பிடித்துக் கொள்ளுவார்கள். இன்னொரு பங்கை அவர் வேலை செய்யும் கம்பெனி முதலாளி கொடுப்பார். மூன்றாவது பங்கைச் சர்க்கார் போட்டுக் கொள்வார்கள். இவ்வாறு ஒரு மனிதரின் வைத்தியச் செலவை ஏற்றுக் கொள்பவர்கள் மூன்று பேர்கள். இந்தத் திட்டம் நூற்றுக்கு நூறு பங்கு வெற்றிகரமாக நடப்பதாகச் சொல்ல முடியாது. ஆனாலும் போகப் போக இதிலுள்ள குறைகள் நீங்கி விடும் என்பதில் சந்தேகமில்லை."

*　　　　*　　　　*

"பிரிட்டிஷ் மந்திரிகளைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?"

"அவர்கள் அனாவசியமாக ஊர் சுற்றித் திரிவதில்லை. இடம் இடமாகப் போய்ப் பிரசங்கம் செய்வதில்லை. தங்கள் காரியாலயத்திலேயே அதிக நேரம் உட்கார்ந்து ராஜாங்க அலுவல்களைக் கவனத்துடன் கவனிக்கிறார்கள்."

"அங்கே லஞ்ச ஊழல் இருக்கிறதா?"

"எனக்குத் தெரிந்தவரை கிடையாது. சர்க்கார் சிப்பந்திகள் ஜரூராகவும் உண்மையாகவும் தங்கள் கடமைகளை நிறைவேற்றுகிறார்கள். மேலும் நம் நாட்டைப் போல் அங்கே ஆபீஸ்களில் இவ்வளவு சிப்பந்திக் கூட்டம் இல்லை. ஆனால் ஒவ்வொரு ஆபீஸ்களிலும் நிறைய ஸ்திரீகள் வேலை செய்கிறார்கள்."

"பிரிட்டிஷ் பொதுமக்களுக்குச் சர்க்காரிடம் அதிருப்தி இருக்கிறதா? 'அது கிடைக்கவில்லை, இது கிடைக்கவில்லை' என்று முணு முணுக்கிறார்களா?"

"எவ்வளவு கஷ்டங்கள் ஏற்பட்டாலும் இந்த நெருக்கடியான சமயத்தில் சர்க்காரை ஆதரித்தால்தான் கடைத்தேற முடியும் என்று அவர்கள் ஒவ்வொருவரும் நினைக்கிறார்கள்."

"சர்க்காருக்கு வரி செலுத்தாமல் தப்பித்துக் கொள்ளும் மலை விழுங்கிகள் அங்கே இருக்கிறார்களா?"

"பிரிட்டனில் வரி விகிதம் அதிகமாக இருந்த போதிலும், மக்கள் சந்தோஷமாகவே வரி செலுத்தும் அதிசயத்தை அங்கே பார்த்தேன். யாரும் லாபத்தைப் பதுக்கி வைப்பதாகத் தெரியவில்லை. வரியிலிருந்து தப்பித்துக் கொள்ள முயற்சி செய்பவர்களைக் கண்டு பிடிப்பதற்காகப் பிரிட்டிஷ் சர்க்கார் ஒரு கமிஷனையும் நியமிக்கவில்லை."

"முணு முணுக்காமல் வரி செலுத்தும் மனிதர்களும் உலகத்தில் உண்டா?"

"பிரிட்டிஷ் ஜனநாயகத்தின் ரகசியமே இதுதான். ஒவ்வொருவரும் தங்கள் பொறுப்பை உணர்ந்து நடந்து கொள்ளுவதால்தான் யுத்த முடிவில் பாழாய்க் கிடந்த பிரிட்டன் இப்பொழுது மீண்டும் தலை தூக்க முடிந்தது."

இவ்வாறு கூறிக் கொண்டே சற்றுத் தலையை ஸோபாவின் மீது சாய்த்தார் ஸ்ரீ காஸா சுப்பராவ். பல கேள்விகள் கேட்டு தொந்தரவு கொடுத்த பிறகு அவருக்கு ஓய்வு கொடுக்க வேண்டியது அவசியம் என்று தோன்றியது. இவ்வளவு தூரம் பிரிட்டனைப் பற்றிக் கேட்டபிறகு நாமும் பொறுப்புடன் நடந்து கொள்ள வேண்டாமா? அவரிடம் விடை பெற்றுக் கொண்டு திரும்பினேன்.

"பிரிட்டனில் வேலை யில்லாமல் தவிப்பவர்கள் உண்டா?"

"வேலையில்லாப் பிரச்னை பிரிட்டனில் முக்கிய பிரச்னை அல்ல. யுத்தத்துக்கு முன் இருந்ததைவிட பிரிட்டிஷ் தொழிலாளிகளுக்கு அதிகமான சம்பளம் இப்பொழுது கிடைத்து வருகிறது.

"குருடு, முடம் இவர்களுக்குக் கூட பிரிட்டனில் வேலை கிடைக்கிறது. அவரவர்கள் சக்திக்குத் தகுந்த வேலை கொடுக்கப்படுகிறது. ஒரு தொழிற்சாலையில் இரண்டு கால்களும் முடமான ஒரு தொழிலாளி வேலை செய்வதைப் பார்த்தேன். அவருக்கென்று சர்க்கார் பிரத்தியேகமான ஒரு மோட்டார் தயாரித்துக் கொடுத்திருக்கிறார்கள். அந்த மோட்டாரில் உட்கார்ந்து கொண்டு அவர் தொழிற்சாலையில் அங்குமிங்கும் சென்று வேலை செய்வதைப் பார்த்தேன். பர்மிங்ஹாம் நகரில் 'ஹெர்குலிஸ்' ஸைக்கிள் தொழிற்சாலையில் ஒரு அறை நிறையக் குருடர்கள் சுறுசுறுப்பாக வேலை செய்து கொண்டிருந்தார்கள்.

"இதைத் தவிர லண்டன், கிளாஸ்கோ போன்ற நகரங்களில் 'கௌன்ஸில் ஹவுஸ்' என்ற வீடுகளை சர்க்காரே கட்டி வாடகைக்கு விட்டிருக்கிறார்கள். இதனால் மலிவான வாடகையில் தொழிலாளர்களுக்கு ஜாகை வசதி கிடைக்கிறது. பல புதிய தொழில்களை ஆரம்பித்து, வேலையில்லாத் திண்டாட்டத்தை தொழிற் சர்க்கார் அநேகமாகத் தீர்த்து விட்டார்கள் என்று சொல்லலாம்."

"பிரிட்டனிலுள்ள இந்திய மாணவர்களைச் சந்தித்துப் பேசினீர்களா?"

"சில நகரங்களில் சந்தித்துப் பேசினேன். மான்செஸ்டர் நகரத்திலுள்ள இந்திய மாணவர்கள் தங்களுக்கென்று ஒரு ஹாஸ்டல் இல்லாமல் தவிக்கிறார்கள். இஸ்லாமிய நாடுகளிலிருந்து வந்திருக்கும் மாணவர்களுக்குத் தனியாக ஹாஸ்டல் இருக்கிறதாம். தனிப்பட்ட பிரிட்டிஷ் தொழிலாளர் குடும்பங்களில் பணம் கொடுத்துச் சாப்பிட்டுக் கொண்டு சிலர் தங்கியிருக்கிறார்கள். ஆனால் நடுத்தர பிரிட்டிஷ் குடும்பங்களில் நமது மாணவர்களுக்குத் தங்க வசதி கிடைப்பதில்லை. இந்திய சர்க்கார் நமது மாணவர்களுக்கு ஜாகை வசதிகள் செய்து கொடுக்க முன்வரவேண்டும்."

"மோட்டார்த் தொழில், விமான உற்பத்தித் தொழில், மின்சாரத் தொழில் முதலிய விசேஷ நுட்பம் உள்ள தொழில்களைக் கற்றுக்கொள்ள இந்திய மக்களுக்கு ஏதாவது வசதி உண்டா?"

"ஒவ்வொரு தொழிற் சாலையிலும் பல இந்தியர்கள் வேலை செய்து கொண்டிருப்பதைப் பார்த்தேன். இந்திய மாணவர்கள் பல தொழில்களிலும் பயிற்சி பெறுகிறார்கள். பர்மிங்ஹாமில் உள்ள ஒரு தொழிற்சாலையில் ஒரு இந்தியர் என்ஜினீயராக இருக்கிறார்."

"இங்கிலாந்தில் தொழிற்சாலைகளில் வேலை செய்பவர்கள் தாங்களாகவே சிரத்தை எடுத்துக் கொண்டு தெரியாத விஷயங்களைக் கேட்டுக் கற்றுக்கொள்ள வேண்டும். யாரும் ஸ்பூனில் அறிவை எடுத்து வாயில் ஊட்டமாட்டார்கள். ஒரு மாணவன் எவ்வளவு கற்றுக் கொள்கிறான் என்பது அவனுக்குள்ள உற்சாகத்தையும், சிரத்தையையும் சாமர்த்தியத்தையும் பொருத்திருக்கிறது."

• • •

"பிரிட்டனில் சாமான் விலைவாசி எப்படி யிருக்கிறது?"

"பிரிட்டனில் சாமான்கள் மலிவு என்றுதான் சொல்ல வேண்டும். அங்கு தண்ணீர்ப் பஞ்சம் என்பது கிடையாது. ஏராளமான மழை பெய்கிறது. பூமியை உழுது விதைக்க வேண்டியதுதான். பயிர்கள் செழித்து வளருகின்றன. இங்கிலாந்து ஒரு நந்தவனம் போலிருக்கிறது. செழிப்புள்ள பூமியில் காய்கறி, பால், முட்டை முதலிய உணவுப் பொருள்கள் மலிவாக விற்பதற்குக் கேட்பானேன்? ஒரு நாளைக்கு 11 காலன் பால் கறக்கக்கூடிய பசுக்கள் அங்கே இருக்கின்றன. பிரிட்டிஷ் குடியானவர்கள் சிரத்தையுடன் பசுமாடுகளைப் பராமரிக்கிறார்கள். சென்னைப் பட்டணத்தைக் காட்டிலும், லண்டனில் பால் விலை மலிவு. அங்கு கிடைக்கும் பாலுடன் நம் நாட்டுப் பாலை ஒப்பிட முடியாது."

"பிரிட்டிஷ் குழந்தைகளுக்கு எதில் விசேஷப் பயிற்சி அளிக்கப் படுகிறது?"

"குழந்தைகள் ஒன்று கூடி வாழவும், கூட்டுறவு இயக்கங்களில் ஈடுபடவும் இளம் வயதிலேயே பயிற்சி அளிக்கப் படுவதைப் பார்த்தேன். ஒவ்வொரு ஊரிலும் சிறுவர்கள் கிளப்புகளும் சிறுமிகள் கிளப்புகளும் இருக்கின்றன. ஸ்கூல் நேரத்தைத் தவிர மற்ற வேளைகளில் குழந்தைகள் ஒன்றுகூடி விளையாடுகின்றனர். சமூக வேலைகள் போன்ற கூட்டுறவு இயக்கங்களில் கலந்து கொள்ளுகிறார்கள். சிறந்த தலைவர்களாவதற்குப் பால்ய வயதிலிருந்தே பயிற்சி அளிக்கப்படுகிறது."

"இங்கிலாந்தில் யாரும் டாக்டர் பீஸ் கொடுக்கவோ மருந்து வாங்கப் பணம்

ரம் மைல்களுக்குமேல் ரயில் மூலமாகப் பிரயாணம் செய்தோம்.”

“நம் தேசத்து ரயில்களில் உள்ள மூன்றும் வகுப்புகளில் பிரயாணிகளை ஆடு மாடுகளை அடைப்பதைப் போல் அங்கேயும் அடைத்து வைக்கிறார்களா?”

“மூன்றாவது வகுப்பு என்பதே அங்கு இல்லை. முதல் இரண்டு வகுப்புக்கள் தான் அங்கே இருக்கின்றன. ஆனால் வசதிகளிலோ, கட்டணத்திலோ இந்த இரண்டு வகுப்புகளுக்கும் அதிக வித்தியாசம் கிடையாது. ரயில்களில் நிற்கும் பிரயாணிகளை நான் பார்க்கவில்லை.

“லண்டனிலுள்ள டியூப் (சுரங்க) ரயில்கள் எனக்கு மிகவும் வியப்பை அளித்தது. இவைகள் இல்லாவிட்டால் லண்டன்மா நகரத்தின் பிரம்மாண்டமான ஜனப் போக்கு வரத்தைச் சமாளிப்பது மிகவும் கஷ்டமாகி விடும்.”

• • •

பிரிட்டிஷ் மக்களின் மனோ பாவத்தைப் பற்றி விசாரித்தேன்.

“இந்தியா தங்கள் கையை விட்டுப் போய்விட்டதற்காக இங்கிலீஷ்காரர்கள் வருத்தப்படுகிறார்களா?” என்றேன்.

“கிடையாது. அந்த எண்ணமே அவர்களுக்கு இல்லை” என்று மிகவும் அழுத்தமாகக் கூறினார் ஸ்ரீ காஸா.

“இங்கிலீஷ்காரர்கள் நம்மை அடக்கி ஆண்டு வந்த காரணத்தால் நமக்கு எப்பொழுதும் மனவருத்தம் இருக்குமென்றும் அவர்களுடன் நாம் எப்பொழுதுமே சிநேகமாக இருக்க முடியாதென்றும் அவர்களுக்கு ஒரு கவலை, சந்தேகம் இருந்து வந்தது. இந்தியர்கள் பழைய விரோதத்தை மனதில் வைத்துக் கொள்ளவில்லை என்பதை நான் அவர்களுக்கு எடுத்துச் சொன்னேன். இந்திய மக்களுக்குப் பிரிட்டனிடம் அபரிமிதமான சிநேக பாவம் இருந்து வருவதாகக் கூறினேன். அவர்கள் இதைக் கேட்டு மிகவும் சந்தோஷம் அடைந்தார்கள். கனடா, ஆஸ்திரேலியா போன்ற காமன்வெல்த் நாடுகளிடம் அவர்களுக்கு எவ்வளவு அக்கறை உண்டோ அவ்வளவு அக்கறை இந்தியாவிடமும் இருப்பதைக் கவனித்தேன்.”

“பிரிட்டிஷ் மக்கள் யுத்த பீதி அடைந்திருக்கிறார்களா?”

“யுத்த பீதி அடைந்திருக்கிறார்கள் என்று சொல்ல முடியாது. ஆனால் கம்யூனிஸம் ஆசியாவில் பரவி வருவதைக் கண்டு கவலை அடைந்திருக்கிறார்கள். அதைத் தடுக்க என்ன செய்யலாம் என்று யோசித்து வருகிறார்கள்.”

“தாங்கள் பிரிட்டிஷ் பிரதமர் அட்லியைப் பார்த்தீர்களா?”

“அட்லியைச் சந்தித்துப் பேசினேன். அது பிரத்யேக சம்பாஷணையாதலால் அதைப்பற்றிக் கேட்காதீர்கள். ஒரு தேர்தல் கூட்டத்தில் அட்லி பேசும்பொழுது பிரசன்னமாயிருந்தோம்.”

[ஸ்ரீ காஸா சுப்பராவ் இங்கிலாந்து சென்றிருந்தபோது அங்கே பிரிட்டிஷ் பொதுத் தேர்தல் நடந்த சமயம்]

“அட்லி பேசும்பொழுது தொழிற் கட்சி சாதித்த பல காரியங்களை எடுத்துச் சொன்னார். இந்தியப் பிரச்னையைத் தொழிற் கட்சி வெற்றிகரமாகத் தீர்த்து விட்டதாக அவர் கூறியபோது, சபையோர் கரகோஷ ஆரவாரம் செய்தார்கள். இந்தியாவிடம் பிரிட்டிஷ் மக்களுக்குள்ள நல்லெண்ணத்துக்கு இதை ஒரு உதாரணமாகக் கருதினேன்.”

“நீங்கள் சர்ச்சிலைப் பார்த்தீர்களா?”

“அவரையும் ஒரு தேர்தல் கூட்டத்தில் பார்த்தோம். சோஷலிஸ அரசாங்கத்தில் சுதந்திரத்துக்கே இடமில்லை என்று கூறினார். தொழிற் கட்சி சர்க்கார் ஊதாரித்தனமாக நடந்து கொள்வதாகக் குற்றம் சாட்டினார். பிரிட்டிஷ் மக்கள் சர்ச்சிலை ரொம்பவும் கொண்டாடத்தான் செய்கிறார்கள்.”

“சர்ச்சில் கட்சிக்குத் தேர்தலில் இவ்வளவு வோட்டுக்கள் கிடைக்கப் போகிறதென்று அவர்களுக்கு அப்பொழுதே தெரிந்ததா?”

“யாரும் நினைக்கவில்லை. கன்ஸர்வேடிவ் கட்சிக்கு இவ்வளவு நிறைய வோட்டுகள் கிடைத்தது சர்ச்சிலுக்கே ஆச்சரியமாகத்தானிருந்திருக்கும்.”



ஸ்ரீ காஸா சுப்பராவ்

★★★ பிரசித்தி பெற்ற ஆங்கில வாரப் பத்திரிகையான 'சுதந்திரா'வின் ஆசிரியர் ஸ்ரீ காஸா சுப்பாராவ், தயவு தாட்சண்யமில்லாமல் தம் அபிப்ராயங்களை எடுத்துக் கூறும் தீரர். சமீபத்தில் பிரிட்டிஷ் சர்க்கார் அழைப்பின் பேரில் இங்கிலாந்து சென்று அங்கே ஆறு வாரங்கள் தங்கி, பல ஸ்தாபனங்களையும் பல பிரமுகர்களையும் பார்த்து விட்டுத் திரும்பி வந்திருக்கிறார். பிரிட்டனில் அவருக்கு ஏற்பட்ட விசேஷ அனுபவங்களை கேள்வி கேட்டுத் தெரிந்து கொள்வதற்காக அவரை நமது நிருபர் பேட்டி கண்டார். ★★★

# அதிசயத் தீவு

"நீங்கள் பிரிட்டிஷ் விஜயத்தைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டு போவதற்காக வந்திருக்கிறேன்" என்று நான் ஸ்ரீ காஸா சுப்பாராவிடம் தெரிவித்துக் கொண்டேன்.

"சரி, உங்களுக்கு எந்த அம்சத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமோ அதைப் பற்றிக் கேள்வி கேளுங்கள்" என்றார் அவர்.

"எல்லா அம்சங்களையும்தான் தெரிந்து கொள்ள வேண்டும். எல்லாவற்றையும் சொல்லுங்கள்" என்றேன்.

"அப்படியானால் நீங்கள் எவ்வளவு கேள்விகள் கேட்டாலும் பதில் சொல்லத் தயார்" என்றார் அவர்.

ஸ்ரீ காஸா சுப்பாராவ் கறார் கண்டிப்பான பேர்வழி. சொன்னால் சொன்னது தான். மேலே பேட்டி நடக்கவேண்டுமானால் நான்தான் அதைப் பிடித்துத் தள்ளவேண்டும் என்று ஏற்பட்டு விட்டது. சுதந்திராவின் ஆசிரியரைப் பார்ப்பதற்காக நான் ஏறிய சர்க்கார் பஸ்கூட முதலில் இப்படித்தான் 'பாரீஸ் கார்னரி'லிருந்து புறப்பட மறுத்து விட்டது. கீழே இறங்கித் தள்ளியதும் தான் கிளம்பிற்று. இது ஞாபகம் வரவே, அந்தப் பஸ்ஸின் உதவியைக் கொண்டே இந்தப் பேட்டியையும் தள்ளி விடலாம் என்று நினைத்தேன்.

"ஆமாம். பிரிட்டனில் பஸ்களைப் பிரயாணிகள் தள்ளுவது உண்டா? 'க்யூ' வரிசையில் பிரயாணிகள் பஸ்ஸுக்காக நீண்டநேரம் தவம் இருப்பது உண்டா?" என்று கேட்டேன்.

நான் சீமைப் பஸ்ஸைப் பற்றிக் கேட்டதும் எங்கள் பேட்டி-சீமைப் பஸ்ஸைப் போல் வேகமாக ஓட ஆரம்பித்தது.

ஸ்ரீ காஸா உற்சாகத்துடன் பின்வருமாறு கூறினார்:

"பிரிட்டனில் முனிஸிபாலிடிகள் பஸ் நிர்வாகத்தை நடத்துகின்றன. பஸ் என்றால் அது வல்லவா பஸ்! வெல்வெட்டைப் போன்ற மிருதுவான ஸீட்டுக்கள் அந்தப் பஸ்களில் போடப் பட்டிருக்கின்றன. மாடியுள்ள அந்தப் பஸ்கள் பிரயாணிகளுக்குச் சௌகரியமான முறையில் கட்டப்பட்டிருக்கின்றன. ஓட்டை உடைசல் பஸ்களைத் தெருக்களில் காண முடியாது. ஏராளமான பஸ்கள் ஓயாமல் வந்து கொண்டேயிருப்பதால், பஸ்ஸைப் பிடித்துத் தள்ளவேண்டிய அவசியமோ, காத்திருக்க வேண்டிய அவசியமோ கொஞ்சமும் ஏற்படுவதில்லை.

"பஸ்ஸை அவர்கள் மிகவும் சுத்தமாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். கண்ட இடங்களில் அவர்கள் டிக்கட்டைக் கிழித்துப் போடுவதில்லை. பஸ்களின் பின் பக்கத்தில் ஒரு சிறு பெட்டி இருக்கிறது. இறங்கிச் செல்பவர்கள் அதற்குள் உபயோகித்த டிக்கட்டைப் போட்டுவிட்டுப் போகிறார்கள்."

"பஸ்களில் நின்று கொண்டிருக்கும் பிரயாணிகள் அங்கே உண்டா?"

"காலையிலும் மாலையிலும் ஆபீஸ் நேரங்களில் பிரயாணிகள் நிற்கிறார்கள். ஆனால் அடிக்கடி அவர்கள் ஏறிக் கொண்டும் இறங்கிக் கொண்டுமிருப்பதால் வெகு நேரம் கால் வலிக்க நிற்கவேண்டிய அவசியம் ஏற்படுவதில்லை."

"சீமை பஸ்களில் ஸ்திரீ கண்டக்டர்கள் உண்டா?"

"சில ஸ்திரீ கண்டக்டர்களைப் பார்த்தேன். ஆனால், ஏராளமான ஸ்திரீ டிரைவர்கள் சர்க்கார் கார்களில் வேலை செய்கிறார்கள். சர்க்கார் விருந்தினர்களை அங்கங்கே அழைத்துச் செல்வதற்காக பல ஊர்களில் சர்க்கார் நிறைய மோட்டார் கார்களை வைத்திருக்கிறார்கள்."

"நீங்கள் இந்த சர்க்கார் பஸ்களில் ஏறித்தான் பிரிட்டனைச் சுற்றிப் பார்த்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன்."

"சுமார் ஆயிரம் மைல்கள் சர்க்கார் கார்களில் பிரயாணம் செய்தோம். ஆபீ

ஜிக்கு நாங்கள் அதிக வேலை கொடுக்கப் போவதில்லை. எந்த இலாகா நிர்வாகத்தையும் அவரிடம் ஒப்படைக்கப் போகிறதில்லை. பிரிட்டிஷ் மந்திரி சபையில் உள்ள 'லார்டு பிரஸிடெண்டு ஆப் தி கௌன்ஸில்' என்ற பதவியைப் போல் விசேஷ ஸ்தானத்தை அவருக்கு அளிக்க எண்ணியிருக்கிறோம். முக்கியமான எல்லா விஷயங்களைப் பற்றியும் அவருடைய யோசனைகளைக் கேட்டுக் கொள்வதுடன் திருப்தியடைவோம்" என்று ஜவாஹர்லால்ஜி கூறியிருப்பதில் அவருடைய பெருந்தன்மை நன்கு வெளியாகிறது.

ராஜாஜி விசேஷ ஸ்தானம் வேண்டும் என்று விரும்புகிறவர் அல்ல; அதைப் பொருட்படுத்துகிறவரும் அல்ல. ஜவாஹரின் மேற்படி பேச்சைக் குறித்துப் பத்திரிகை நிருபர்கள் ராஜாஜியைக் கேட்டபோது இதைக் குறிப்பாக வெளியிட்டிருக்கிறார். "இந்தக் காலத்து மகான் ஒருவர் கூறிய உபதேசத்தை நான் என் வாழ்க்கையில் நெடுகிலும் கடைப்பிடித்து வந்திருக்கிறேன். 'இந்த வேலைதான் வேண்டும்; அந்த வேலைதான் வேண்டும் என்று பொறுக்கிக் கொண்டும் தேடிக் கொண்டும் இருக்க வேண்டாம். எந்த வேலை உன்பால் வருகிறதோ, அதை எடுத்துக் கொண்டு செய்!' என்று அந்த மகான் போதித்தார். அதுபோலவே இப்போது என்பால் வருகிற வேலையையும் மறுக்காமல் ஏற்றுக் கொள்ளுகிறேன்" என்று ராஜாஜி கூறியிருக்கிறார்.

ராஜாஜிக்கு விசேஷ ஸ்தானத்தைப் பற்றியோ வேலையின் அந்தஸ்தைப் பற்றியோ கவலையில்லைதான். நமக்கும் அத்தகைய கவலை இல்லை. ஆனால் சக்திக்கு மீறிய அதிகமான வேலை அவர் தலையில் சுமரக்கூடாதே என்ற கவலை நமக்கு இருக்கிறது. அது ஜவாஹர்லால்ஜிக்கும் இருக்கிறது என்று அறிந்து மகிழ்கிறோம்.

நாளது மே மாதம் 27உ ராஜாஜி புதுடில்லிக்குப் புறப்படுகிறார். தமிழ் மக்களின் சார்பாக ராஜாஜி அவர்களுக்கு விடை கொடுத்து அனுப்புகிறோம். கூட ஒரு விண்ணப்பமும் செய்து கொள்கிறோம். அந்த விண்ணப்பம் இதுதான்:—"பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜியின் வார்த்தைக்குத் தயவுசெய்து மதிப்புக் கொடுத்து நடந்து கொள்ளுங்கள். வருகிற வேலையையெல்லாம் ஏற்றுக் கொண்டு செய்கிறது என்ற கொள்கையைக் கொஞ்சம் தளர்த்தி விடுங்கள். யோசனை கேட்கிறவர்களுக்கு யோசனை சொல்வதுடன் தயவுசெய்து நிறுத்திக் கொள்ளுங்கள். தங்களுடைய உடல் நலம் எங்களுடைய பெருஞ் செல்வம்; தங்களுடைய அறிவுத் திறன் தமிழ் நாடும் பாரதமும் இழக்க முடியாத அரும்பெரும் ஐசுவரியம்; ஆகையால் தங்களுடைய உடல் நலத்துக்கு ஊறு விளைக்கக்கூடிய அளவு எந்த வேலையையும் இழுத்துப் போட்டுக் கொள்ள வேண்டாம்!" என்று பணிவுடன் கேட்டுக் கொள்கிறோம்.

அட்டைப்பட விளக்கம்

# இணை ஏது, ஈடுதான் ஏது?

"எத்தனையோ கோடி இன்பம் வைத்தாய்!—எங்கள்
இறைவா, இறைவா, இறைவா!"

என்று பாரதியார் பரமனை நோக்கிப் பரவசத்துடன் பாடினார். அத்தனை கோடி இன்பங்கள் வைத்தும் மனிதன் எனதவரை திருப்தி யடைந்ததாகத் தெரியவில்லை. மேலும் மேலும் அவன் பல இன்பங்களைத் தேடித் தேடி அலைந்துகொண்டே இருக்கிறான்; அலைந்து அலைந்து அமைதியை இழந்துகொண்டே இருக்கிறான். அதன் காரணமாகத் தன் வாழ்க்கையையே நரகமாகவும் ஆக்கிக்கொண்டு விடுகிறான்.

குழந்தைகளோ அவனுக்கு நேர்விரோதமாயிருக்கின்றன. அவற்றுக்கு இன்ன பொருளில்தான் இன்பம் என்பதில்லை; எந்தப் பொருளிலும் அவை இன்பம் காண்கின்றன. குழந்தைகளுக்கு மண்ணும் பொன்னும் ஒன்றே; மணல் வீடும் மாடமாளிகையும் ஒன்றே; மரப்பாச்சியும் தங்கப் பதுமையும் ஒன்றே; பாம்பும் பழுதையும் ஒன்றே; புலிக்குட்டியும் பூனைக்குட்டியும் ஒன்றே. அவற்றின் குஞ்சுக் கைகளுக்கு ஒரு சிறு துரும்பு கிடைத்துவிட்டாற்கூடப் போதும்; ஒரே குஷிதான்!

அப்படிப்பட்ட குழந்தைகளுக்கு மானும் மயிலும் கிடைத்துவிட்டால் அவற்றின் ஆனந்தத்துக்குச் சொல்லவா வேண்டும்? அதிலும், சாலைய நிலமே மயிலின் சடையையும் மானின் விழிகளையும் ஒருங்கே அடையப்பெற்ற ஒரு பெண் குழந்தைக்குக் கிடைத்துவிட்டால், அவளுடைய இன்பத்துக்கு இணை ஏது, ஈடுதான் ஏது?

காத்துக் கொண்டிருந்தார் என்று சொன்னால், ராஜாஜியை அறிந்தவர்கள் அது உண்மையென்று உணர்வார்கள். களங்கமுற்ற மனதையுடையவர்கள் வேறு ஏதாவது சொல்லிக் கொண்டிருப்பார்கள். அதைப்பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. கடைசியாக, ராஜாஜியின்பேரில் பதவிகளுக்கிருந்த மோகம் தீர்ந்து விட்டதாகத் தோன்றியது. பதவிகள் அவரை இனித் தொடர மாட்டா என்றும் ஆசையுடன் நம்பினோம். கவர்னர் ஜெனரல் பதவியை விட்டு, ஜனாதிபதி ராஜேந்திர பிரஸாத் அவர்களிடம் பொறுப்புக்களை ஒப்புவித்து விட்டு ராஜாஜி சென்னைக்கு வந்தார். திரும்பிப் போகும் எண்ணம் அணுவளவும் அவருக்கு இருக்கவில்லை. வயது எழுபது பூர்த்தியாகிவிட்டது. வானப்பிரஸ்த ஆசிரமத்தை மேற்கொள்ள வேண்டிய காலந்தான். உடலுக்கும் உள்ளத்துக்கும் ஓய்வு அளிக்கவும், மனதுக்குகந்த சில திருப்பணிகளைச் செய்யவும் திட்டமிட்டிருந்தார். ஆங்கிலத் தமிழ் அகராதி ஒன்று தயாரிக்க வேண்டும் என்பது ராஜாஜி வெகு நாளாகக் கொண்டிருக்கும் ஆர்வம். கூடியவரையில் ஆங்கிலத்தில் உள்ள முக்கியமான எல்லா வார்த்தைகளுக்கும் தமிழில் பிரதி பதம் கண்டுபிடிப்பது, பிரதி பதம் இல்லாவிட்டால் புதிதாகக் கற்பிப்பது,—என்னும் வேலைத் திட்டத்தை ஆரம்பித்து விட்டார். இத்தகைய சொல்லாராய்ச்சியில் மிக்க ஆர்வமும் ஊக்கமும் கொண்டவர் ராஜாஜியின் நெடுநாள் நண்பரான ஸ்ரீ ஏ. வி. ராமன் அவர்கள். ஸ்ரீ ஏ. வி. ராமன் அவர்களுடைய இல்லத்தில் இந்த வேலைக்காக ஒரு காரியாலய அறையும் தயாராயிற்று. தினந்தோறும் மாலையில் மேற்படி காரியாலயத்துக்குச் சென்று ராஜாஜி மூன்று அல்லது நான்கு மணி நேரம் வேலை செய்து வந்தார். இது அவருடைய மனதுக்கு உகந்த வேலை. நல்ல பொழுதுபோக்கு; அதே சமயத்தில் தமிழுக்கு அருமையான திருப்பணி. அகராதி தயாரானதும் அதை வெளியிடுவதற்கு வேண்டிய பொருளைக் காரைக்குடி சா. கணேசன் தாமாகவே திரட்டிக் கொண்டு வந்து விட்டார்! ஆனாலும், என்ன பயன்? இந்த அகராதி வேலை ஆரம்பித்த வேளை, என்ன வேளையோ தெரியவில்லை! 'அ' எழுத்தில் ஒரு சிறு பகுதி முடிவதற்குள்ளேயே புதுடில்லியிலிருந்து மறுபடியும் பதவி துரத்திக் கொண்டு வந்து விட்டது! "உடனே புறப்படுங்கள்!" என்று அவசரப்படுத்துகிறது. "உடல் நலம் சரியாயில்லையே!" என்ற காரணத்தைக் கூட ஒப்புக் கொள்வதாக இல்லை. "புதுடில்லிக்கு வாருங்கள்! எல்லாம் சரியாகிவிடும்!" என்று ராஜாஜியை வற்புறுத்துகிறது பதவி! எப்படியிருக்கிறது கதை!

ராஜாஜி அவர்கள் இப்போதெல்லாம் தமக்கு எழுபது பிராயம் ஆகிவிட்டதை அடிக்கடி தாமும் நினைவூட்டிக் கொண்டு மற்றவர்களுக்கும் சொல்கிறார்கள். அதற்குத் தகுந்தபடியே அவர்களுடைய உடல் நிலையும் இருக்கிறது. சில காலத்துக்கு முன்பு கண்ணில் ஏதோ உபத்திரவம் வந்தது. அது குணமாவதற்கு நெடுநாள் ஆயிற்று. கண் சரியாகும் சமயத்தில் அற்ப ஜலதோஷம் வந்து மார்ச்சளியாகிச் சுரமும் வந்துவிட்டது. சுரம் முற்றிலும் குணமாவதற்குப் பல தினங்கள் பிடித்தன. பல தினங்கள் படுத்த படுக்கையாகவே இருக்க வேண்டி வந்தது. இப்போதுதான் சுரம் நின்றிருக்கிறது. இந்த நிலைமையில் மறுபடியும் அவர்கள் புதுடில்லி போகவேண்டியிருக்கிறது!

"திறமை ஒரு குற்றமா?" என்று நம் சகோதரப் பத்திரிகையில் ராஜாஜியைப் பற்றி எழுதியிருந்தது. "ஆம்; திறமை ஒரு குற்றந்தான்! அறிவும் ஆற்றலும் தீர்க்கதரிசனமும் குற்றங்கள்தான்!" என்று நாம் இப்போது ஒப்புக்கொள்ள வேண்டியதாயிருக்கிறது. அந்தக் குற்றங்களின் காரணமாகத்தானே ராஜாஜி மறுபடியும் இவ்வளவு சீக்கிரத்தில் நம்மைவிட்டுப் போகவேண்டியதாகிறது?

ராஜாஜி இப்போது புதுடில்லிக்குப் போவது அவர்களுடைய நீடித்த தியாக வாழ்க்கையில் ஒரு பெருந்தியாகமேயாகும். அதை அவர்கள் செய்தே தீரவேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. பண்டித ஜவாஹர்லால் நேரு சென்ற 22உ பத்திரிகை நிருபர்களிடம் ராஜாஜியைப்பற்றிக் கூறியவிஷயங்களை நேயர்கள் தினப் பத்திரிகைகளில் படித்திருப்பார்கள். எவ்வளவு அன்பும் ஆர்வமும் பக்தியும் சிரத்தையும் அந்த வார்த்தைகளில் ததும்புகின்றன! "நாங்கள் மிக வற்புறுத்தி வேண்டிக் கொண்டதன் பேரில் ராஜாஜி மந்திரி சபையில் சேர்வதற்கு இசைந்திருக்கிறார். அதற்காக நாங்கள் மிக்க நன்றியுள்ளவர்களாயிருக்கிறோம்!" என்று ஜவாஹர்லால்ஜி சொல்லியிருப்பது நம் மனத்தை உருக்குகிறது.

அதைக் காட்டிலும் நமக்கு மகிழ்ச்சி தரும் விஷயம் ஒன்றையும் ஜவாஹர்லால்ஜி சொல்லியிருக்கிறார். "ராஜா

# பதவி துரத்துகிறது!

மனிதன் தப்புவதற்கு என்னென்ன முயற்சி செய்தாலும் எங்கே போய் ஒளிந்தாலும் விதி அவனை விடாமல் துரத்திச் செல்வது போலவும், கோதண்டத்திலிருந்து விடப்பட்ட ராம பாணம் குறியை விடாது துரத்திக் கொண்டு போவது போலவும், காட்டு மிருகங்களை வேட்டைக்காரர்கள் துரத்திக் கொண்டு ஓடுவது போலவும், சிலர் இந்த உலக வாழ்க்கையில் பதவிகளைத் துரத்திக்கொண்டு போவதுண்டு.

ஆனால் வேறு சிலரையோ அவர்கள் என்னதான் தப்பிக்கப் பார்த்தாலும் விடாமல் பதவி துரத்திக் கொண்டு போகிறது! அவர்கள் ஓடிப் போய் ஒளிந்து கொண்டாலும் பதவி அவர்களை விடுவதில்லை. வேண்டாம் என்று எவ்வளவு மறுத்தாலும் கேட்பதில்லை. அவ்விதம் தற்போது பதவி நம் தலைவர் ராஜாஜியைத் துரத்திக் கொண்டிருக்கிறது! துரத்திப் பிடித்து விட்டதென்றே சொல்லும்படியிருக்கிறது.

ஒரு காலத்தில் ராஜாஜியைப் பதவி வேட்டைக்காரர் என்று சில மகான்கள் சொன்னதுண்டு; அதைக் கேட்டு நம்மவர்களில் சிலர் கோபங் கொண்டதுண்டு. இப்போது அவர்கள் சொன்னதை நினைத்தாலும் சிரிப்பு வருகிறது; நமக்குக் கோபம் வந்ததை யெண்ணினாலும் சிரிப்புத்தான் வருகிறது!

சர்வ சங்கபரித் தியாகியான ஒருவரைப் பதவி மோகம் கொண்டவர் என்று சொல்வது எவ்வளவு பைத்தியக்காரத்தனம்? அத்தகைய பைத்தியக்காரத்தனத்தைக் குறித்துச் சிரிக்கத்தானே வேண்டும்? அன்றியும், தாமரை இலைத் தண்ணீர்போல வாழ்க்கை நடத்தும் ஒருவரைக் குறித்து யாரோ குறை சொல்லி விட்டதற்காக நமக்கு ஏன் கோபம் வர வேண்டும்? இதுவும் சிரிக்கத்தக்க விஷயந்தான்! அந்தக் குறை அவரைப் பாதிக்காதிருக்கும்போது நம்மை ஏன் பாதிக்க வேண்டும்?

• • •

சென்னை மாகாணத்துப் பிரதம மந்திரி பதவிமீது ஒரு சமயம் ராஜாஜி அவர்களுக்கு 'மோகம்' இருந்தது உண்மைதான். அத்தகைய 'மோகம்' கொண்டதற்குச் சரியான காரணங்களும் இருந்தன. முன்னொரு சமயம் ராஜாஜி இரண்டு வருஷம் இம் மாகாணத்தின் பிரதம மந்திரியாயிருந்த போது சில முக்கியமான நிர்மாண வேலைகளை ஆரம்பித்திருந்தார். இம் மாகாண மக்களுக்குச் சில நன்மைகளைச் செய்ய வேண்டும் என்று திட்டமிட்டிருந்தார். மற்ற மாகாணங்களுக்கு வழிகாட்டியாயிருப்பதற்குரிய சிற்சில இலட்சியங்களை வகுத்திருந்தார். அந்த வேலைகள் — இலட்சியங்களை யெல்லாம் அரைகுறையாகவும் ஆரம்பித்தவுடனேயும் அப்படியே நிறுத்தி விட்டு, ராஜிநாமா செய்யும்படி நேரிட்டது. மகாயுத்தம் காரணமாகத்தான். யுத்தம் முடிந்த பிறகு தாம் ஆரம்பித்திருந்த, திட்டமிட்டிருந்த, அந்த வேலைகளை யெல்லாம் மறுபடியும் தொடங்கித் துரிதமாக முடிக்க வேண்டும் என்று கருதினார். அது தம் கடமை என்றும் நம்பினார். துரதிர்ஷ்டவசமாக அந்தச் சமயத்திலேதான் "ராஜாஜி பதவி வேட்டைக்காரர்!" என்ற அவதூறு எழுந்தது. தம்மீது கூறப்பட்ட அவதூறை ராஜாஜி பொருட்படுத்தவில்லை. ஆனால் புனிதமான மகாத்மாவின் திருநாமம் மேற்படி விவாதத்தில் இழுக்கப்பட்ட போது, "ராஜாஜியின் பதவி மோகம் மகாத்மாவையும் பிடித்துக் கொண்டது!" என்று சிலர் வாய் கூசாமல் சொல்லத் துணிந்தபோது, ராஜாஜி "ஐயோ! நமது அருமைத் தமிழ் நாட்டு மக்கள் இப்படி அநியாயமாய் அபசாரத்துக்கு உள்ளாகிறார்களே!" என்று இரக்கம் கொண்டார். உடனே சட்டசபைத் தேர்தலிலிருந்து விலகிக் கொண்டார். அச்சமயம் ராஜாஜி அரசியலிலிருந்து அடியோடு விலகி வேறு வகை தேசத் தொண்டுகள் புரிவது என்றே முடிவு செய்திருந்தார்.

ஆனால் ராஜாஜி பதவியை விட்டுத் தொலைத்துத் தலை முழுகிவிட்டாலும், பதவி அவரை விடுகிற வழியாயில்லை. பதவி அவரைத் துரத்தத் தொடங்கியது. துரத்திப் பிடித்துக் கொண்டு போய் முதலில் புது டில்லியில் அமர்த்தியது. பிறகு கல்கத்தா வரையில் துரத்திச் சென்று வங்கக் கவர்னர் சிம்மாசனத்தில் அமர்த்தியது. அதற்குப் பிறகாவது விட்டதா? மறுபடியும் புது டில்லிக்கு அழைத்து வந்து கவர்னர்-ஜெனரல் சிம்மாசனத்திலும் அவரை உட்கார வைத்தது!

இந்தப் பதவிகள் எப்போது நம்மை விடப்போகின்றன என்று ராஜாஜி

வசதி கிடைப்பதுடன், அவர்கள் கொடுத்த தொகை வட்டியுடன் திரும்பவும் அவர்களுக்கே வந்து சேரும். ஆகவே ஒவ்வொரு ஜில்லாவிலும் நீர்ப்பாசனத் திட்டங்கள் நிறைவேறுவதற்கு ஆங்காங்குள்ள மிராசுதாரர்கள் சர்க்காருக்குக் கடன் கொடுத்துத் தாங்களும் பலன் அடைவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

## பாஷைக் குழப்பம்!

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் ஆதரவில் இந்த வருஷம் கோயம்புத்தூரில் நடந்த மூன்றாவது தமிழ்த் திருவிழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. ஏராளமான தமிழ் அபிமானிகள் விஜயம் செய்து மகாநாட்டைச் சிறப்பித்தார்கள். சென்னைப் பிரதமர் கனம் பி. எஸ். குமாரசாமி ராஜா உள்பட பல பிரமுகர்கள் மகாநாட்டில் முக்கிய பங்கு எடுத்துக் கொண்டார்கள். பல விஞ்ஞான விஷயங்களைப் பற்றித் தமிழில் சிறந்த சொற்பொழிவுகள் ஆற்றப்பட்டன. பிரதேச பாஷையை இஷ்ட பாடமாக வைத்துச் சென்னை சர்க்கார் உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள் அல்லவா? அதைக் கண்டித்து மகாநாட்டில் ஒரு தீர்மானம் நிறைவேறியது. சர்க்கார் பிறப்பித்துள்ள உத்தரவின்படி சிறுவர் சிறுமியர் தங்களுடைய தாய்ப் பாஷையையோ அல்லது பிரதேச பாஷையையோ கட்டாய பாடமாகக் கற்றுக் கொண்டுதான் தீரவேண்டும் என்பதில்லை. அந்தப் பாஷையைக் கற்றுக் கொள்வது அவர்களுடைய இஷ்டத்துக்கு விடப்பட்டிருக்கிறது.

சர்க்கார் உத்தரவின்படி ஹிந்தியும் ஆங்கிலமும் கட்டாய பாடமாக இருந்துவிட்டுப் போகட்டும். அதை யாரும் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கு முதலிய பல்வேறு பாஷைகளில் ஏதாவது ஒன்றை இஷ்ட பாடமாக வைப்பது அனாவசியமான குழப்பத்தை உண்டு பண்ணக்கூடும். முதலாவதாக, மேற்படி உத்தரவினால் தாய்ப் பாஷைக்கும் பிரதேச பாஷைக்கும் முக்கியத்துவம் இராமல் போகிறது. இரண்டாவதாக, தமிழ், சமஸ்கிருதம் முதலிய பாஷைகளுக்குள் துவேஷமும் போட்டி உணர்ச்சியும் ஏற்படக் காரணம் ஆகிறது.

கல்வி இலாகா பழைய பாட அட்டவணைகளையே விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டிருக்கும் வரையில் சர்க்கார் இத்தகைய தொல்லைகளிலிருந்து விடுபடவே முடியாது. அனாவசியமான பாடங்களை வைத்துக்கொண்டு குழந்தைகளின் மூளையைக் குழப்பும் விபரீதத்தை சர்க்கார் விட்டு ஒழித்தால், நாலு பாஷைகளைக் கற்பிப்பது கஷ்டமான காரியமாயிராது.

## முன்ஷியின் ஔஷதம்!

இந்திய சர்க்கார் உணவு மந்திரியாக நியமிக்கப்பட்டுள்ள ஸ்ரீ கே. எம். முன்ஷி அந்தப் பதவியை ஏற்றுக் கொண்டதும் ஏற்றுக் கொள்ளாததுமாக உணவு உற்பத்தியைப் பெருக்கும் காரியத்தில் தீவிரமாக முனைந்திருக்கிறார். அதற்காக அவர் எட்டு முக்கிய அம்சங்கள் அடங்கிய ஒரு திட்டத்தையும் தயாரித்திருக்கிறார். பம்பாய் மந்திரிகளும் பம்பாய் சர்க்கார் உணவு, விவசாய இலாகா அதிகாரிகளும் அடங்கிய கூட்டத்தில் ஸ்ரீ முன்ஷி தமது திட்டத்தைச் சாங்கோபாங்கமாக விவரித்துக் கூறினார்.

உணவுப் பிரச்னை சம்பந்தமாகச் சென்ற வருஷம் மார்ச்சு மாதம் பதின்மூன்றாம் தேதி இதழில் நாம் எழுதியிருந்த சில விவரங்களை இச்சந்தர்ப்பத்தில் ஞாபகமூட்ட விரும்புகிறோம்: "இங்கிலாந்தில் யுத்த காலத்தில் பொது ஜனங்கள் வீட்டுத் தாழ்வாரத்தில் வைத்த பூந்தொட்டிகளில் தக்காளி முதலிய பழச்செடிகளை வைத்து உணவு உற்பத்தி செய்தார்கள். அம்மாதிரி மகத்தான முயற்சி இப்போது இந்தியாவுக்குத் தேவை...உணவுப் பெருக்க முயற்சியில் விவசாய இலாகா மட்டும் ஈடுபடுவது போதாது. ஜில்லா கலெக்டர், டிபுடி கலெக்டர், தாசில்தார், ரிவின்யூ இன்ஸ்பெக்டர், ஜில்லா ஜட்ஜு, கிராமமுனிசிப், மாஜிஸ்திரேட், போலீஸ் சூபரின்டு முதல் கான்ஸ்டேபிள் வரை,—இம்மாதிரி எல்லா இலாகா உத்தியோகஸ்தர்களும் வருகிற மூன்று வருஷத்துக்கு உணவுப் பொருள் பெருக்கத்தில் கவனம் செலுத்த வேண்டும்" என்று குறிப்பிட்டிருந்தோம்.

ஸ்ரீ முன்ஷியின் எட்டு அம்சங்களில் ஒன்று இப்போது அதே கருத்தையே வலியுறுத்துகிறது. உணவு நெருக்கடியைத் தீர்க்க அவரது திட்டத்தில் மற்றும் பல உருவான யோசனைகள் அடங்கியிருக்கின்றன. சென்ற மகாயுத்தத்தின்போது யுத்த கால நடவடிக்கைகளில் சகல அதிகாரிகளும் பங்கெடுத்துக் கொண்டது போல, உணவுப் பொருள் பெருக்க விஷயத்தில் எல்லா அதிகாரிகளும் சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று ஸ்ரீ முன்ஷி வற்புறுத்துகிறார். அது போல் எல்லா அதிகாரிகளும் முனைந்து முன் வந்தால் தான் முன்ஷியின் திட்டம் நிறைவேறும். அந்தத் திட்டம் நிறைவேறினால்தான் இந்தியாவின் உணவுப் பிரச்னை தீருவதற்கு வழி வகை பிறக்கும்.




# கல்கி

மலர் 9   தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா   இதழ் 13


## என்ன சேதி?

### கடன் கொடுத்து உதவுங்கள்!

எவ்வளவு அற்புதமான திட்டங்களாக இருந்தால்தான் என்ன? அவை ஏட்டளவில் பிரமாதமாக இருப்பதால் யாருக்கு என்ன பலன் ஏற்பட முடியும்? இத்தனை கோடி ரூபாய் செலவு செய்தால் குறிப்பிட்டத் திட்டத்தை நிறைவேற்றலாம் என்பதைக் காட்டினும், அத்தனை கோடி ரூபாயைத் தயாரிக்க வழி என்ன என்பதை எடுத்துக் காட்டுவதுதான் புத்திசாலித் தனமாகும்; அதிகமான பலனையும் கொடுக்கும்.

இந்த மாகாணத்தில் உணவுப்பொருள் உற்பத்தியைப் பெருக்குவதற்காகச் சென்னை சர்க்கார் ஏராளமான நீர்ப்பாசனத் திட்டங்களைத் தயாரித்திருக்கிறார்கள். ஆனால் திட்டங்களை நிறைவேற்றுவது எப்படி? எதிர்பார்த்தபடி இந்திய சர்க்காரின் உதவி கிட்டுவதாக இல்லை. எனவே, சென்ற வருஷம் 'கட்டாயக் கடன் திட்டம்' என்னும் யோசனை சொல்லப்பட்டது. இதன் பலாபலன்களை யோசித்துப் பாராமலே சிலர் மூர்க்கத்தனமாக எதிர்த்தார்கள். அந்தத் திட்டம் அப்போது கைவிடப்பட்டது.

காரியத்திலேயே கண்ணுள்ளவரும் சாதுர்யத்துக்கும் ஸமூகத்துக்கும் பெயர்போனவருமான கனம் பக்தவத்ஸலம் அவர்கள் இப்போது மேற்படி கடன் திட்டத்தைச் சிறிது மாற்றி எல்லாரும் ஒப்புக் கொள்ளும்படியான முறையில் கொண்டு வந்து பிரசாரம் செய்து வருகிறார். நிலச்சுவான்தார்களை ஒப்புக் கொள்ளும்படியும் செய்து வருகிறார்.

திருநெல்வேலி ஜில்லாவில் உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்காகச் சர்க்கார் மணிமுத்தாறு நீர்ப்பாசனத் திட்டத்தைக் கைக் கொண்டிருக்கிறார்கள். அந்தத் திட்டம் நிறைவேறுவதற்கு 3 கோடியே 72 லட்சம் ரூபாய் செலவாகும். மராமத்து மந்திரி சில தினங்களுக்கு முன் திருநெல்வேலிக்கு விஜயம் செய்த போது விவசாயிகளைக் கண்டு பேசினார். மணிமுத்தாறு திட்டத்தைச் சீக்கிரமாக அமுலுக்குக் கொண்டுவர ஏற்பாடு செய்வார்களாயின், சர்க்கார் திட்டத்துக்கு இணங்க அந்தச் செலவின் ஒரு பகுதியைக் கடன் கொடுத்து உதவுவதாகத் திருநெல்வேலி மிராசுதார்கள் உறுதி கூறினார்களாம்.

### இரட்டிப்பு லாபம்

சென்னை சர்க்கார் தயாரித்துள்ள நீர்ப்பாசனத் திட்டங்களில் வைகை ரிஸர்வாயர் திட்டமும் ஒன்று. அந்தத் திட்டம் நிறைவேறுமாயின் உடனடியாகத் திருமங்கலம் தாலூகாவைச் சேர்ந்த பதினேழாயிரம் ஏக்கர் நஞ்சை புஞ்சை நிலங்கள் சாகுபடியாவதற்கு வசதி ஏற்படும். அத் திட்டம் அமுலுக்கு வர இரண்டு கோடியே எட்டு லட்சம் ரூபாய் செலவாகும் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள். சில தினங்களுக்கு முன் நடந்த திருமங்கலம் தாலூகா விவசாயிகளின் மகாநாட்டில், வைகைத் திட்டத்தை உடனே மேற் கொள்ளும்படி சென்னை சர்க்காரைக் கேட்டுக் கொண்டும், அதன் செலவைச் சமாளிக்கும் விஷயத்தில் மேற்படி தாலூகா வாசிகள் சர்க்காருக்குக் கடன் கொடுக்கத் தயாராக இருப்பதாயும் தீர்மானம் நிறைவேறியது. அந்த மகாநாட்டில் கலந்து கொண்ட கனம் மராமத்து மந்திரி, மேற்படி திட்டத்தை நிறைவேற்றுவதற்கான அலுவல்களைச் சர்க்கார் கூடிய சீக்கிரம் மேற்கொள்வார்கள் என்று விவசாயிகளுக்கு உறுதி கூறினார்.

மிராசுதார்களிடமிருந்து சர்க்கார் கோருவது கடன் தொகையே யாதலால், மிராசுதார்களுக்குக் கஷ்டம் எதுவும் ஏற்பட இடமில்லை. அதற்கு மாறாக அவர்களுக்கு உடனடியாக நீர்ப்பாசன

## இரண்டும் கெட்டான்!




இலங்கையிலுள்ள இந்தியர்களுக்கு இந்தியாவுக்கு வந்து போகத் தற்காலிக பர்மிட் கொடுக்க மறுக்கிறார்கள். இலங்கையிலேயே இருக்கலாம் என்றாலோ அவர்களுக்குப் பிரஜா உரிமை கிடைப்பதில்லை. இந்த இரண்டும் கெட்ட நிலைமை வெறுத்துப் பிரதி மாதமும் சுமார் இரண்டாயிரம் இந்தியர்கள் இலங்கையை அடியோடு விட்டுவிட்டு இந்தியாவுக்கு வந்து கொண்டிருக்கிறார்கள். By Courtesy : THE HINDU






# கல்கி 

## பொருளடக்கம்

மலர் 9 | மே 28 | விக்ருதி ஞ
இதழ் 43 | | வைகாசி 15



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## ஆலோசனை

எமது டாக்டர் கீழே குறிப்பிட்ட இடங்களில், குறிப்பிட்ட தேதிகளிலும் நேரத்திலும் விஜயம் செய்வார். குழந்தைகள் ஈரல், குலைக்கட்டி சம்மந்தமான எல்லா வியாதிகளுக்கும் அவரிடம் கலந்து ஆலோசிக்கலாம்.

| இடம் | தேதி | விலாசம் |
|---|---|---|
| புதுக்கோட்டை | 29-5-50 | வைத்தா லாட்ஜ் |
| காரைக்குடி | 30-5-50 | மெஸர்ஸ். ஏ.வி & சன்ஸ், டிராவலர்ஸ் ரெஸ்ட் ஹவுஸ் |
| தேவகோட்டை | 31-5-50 (9 to 11 a.m.) | மெஸர்ஸ். ஸ்ரீ மீனாக்ஷி ஸ்டோர்ஸ் |
| சிவகங்கை | 1-6-50 (9 to 11 a.m) | மெஸர்ஸ். லேவி & கம்பெனி |
| மதுரை | 2-6-50, 3-6-50 | மெஸர்ஸ். டி. என். கே. நாகலிங்கம் பிள்ளை & சன்ஸ், வடக்கு சித்திரை வீதி |
| திருநெல்வேலி | 5-6-50, 6-6-50 | சந்திர விலாஸ் ஹோட்டல், ஜங்ஷன் |
| தென்காசி | 8-6-50 | மெஸர்ஸ். ஸ்ரீ மெடிகல் ஸ்டோர்ஸ் |
| ஸ்ரீவைகுண்டம் | 9-6-50 (9 to 11 a.m.) | எஸ். சோமசுந்தரம் பிள்ளை & சன்ஸ் |
| தூத்துக்குடி | 10-6-50 | மெஸர்ஸ். ஸ்ரீ தூத்துக்குடி மெடிகல் ஸ்டோர்ஸ் |

ஆலோசனை நேரம்: காலை 8 முதல் 11 வரை; மாலை 3 முதல் 5 வரை

•

**ஜம்மி வெங்கட்டரமணய்யா & ஸன்ஸ்**

திருச்சிராப்பள்ளி - - மதராஸ்-4




# போனோமிண்ட்

## பேதி மிட்டாயிக்கு ஜே!

திவ்வியமான பப்பர்மிண்ட் மிட்டாய் போல் சுவையுள்ளது. அதிலுள்ள மருந்து சத்துக்கள் உமிழ்நீரோடு கலந்து உதர கோசங்களில் சேர்கின்றன. இது மலபோக்கை செம்மையாக எளிதில் சரிப்படுத்துகிறது.

சென்னை மாகாணத்துக்கு விற்பனை ஏஜண்டுகள்:
மெஸர்ஸ். ஓரியண்டல் மர்க்கண்டைல் ஏஜன்ஸி
99-A, அரமனைக்காரத் தெரு :: மதராஸ்-1

WL 6

# மாடர்ன் தியேட்டர்ஸ்




# குமாரி

காதலும்
கருத்தும்
நிறைந்த
அருமையான
கதை...

மாதுரி தேவி · சகுந்தலா ·
எம். ஜி. ராமச்சந்தர் ·
டி. ராஜன் · நம்பியார் நடித்தது
நடனம் -
லலிதா · பத்மினி · ராகினி
& வனஜா ·

விரைவில்
வருகிறது....

டி. ஆர். சுந்தரம் &
எல்லிஸ் ஆர். டங்கன்
கதை, வசனம் - கருணாநிதி

# அரசாங்கத்தை எதிர்க்கும் மந்திரி!

ரஜனி

கொழும்பு, மே. 17

அடுத்த மாதம் ஜினிவாவில் நடக்கப் போகும் சர்வ தேசத் தொழில் ஸ்தாபன மகாநாட்டுக்கு இலங்கைத் தொழிலாளரின் பிரதிநிதியாக இலங்கை இந்திய காங்கிரஸ் மாஜித் தலைவர்களில் ஒருவரான ஜனாப் அஸீஸை அனுப்புவதென்று அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது அல்லவா? அந்தத் தீர்மானம் இலாகா இல்லாத மந்திரியான ஸ்ரீ ஏ. இ. குணசிங்காவுக்கு ஆத்திரத்தை உண்டு பண்ணியிருக்கிறது. இவ்வாரம் தம்மைத் தலைவராகக் கொண்ட அகில இலங்கைத் தொழிலாளர் யூனியன் காங்கிரஸின் நிர்வாக சபைக் கூட்ட மொன்றை ஸ்ரீ குணசிங்கா அவசரம் அவசரமாகக் கூட்டினார். இலங்கையரல்லாத ஜனாப் அஸீஸை இலங்கைத் தொழிலாளரின் பிரதிநிதியாக அனுப்புவதைப் பலமாக ஆட்சேபிப்பதாயும், ஜனாப் அஸீஸின் நியமனத்தை எதிர்த்துப் பிரதம மந்திரிக்கும் ஜினிவா அதிகாரிகளுக்கும் உடனே விஞ்ஞாபனம் செய்து கொள்ளுவதென்றும் ஒரு தீர்மானத்தை நிர்வாக சபையில் நிறைவேற்றினார்.

பிரதம மந்திரியின் சம்மதத்தைப் பெற்று ஜனாப் அஸீஸை ஜினிவா மகாநாட்டுக்கு அனுப்புவதென்று தொழில் மந்திரி தீர்மானித்திருக்கும் பொழுது, சர்க்காரைச் சேர்ந்த மற்றொரு மந்திரி குணசிங்கா அதை எதிர்ப்பது மந்திரி சபையின் கூட்டுப் பொறுப்பு முறைக்கு நேர் முரணாக இருக்கிறது! இந்த விசித்திரத்தை இந்திய காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ கே. ராஜலிங்கம் சுட்டிக் காட்டி ஸ்ரீ குணசிங்காவுக்குச் சுடச்சுட பதில் கொடுத்திருக்கிறார். "இலங்கையில் மிக அதிகமான தொழிலாளர்களை அங்கத்தினர்களாகக் கொண்ட ஸ்தாபனத்துக்கே ஜினிவாவுக்குப் பிரதிநிதியை அனுப்பும் உரிமை உண்டு. அதை அனுசரித்தே ஜனாப் அஸீஸைத் தொழில் மந்திரி விவேகத்துடன் நியமித்திருக்கிறார். இலங்கை இந்திய காங்கிரஸ் தொழிலாளர் யூனியனில் சுமார் பத்தாயிரத்துக்கு மேற்பட்ட சிங்களவர்களிருப்பதனால் தான் அந்த ஸ்தாபனத்தின் பெயர் இலங்கைத் தொழிலாளர் காங்கிரஸென்று மாற்றி வைக்கப் பட்டுள்ளது. இதன் பிறகும் ஜனாப் அஸீஸின் நியமனத்தை ஸ்ரீ குணசிங்கா ஆட்சேபிப்பதற்கு வகுப்புவாத உணர்ச்சியைத் தவிர வேறு எதுவும் காரணமாக இருக்க முடியாது" என்று ஸ்ரீ ராஜலிங்கம் தமது அறிக்கையில் சொல்லியிருக்கிறார்.

## "இலங்கையர் மயமாக்குவோம்"

ரஜாவில் இந்தியாவுக்குச் செல்லுகிறவர்கள் மறுபடியும் இலங்கைக்கு வர முடியாத நிலைமை ஏற்பட்டிருப்பதைக் குறித்துப் பிரதம மந்திரியைப் பேட்டி கண்டு இதற்குப் பரிகாரம் செய்யக் கூடாதா என்று கேட்கப்பட்டது. இலங்கையில் ஐந்து வருட காலம் வசித்ததை ருசுப்படுத்தி வாசபர்மிட் பெறும் முறையைச் சுலபமாக்கும்படிக் கேட்டபொழுது அது அசாத்தியம் என்று சொல்லும் முறையில் பிரதமர் பதிலளித்தார். கூடிய விரைவில் எல்லா வேலைகளையும் இலங்கையர் மயமாக்குவதுதான் அரசாங்கத்தின் கொள்கையென்றும், இந்த அடிப்படைக் கொள்கையை அனுசரித்தே இமிகிரேஷன் சட்டம் அமுல் நடத்தப் படுகிறதென்றும் பிரதம மந்திரி கூறினார்.

## தவம் செய்வார்!

பர்மியப் பிரதம மந்திரி தாக்கின் நு, பர்மாவில் அரசியல் கொந்தளிப்பு தணிந்ததும் அரசியலிலிருந்து விலகி ஒரு பௌத்த பிக்ஷுவாகக் காஷாயம் தரித்து இலங்கைக்கு வந்து மஹிந்தலை என்னும் இடத்தில் தவம் செய்யப் போகிறாராம். பர்மாவுக்குப் புத்தர் சின்னங்களுடன் சென்றிருந்த இலங்கைத் தூதுகோஷ்டியிடம் இதை அவர் தெரிவித்தார். சென்ற ஜனவரி மாதம் அவர் இலங்கைக்கு விஜயம் செய்த போதும் அப்படித்தான் சொன்னார். புத்தச் சின்னங்களுடன் இப்பொழுது வந்திருக்கும் பர்மிய நல்லெண்ணத் தூது கோஷ்டித் தலைவரான பர்மிய அட்டர்னி ஜெனரலும், தமது பிரதமருக்குப் பௌத்த மதத்திலிருக்கும் பற்றுதலை எடுத்துச் சொல்லிக் கூடிய சீக்கிரம் தாக்கின் நு சந்நியாசம் வாங்கிக்கொள்ள நினைத்திருக்கிறார் என்றும், பர்மாவில் உள்நாட்டுக் கலகம் நின்றவுடன் அவர் சந்நியாசியாகத்

நவம் செய்ய இலங்கைக்கு நிச்சயமாக வருவாரென்றும் கூறினார்.

## ஸ்ரீமதி சாந்தா ஆப்தே

பிரபல வட இந்திய சினிமா நடிகையான ஸ்ரீமதி சாந்தா ஆப்தே தமிழ்ப் படங்களில் நடிக்க மிகவும் பிரியப்படுகிறார். இலங்கையில் உல்லாசப் பிரயாணம் செய்வதற்காக வந்திருக்கும் சாந்தா ஆப்தேயைப் பேட்டி கண்டு பேசிய பொழுது தமிழ்ப் படங்களில் நடிப்பதென்றால் தமக்கு மிகுந்த பிரியமென்றும், சாவித்ரி படத்தில் தாம் ரஸித்து நடித்ததாயும், மற்றொரு தமிழ்ப் படத்தில் நடிக்கும் சந்தர்ப்பம் கிடைத்தால் அதைத் தயங்காமல் ஒப்புக் கொள்ளத் தயாராக இருப்பதாயும் கூறினார்.

## அழிந்த காரணம் என்ன?

மன்னார் ஜில்லாவிலுள்ள திருக்கேதீஸ்வரம் என்ற சரித்திரப் பழமை வாய்ந்த துறைமுக நகரத்தில் புதை பொருள் ஆராய்ச்சிகள் இப்பொழுது ஆரம்பமாகியுள்ளது. இங்குள்ள சைவ ஆலயத்தில் ராம லட்சுமணர்கள் இறைவனை வழிபட்டார்களென்றும், சிங்கள வம்சத்தை ஸ்தாபித்த விஜயனென்ற இளவரசன் முதன் முதலாக இந்தத் துறைமுகத்தில் தான் வந்திறங்கினனென்றும், இலங்கைக்கும் வெளியுலகுக்கு மிடையில் நடந்த சகல போக்கு வரத்துகளும் திருக்கேதீஸ்வரத்தின் மூலமாகவே நடந்ததென்றும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். பழங்காலச் சிங்கள மன்னர்களுக்குப் பட்ட மகிஷிகளாகத் தென்னிந்திய இளவரசிகளே தருவிக்கப்படுவது வழக்கம். அவர்களெல்லோரும் திருக்கேதீஸ்வரத்திலேயே வந்திறங்கியதாகச் சரித்திரச் சான்றுகள் இருக்கின்றன. இவ்வளவு புராதனப் பெருமை வாய்ந்த துறைமுக நகரம் எப்படி பாழாய்ப் போயிற்று? ஏன் கவனிப்பாரற்று அழிந்தது? என்பது பெரிய மர்மமாயிருக்கிறது. இந்த இடத்தை வெட்டிப் பார்ப்பதன் மூலம் மறைந்து போன இலங்கையின் பழம் பெரும் நாகரீகத்தைப் பற்றி அதிசயமான பல தகவல்கள் வெளியாகுமென்று எதிர்பார்க்கப் படுகிறது.

# அக்கப்போர்

“கடவுள் ஒருவர் உயிருடன் இருக்க வேண்டுமென்று விரும்பினால் எவரும் விபத்திலிருந்து தப்பி விடலாம்.”

—ஜனாப் அப்துல் கயூம் அன்ஸாரி.

நமக்கு வரும் விபத்தைப் பற்றிக் கவலைப் படாமலே, கடவுள் உயிரோடிருக்கவேண்டுமென்று விரும்புவோமாக!

★

“அகதிகளுக்குப் பொம்மைத் தொழிலில் பயிற்சி அளிப்பதற்காக இந்திய சர்க்கார் டில்லி பொம்மைக் கம்பெனி ஒன்றுக்கு ரூ. 5,000 கடன் கொடுத்திருக்கின்றனர்.”

— ஒரு செய்தி.

“ நல்ல முயற்சிதான்; அடிக்கடி பொம்மை சர்க்கார் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் வியட்நாமில் மேற்படி பொம்மைகளுக்கு கிராக்கி இருக்கலாம்.

★

“பட்டாணிஸ்தான் என்பது ஒரு கனவு!”

—ஜனாப் லியாகத் அலிகான்.

ஒருவேளை அது கனவானால், அங்கே குரங்குக் குலத்தைக் குடியேற்றிவிடலாம்!

“முதல் ஒன்பது மாதத்தில் ஒரு குழந்தை எப்படி வளருகிறது என்பதை விளக்கும் சினிமாப் படம் ஒன்று அமெரிக்காவில் தயாரிக்கப்பட்டிருக்கிறது.”

—சினிமாக் குறிப்பு.

அந்தப் படம் முழுவதும் ஒரே அழுகையாயிருந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை.

★

“பேய், பிசாசு முதலியவற்றில் நம்பிக்கை வைக்கும் பலர் இன்னும் இருக்கிறார்கள்; அவையெல்லாம் வெறும் பொய் என்று சொன்னாலும் அவர்கள் கேட்பதில்லை.”

—ஒரு பிரசங்கி

பேய், பிசாசுகளுக்குப் பதிலாக உங்களை நம்பச் சொல்கிறீர்களா?

★

“வருமானவரி அதிகாரி மாதிரி ஒருவர் நடித்துப் பல பேரிடம் பணம் வாங்கி விட்டார். அவர் சமீபத்தில் போலீஸாரால் கைது செய்யப்பட்டார்.” —செய்தி

“அந்த நடிப்பு மூலம் அவருக்கு வந்த வருமானத்துக்கு வரி போடப் பட்டதா?” என்று கேட்கிறார் ஒரு சந்தேகப் பிராணி.

"அறையிலுள்ள மேஜை நாற்காலிகளை மாற்றிப் போடுவதின் மூலம் கணவனுக்கும் மனைவிக்கும் இடையே அவ்வப்போது ஏற்படும் தகராறுகளைத் தீர்த்துக் கொள்ளலாம்" என்று லண்டன் பாதிரியார் ஒருவர் கூறுகிறார். —லண்டன் செய்தி.

"எதை யார் தூக்கி யார் தலையில் மாற்றிப் போடுவது?" என்று கேட்கிறான் ஒரு கிரகலக்ஷ்மி.

★

"குமாவன் எக்ஸ்பிரஸ் விபத்துக்குக் காரணமாயிருந்தவர் பற்றி உளவு கூறுவோருக்கு ரூ. 5000 பரிசு வழங்கப்படும்."

—உ. பி. சர்க்கார் அறிவிப்பு.

"பரிசு நிபந்தனைகள் என்ன? இரண்டொரு தப்புகள் இருந்தாலும் பரிசு கிடைக்குமா?" என்று ஒரு பகுத்தறிவு நிபுணர் கேட்கிறார்.

★

"இனறு வெட்ட மான்யம்."

—தலைப்பு.

போகட்டும்; பூதம் கிளம்பாமற் போயிற்றே!

★

"விஜயவாடாவில் நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் ஆந்திரப் பிரிவினை விஷயம் பற்றிப் பேசப்பட்டது."

—பிரபல தினப்பத்திரிகை.

இந்தப் பிரிவினை விஷயம் என்னமோ பலருக்கு ரொம்பவும் விஷமாகத்தான் போய்விட்டது!

★

"அமெச்சூர்கள் ஒரு மணி நேரத்துக்கு மேல் பரதநாட்டியம் ஆடக் கூடாது."

—நீதிபதி ஏ. எஸ். பி. அய்யர்.

"நாட்டியத்துக்குத் தலைமை வகிப்பவர்கள் இரண்டு நிமிஷத்துக்கு மேல் பேசக் கூடாது!" என்று நாட்டிய கலா ரமணி ஒருவர் கூறுகிறார்.

★

"பாட்னாவில் குருடர்களுக்கான உள்ள பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த இரு மாணவர்கள் பாட்னா சர்வ கலாசாலை மெட்ரிக் பரீக்ஷையில் முதல், இரண்டாவது டிவிஷன்களில் தேறி யிருக்கின்றனராம்."

—செய்தி.

அவ்விரு மாணவர்களுக்கும் வாத்தியார்கள் கண்ணை மூடிக்கொண்டு மார்க்குக் கொடுத்திருக்க மாட்டார்கள் அல்லவா?

"பிரபல பிரிட்டிஷ் கிரிக்கெட் ஆட்டக்காரான ஹரால்ட் லார்வுட் என்பவர் சிட்னி நகரில் ஒரு மிட்டாய்க் கடையை வைத்து நடத்த உத்தேசிக்கிறார்." —செய்தி.

இனி அவர் கிரிக்கெட் கடையைக் கட்டி விடுவார் போலும்!

★

"ஆயிரக்கணக்கான வித்து வியாபாரிகளின் சங்கடம். வாகன்கள் கிடைக்காததன் தொல்லை. சரிவரக் வித்து அனுப்ப முடியவில்லை." —முத்துப்பேட்டைச் செய்தி.

வாகன்கள் அனுப்ப வேண்டும் என்று தாக்கீ(த்)துக்குமேல் தாக்கீ(த்)து அனுப்பவரமே!

★

"ஒரு நியூயார்க் வியாபாரி பிரயாண ஏஜென்ஸி ஒன்றை ஆரம்பித்திருக்கிறார். இந்த ஏஜென்ஸி செய்துள்ள விளம்பரத்தில் 1975-ல் இதர கிரஹங்களுக்கு நான்கு விசேஷ விமானங்கள் செல்லும் என்றும் கட்டணம் பின்னர் அறிவிக்கப்படும் என்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது. இதற்குள்ளாகவே சுமார் இருநூறு பேர்கள் தங்கள் ஸீட்டுகளை ரிசர்வ் செய்து கொண்டு விட்டனர்." —ருனோப் செய்தி.

இந்த உலகத்தில் கிரஹங்கள் கிடைக்காததால் இதர கிரஹங்களில் ரிஸர்வ் செய்து கொண்டிருப்பார்களோ?

★

"கெய்க்காரன் பட்டியில் ஒரு பால் பண்ணையை மந்திரி கனம் சந்திரமௌலி திறந்து வைத்தார்." —செய்தி.

அடுத்தபடியாக, பால்காரன் பட்டியில் ஒரு நெய்க் கடையை இன்னொரு மந்திரி திறந்துவைப்பார் என்று எதிர்பார்க்கிறோம்.

★

"கோடம்பாக்கம் சுடுகாட்டை மூடிவிட சர்க்கார் அனுமதி கொடுத்திருக்கிறது."

—பத்திரிகைச் செய்தி.

உத்தாவின் நகல் யமதர்மனுக்கு அனுப்பப்பட்டிருக்கும் என்று நம்புகிறோம்.

★

"சென்னையில் தியாகராஜ நகரிலுள்ள சிவன்-விஷ்ணு கோவிலிலுள்ள உண்டியை உடைத்து யாரோ ஒருவன் பணத்தைத் திருடிக்கொண்டு போய்விட்டானாம்."

—செய்தி.

உண்டியிலுள்ள பணத்தைப் பங்கு போட்டுக் கொள்ளும் விஷயமாகச் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் மனஸ்தாபம் வரக்கூடாது என்னும் நோக்கத்தோடுதான் இப்படிச் செய்தானோ, என்னவோ?

# பர்ஸாத்

[சி. என். சுப்பிரமணியன்]

தமிழ் நாட்டில் மழை குறைவாய் இருக்கிறதே என்று "பர்ஸாத்" (மழை) படத்தைச் சென்னை பிரபாத் டாக்கீஸில் வெளியிட்டிருப்பார்கள் என்று நினைக்கிறேன். பேர்தான் பர்ஸாத்; படத்தில் எதிர்பார்த்த அளவு மழை பெய்யவில்லை. ஆனால் பார்ப்பவர்களின் கண்களிலிருந்து சொட்டுச் சொட்டாக கண்ணீர் சிந்துகிறது. ஹிந்தி சினிமாக்களில் பம்பாய் செட்களைப் பார்த்துப் பார்த்து அலுத்துப் போயிருக்கும் நம் கண்களுக்குப் பட ஆரம்பத்திலேயே இமயமலையும், காடுகளும், நதிகளும், நீர் வீழ்ச்சிகளும், தடாகங்களும் தோன்றுவது கவர்ச்சிகரமாயிருக்கிறது. இதன் மத்தியில் பிரானும், கோபாலனும் வருகின்றனர். அவர்களில் ஒருவர் காரைச் செலுத்த, மற்றவர் பின் தள்ள, கார் செல்லும் காட்சி மறக்க முடியாதது.

பிரான், கோபால் இருவரும் இணைபிரியா நண்பர்கள். காதல் தெய்வீகமானது என்பது பிரானின் கருத்து. காதல் கணப்பொழுதில் தோன்றி மறையக் கூடியது என்பது கோபாலனின் வாதம். கோபால், நீலா என்ற கிராமப் பெண்ணைச் சந்திக்கிறான். நீலா, கோபாலன்மீது காதல் கொள்கிறாள். கோபால் அதை ஒரு விளையாட்டாகக் கருதி நீலாவை மாய்த்து விடுகிறான்.

பிரான் ரேஷ்மா என்ற பெண்ணைச் சந்திக்கிறான். இருவரும் ஒருவரையொருவர் மனமாரக் காதலிக்கின்றனர். ரேஷ்மாவின் தந்தைக்கு இது பிடிக்கவில்லை. அவர் பிரான் தங்கியிருக்கும் வீட்டைச் சுற்றியுள்ள தண்ணீரைக் கடக்க உதவியாயிருக்கும் மரக்கலத்தைத் தண்ணீரில் வெட்டித் தள்ளி விடுகிறார். இதனால் ரேஷ்மா மனம் கலங்கவில்லை. அவள் தன் காதலனை அடையக் கயிற்றை எடுத்துத் தண்ணீரில் போட்டு நீந்திச் செல்ல முற்படுகிறாள். கயிறு துண்டிக்கப்படுகிறது. ரேஷ்மா தண்ணீரால் அடித்துத் தள்ளப்படுகிறாள். வெகு நேரத்திற்குப் பிறகு ஒரு செம்படவனால் காப்பாற்றப் படுகிறாள். செம்படவன் அவளுடைய அழகில் மயங்கி, அவளைத் தன்னை மணக்கும்படி வற்புறுத்தி விவாகத்திற்கு ஏற்பாடு செய்கிறான். தன் காதலியின் பிரிவினால் மிகவும் வியாகூலமுற்று வருந்தப்படுவதைக் கண்ணுற்ற கோபால் அவனுக்குக் காம நோய் என்று எண்ணி மற்றொரு மலைச்சாதி மங்கையின் வீட்டிற்கு அழைத்துச் செல்கிறான். அங்கு அவளுடைய நிலை கண்டு இரங்கி, அவளுக்கு வேண்டிய உதவி செய்துவிட்டு அமைதியற்ற மனத்துடன் பிரான் காரைச் செலுத்திக்கொண்டு வரும்போது ஒரு மரத்தின் மீது மோதிக் கொள்கிறான். அப்புறம் காயம் — ஆஸ்பத்திரி — ஆப்பரேஷன் — காதலர்கள் கூடுதல்!

பிரான்: காதல் தெய்வீகமானது; காசு கொடுத்து வாங்க முடியாதது. கோபால்! நீ செய்யும் காரியம் நல்லதல்ல. இன்று நீ என்னையும் என்னுடைய வார்த்தைகளையும் உதாசீனம் செய்யலாம். ஆனால் என்றைக்காவது ஒரு நாள் செய்த தீவினைக்காக நீ ரத்தக் கண்ணீர் வடிக்க வேண்டியிருக்கும்.

கோபால்: காதல்! பெண்களிடம் உண்மையை எதிர்பார்ப்பது மதியீனம். நீ சொல்வது பதினெட்டாம் நூற்றாண்டில்; இருபதாம் நூற்றாண்டில் அவ்விதமல்ல. பணத்தைக் கண்டால் பலர் முன் வருவர்!

ரேஷ்மா: தன் தகப்பன் தன்னைக் கொலை செய்ய முற்படும்போதும், செம்படவனால் காப்பாற்றப்பட்டுத் தனியே நின்று தவிக்கும் போதும், பட்டணத்தில் வளையல் போட்டுக் கொள்ளும் போதும், தன் காதலனின் ஸிதார் சத்தத்தைக் கேட்டு ஓடும் போதும் ரேஷ்மா படும் அவஸ்தைகள் மயிர்க்கூச்செறியச் செய்கின்றன.

நிம்மி: புதிய முகம். ஆனால் வெகு நாட்களாகத் திரையில் தோன்றி நடித்தவர்களைப் போல் தனக்குக் கொடுத்த பாத்திரத்தைக் கச்சிதமாக நடித்திருப்பது போற்றத் தக்கது. தன்னுடைய கண்ணீரின் உதவியால் கணவனின் காலைக் கழுவுவது போல் காட்டுவதும், தன் காதலன் தன்னை விட்டுப் பிரிந்து செல்லும் போதும், தன் காதலனை எதிர்பார்த்து ஏங்கித் தவிக்கும் போதும் உணர்ச்சியுடன் நடிக்கிறார்.

செம்படவன்: கன்னிப் பெண்ணான கட்டழகி ரேஷ்மாவை அலைகளின் மத்தியிலிருந்து காப்பாற்றுகிறான். தானாகப் பழுக்காத காயைத் தடிகொண்டு அடித்துப் பழுக்க வைக்க அவன் செய்யும் முரட்டுத் தனமான செய்கைகளும், கொடூரமான நடத்தைகளும், ரேஷ்மா அவனை நிராகரிக்கும் சமயங்களில் செய்யும் முட்டாள்தனமான காரியங்களும் மனதைக் கரைய வைக்கின்றன.

பொதுவாகப் பார்க்குமிடத்துக் காதல், சோகம், வீரம், நீதி, சந்தோஷம்—மற்றும் நவரசங்களும் நிறைந்துள்ள உல்லாசப் பொழுது போக்குப் படம் "பர்ஸாத்."

# 11. எண்ணெய்க் கிண்ணம்



ஒரு காலத்தில் நாரதருடைய உள்ளத்தில் அகங்காரம் புகுந்து விளையாட ஆரம்பித்ததாம். தன்னைப் போன்ற பக்தன் யாரும் இல்லை என்று எண்ணினார். இவ்வாறு நாரதருடைய உள்ளத்தில் தன் மதிப்பு மிஞ்சிப் போனது பகவானுக்குத் தெரிந்து விட்டது.

"நாரதரே! கொஞ்சம் பூவுலகத்துக்குப் போய் அங்கே என் சிறந்த பக்தன் ஒருவன் இருக்கிறான். அவனைக் கண்டு அவன் குணாதிசயங்களைப் பார்த்து வாரும். உமக்கு நன்மை உண்டாகும்" என்று மகாவிஷ்ணு சொன்னார்.

"சரி, பகவான் ஆக்ஞைப்படியே போய் அந்தப் டக்தனிடமுள்ள விசேஷத்தை அறிந்து வருகிறேன். என்னை விடப் பெர்ய பக்தன் ஒருவன் உலகத்தில் இருக்கிறானா? அந்த அதிசயத்தையும் பார்க்கலாம்!" என்று நாரதர் எண்ணி அவன் யார், எங்கே இருக்கிறான் என்று எல்லா விவரங்களையும் விசாரித்துக்கொண்டு பூலோகம் சென்றார். அங்கே போனவர் குறிப்பிட்ட வீட்டில் ஒரு குடியானவனைக் கண்டார். அவன் காலையில் எழுந்ததும் "ஹரி!" என்று ஒரு தடவை சொல்லி விட்டு ஏரைத் தூக்கிக் கொண்டு தன் வயலுக்குப் போனான். நாள் முழுதும் வயலில் உழுது வேலை செய்துவிட்டு



# ராமகிருஷ்ண உபநிஷதம்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

வீட்டுக்குத் திரும்பி வந்தான். படுக்கு முன் "ஹரி!" என்று ஒரு முறை மறுபடியும் சொல்லி விட்டுப் படுத்துத் தூங்கப் போனான்.

இதைப் பார்த்த நாரதர், "இவன் பெரும் பக்தனுமே!" என்று மனதுக்குள் நகைத்தார். மறு நாளும் அவன் என்ன செய்கிறானோ என்று பார்த்தார். குடியானவன் எழுந்ததும் "ஹரி!" என்று ஒரு தடவை சொல்லிவிட்டுத் தன் வயலுக்குப் போய் நாள் முழுதும் தன் தொழிலில் கழித்துவிட்டு இரவில் ஒரு தடவை "ஹரி" என்று சொல்லி விட்டுத் தூங்கினான். இவ்வளவுதானா என்று எண்ணி நாரதர் விஷ்ணு லோகத்துக்குத் திரும்பிப் போனார்.

"உங்கள் பக்தனைப் பார்த்தேன். அவனிடத்தில் அதிக பக்தியிருப்பதாக எனக்குக் காணப்படவில்லை. வயலில் வேலை செய்வதிலேயே முழு நேரமும் செலுத்தி வருகிறான். என்னை வேடிக்கை செய்யவே, அவனிடம் அனுப்பினீர் போலிருக்கிறது!" என்றார் நாரதர்.

மகாவிஷ்ணு, "நாரதரே! இந்தாரும், இந்தக் கிண்ணத்தை வாங்கிக் கொள்ளும்!" என்றார். பகவான் கொடுத்த எண்ணெய்க் கிண்ணத்தை முனிவர் வாங்கிக் கொண்டார்.

"இதில் எண்ணெய் வழிய வழிய இருக்கிறது. ஜாக்கிரதை! இதை எடுத்துக் கொண்டு போய், பூலோகத்தை ஒரு சுற்றுச் சுற்றி விட்டு வாரும். ஒரு துளி எண்ணெயும் கீழே சிந்தாமல் பார்த்துக் கொண்டு சுற்றி விட்டு வாரும்" என்றார் திருமால்.

பகவான் சொல்லியபடியே நாரதர் செய்தார். ஒரு சொட்டு எண்ணெயும் கீழே சிந்தாமல் ஜாக்கிரதையாகப் பிடித்துக் கொண்டு வெற்றிகரமாகத் திரும்பி வந்தார்.

"திரும்பி வந்தீரா? சந்தோஷம். தயவுசெய்து சொல்லும். உம்முடைய பிரதக்ஷிணத்தில் எத்தனை தடவை என்னை ஸ்மரித்தீர்?" என்று கேட்டார் பகவான்.

"சுவாமி! நான் எப்படி உம்மை ஸ்மரிக்க முடியும்? கொஞ்சமும் சிந்திப் போகாமல் இந்த எண்ணெய்க் கிண்ணத்தை ஏந்திக் கொண்டல்லவா சுற்றி வரும்படி சொன்னீர்? அது எனக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது!" என்றார் நாரதர்.

"முனிவரே! இந்த எண்ணெய்க் கிண்ணம் உம்முடைய சிந்தனை முழுவதையும் கவர்ந்து விட்டதால் நீர் என்னை ஸ்மரிக்க முடியாத நிலையில் இருந்தீரல்லவா? உம்மைப் போன்ற



ஞானிக்கே இப்படியானால் அந்த ஏழைக் குடியானவன் கஷ்டத்தை யோசித்துப் பாரும். குடும்பத்தின் பாரத்தைச் சுமந்து கொண்டு அவன் தினமும் இரண்டு முறை என் பெயரைச் சொல்கிறான் அல்லவா? அவன் பக்தியின் சிறப்பு உமக்கு இப்போது தெரியவில்லையா?" என்று பகவான் கேட்க நாரதர் வெட்கமடைந்தார்.

• • •

ஆண் பெண் கவர்ச்சி வேகத்தில் மனம் சிக்கிக் கொண்டலைந்தால் அல்லது வேறு காமப் பொருள்களின் பேரில் ஆசையுண்டானால் அதைத் தடுத்துக் கொண்டு வேறு நல்ல கருத்துக்களில் மனதைச் செலுத்த வேண்டும். இந்த முயற்சி பயன் படாமல் போனாலும் போகும். அப்போது பகவானை வேண்டிக் கொண்டு, அவனை ஒரு நண்பனாகவோ, அல்லது அப்பனாகவோ, அல்லது தாயாகவோ பாவித்து அவன் நாமங்களைச் சொல்லிப் பாவத்தி லின்று காப்பாற்றும்படி வேண்டிக் கொள்ள வேண்டும். தேவியை மனதின் முன்னால் நிறுத்திக் கொண்டு தாயை வணங்குவதுபோல் வணங்குவாயாக. 'ராமா, வாசுதேவா, அப்பனே, கோவிந்தா' என்று ஜபிப்பது மிகவும் உதவியா யிருக்கும்.

சித்த மலத்தைக் கழுவுவதற்கு, ஹரி நாமங்கள் சஞ்சீவி மருந்தைப் போல் உதவும்.

• • •

"ஆண்டவனுடைய நாமங்களைச் சொல்வதில் நான் சந்தோஷங் காணவில்லையே!" என்று ஒருவர் கேட்க பரம ஹம்ஸர் சொன்னதாவது:

"அப்பனே! பகவானை வேண்டிக் கொள்! 'உன் நாமங்களை ஜபிப்பதில் எனக்கு ஆனந்தம் தர வேண்டும்' என்று அழுது அழுது கேட்பாயாக. உன் பிரார்த்தனையை ஆண்டவன் பூர்த்தி செய்வான். அம்மனே, அப்பனே, கிருஷ்ணா, ராமா, சீதா, கோபாலா, கோவிந்தா, மகாதேவா, ஈசுவரா, சிவனே,—இவற்றில் எந்தப் பெயரும் போதும். தினமும் அந்த நாமத்தைச் சொல்லிப் பார்! வரவர அதில் ருசி காண்பாய். நோயாளிக்கு முதலில் அன்னத்தில் ருசி இருக்காது. வரவர ருசி உண்டாகும். அதுவே நோய் தீருவதற்கு அடையாளம்.

பகவான் வேறு, அவன் பெயர் வேறு என்று அல்ல. ருக்மிணி தராசில் ஒரு துளசி இலையையும் அவன் பெயரையும் வைத்துக் கண்ணனுக்குச் சரி எடை போட்டு விட்டாள் அல்லவா? சைதன்ய தேவர் சொன்னபடி பகவானுடைய நாமம் சத்துள்ள ஒரு விதையைப் போலாகும். மாளிகையின் கம்பத்தின் மேலுள்ள விதை அங்கே பல ஆண்டுகள் சும்மா கிடக்கும். கட்டிடம் இடிந்து விழுந்து குட்டிச் சுவராகப் போய்விடும். அப்போது அந்த விதை கீழே மண்ணில் புதைந்து மழைத் தண்ணீர் விழுந்ததும் முளைத்துச் செடியாகி செழித்து வளர்ந்து காயும் கனியும் கொடுக்கும். பகவானுடைய நாமம் வீண்போகாது."

# படித்துப் பாருங்கள்!

## முத்துக் குவியல்

ராஜாஜி அவர்கள் எதை எழுதினாலும் பேசினாலும் அதில் ஓர் அபூர்வமான தெளிவு இருப்பதைக் காண்கிறோம். 'உள்ளத்தில் உண்மை ஒளி உண்டானால் வாக்கினிலும் தெளிவு' இருக்கத் தானே செய்யும்? அதோடு, ராஜாஜி கையாளும் உவமைகளையும் ஒரு முக்கிய காரணமாகக் கூறலாம்.

உதாரணமாக, இப்போது ருஷ்யாவுக்கும் அமெரிக்காவுக்குமிடையே பெரும் பிளவு இருப்பது எல்லோருக்கும் தெரியும். உலகத்தில் அமைதி நிலவ வேண்டுமானால் அவ்விரு நாடுகளுக்குமிடையே ஒற்றுமை ஏற்பட வேண்டியது மிகவும் அவசியம். இதை பெர்ட்ராண்ட் ரஸ்ஸல், ஐன்ஸ்டன், ஹக்ஸ்லி போன்ற பல பேராசிரியர்கள் பல முறை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். இதே விஷயத்தைப் பற்றி ராஜாஜி கூறுவதையும் கேளுங்கள் :

"எண்ணெய்க்கும் காஸ்டிக் சோடா உப்புக்குமிடையே எவ்வளவோ வேற்றுமை இருக்கிறது. எண்ணெய் வழவழப்பாகவும் அசுத்தமாகவும் இருக்கிறது. காஸ்டிக் ஸோடா உப்பு உடம்பில் பட்டால் எரியும்; உடம்பு புண்ணாகிவிடும். ஆனால் இந்த இரண்டு பொருள்களையும் நாம் ஒன்றாகச் சேர்க்கும் போது நமக்கு நல்ல சோப்பு கிடைக்கிறது. ருஷ்ய காஸ்டிக் சோடா உப்பும் அமெரிக்க எண்ணெயும் என்றாவது ஒரு நாள் ஒன்றாகக் கலந்து உலகத்துக்கு ஒரு நல்ல சோப்பை வழங்கு மென்று நாம் நம்புவோமாக."

விஷயம் எவ்வளவு தெளிவாகி விட்டது! எவ்வளவு எளிதாகி விட்டது! இதை மொழி பெயர்த்து ட்ருமனிடமும் ஸ்டாலினிடமும் கூறினால், அவர்கள் மிக்க ஆச்சரியமடைந்து, "ஓ, சமாதானம் என்பது இவ்வளவு சுலபமானதா? இது எங்களுக்கு இதுவரை தெரியாமல் போச்சே!" என்று உடனே மேற்படி 'சோப்'பை அளிக்க முயற்சித்தாலும் முயற்சிக்கலாம்!

இதே மாதிரி விஞ்ஞானம், கல்வி, வேதாந்தம் முதலிய ஒவ்வொரு துறையிலும் உள்ள படு சிக்கலான விஷயங்கள் ராஜாஜியின் உவமைகள் மூலம் சிக்கல் அறுபட்டுத் தெளிவடைகின்றன. உதாரணமாக, மரணத்துக்கு அஞ்ச வேண்டியதில்லை யென்று கீதை முதலிய வேதாந்த நூல்கள் கூறுகின்றன. ராஜாஜி இதைப் பற்றிக் கூறுவதைக் கேளுங்கள் :

"மரணம் என்பது கரும்பலகையில் எழுதியதை அழித்து விடுவது போன்றதன்று. கணக்குப் புத்தகத்தில் ஒரு பக்கத்தின் இறுதியில் காணும் வரவு செலவு பாக்கியை அடுத்த பக்கத்தில் எழுதிக் கணக்கைத் தொடர்ந்து பார்ப்பது போன்றதே யாகும். ஆகையால், நாம் இறப்பதாகத் தோன்றினாலும் ஒரு நாளும் இறப்பதில்லை."

எல்லோரும் கண்டு பயந்து நடுநடுங்கக் கூடிய விஷயம், ராஜாஜியின் உவமை மூலம் எவ்வளவு எளிய விஷயமாகி விடுகிறது!

பேச்சிலும் எழுத்திலும் ராஜாஜி அவ்வப் போது கூறிய பல அருமையான உவமைகளைத் தொகுத்து தமிழ்ப்பண்ணைக் காரர்கள் கொஞ்ச காலத்துக்கு முன்பு "ராஜாஜி உவமைகள்" என்ற பெயரில் ஒரு புத்தகம் வெளியிட்டார்கள். அந்தப் புத்தகத்தில் சேர்க்கப்படாத வேறு பல சிறந்த உவமைகளைத் தொகுத்து, "முத்துக் குவியல்" என்ற பெயரில் இப்போது மற்றொரு புத்தகத்தை வெளியிட்டிருக்கிறார்கள்.

முத்துக் குவியல்!—பொருத்தமான பெயர் தான். ஒவ்வொரு உவமையும் ஒரு முத்துக்கு ஈடாகும். புத்தகம் வழக்கம்போல மிக்க அழகான முறையில் வெளி வந்திருக்கிறது. விலை ரூ. 1–8–0 பிரசுரம் : தமிழ்ப்பண்ணை லிமிடெட், தியாகராய நகரம், சென்னை.

## தென் குரல்

திருவாங்கூர்த் தமிழர்களின் நன்மைக்காக நாகர்கோவிலிலிருந்து இந்தப் பத்திரிகை ஆரம்பமாகியிருக்கிறது. திருவாங்கூர்த் தமிழர்களின் குறைகள், ஏக்கம் இவை யாவும் நம் தமிழகத்தின் செவியில் நேரே விழுவதற்கு இந்தத் தனிக்குரல் பெரிதும் பயன்படும். முதல் மகாயுத்தத்தின் போது ஜெர்மனியில் இந்திய விடுதலை இயக்கத்தின் தலைவராக இருந்த டாக்டர் செண்பகராமன் பிள்ளையைப் பற்றி ஸ்ரீ எஸ். நத்தானியல் எழுதி யிருக்கும் கட்டுரை ரசமாக இருக்கிறது. ஸ்ரீ நேசமணி போன்ற வேறு பல அறிஞர்களுடைய கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன. இது ஒரு வாரப் பத்திரிகை. விலை அணா 2. வருஷ சந்தா ரூ. 6. ஆசிரியர்கள் ; எ. குஞ்ஞன் நாடார்; சி. குழந்தைசாமி. விலாசம் ; "தென் குரல்" காரியாலயம், நாகர்கோயில், திருவாங்கூர் சமஸ்தானம்.

பாப்பா மலர்

# அதிசயப் பிரயாணம்



## 2. பாலா எங்கே?

சைக்கிள் தானாகவே நகர்ந்ததைக் கண்ட பாலா திடுக்கிட்டான். ஓடும் சைக்கிளில் எப்படி ஏறிக் கொள்ளுவது என்று கொஞ்சம் யோசித்தான்.

பின்னாலேயே தன் சைக்கிளில் வந்து கொண்டிருந்த முத்து "பாலா, ஏறிக் கொள், ஏறிக் கொள்!" என்று கத்தினான்; பாலாவும் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு சைக்கிளில் 'ஜம்' என்று தாவி உட்கார்ந்தான்.

கொஞ்சம் கொஞ்சமாக, பாலாவின் சைக்கிள் முத்துவின் சைக்கிளைவிட வேகமாகப் போக ஆரம்பித்தது. முத்துவும் தன் சைக்கிளை வேகமாக விட்டான்.

இரண்டு பேருடைய சைக்கிள்களும் மைதானத்துக்கு வந்ததோ இல்லையோ, முத்துவின் சைக்கிள் கொஞ்சம் கொஞ்சமாகப் பின் தங்கத் தொடங்கியது. பாலாவின் சைக்கிள் ரொம்ப வேகமாக முன்னேறும்போது முத்துவால் அதைத் தொடர முடியவில்லை.

பாலாவுக்கு ரொம்பப் பயமாய்ப் போய் விட்டது. அவன் உடம்பு பயத்தினால் வெடவெட என்று நடுங்கியது.

"பாலா, அந்தப் பிரம்பைக் கீழே போட்டு விடு! அது மந்திரப் பிரம்பு!" என்று முத்து பலமாகக் கத்தினான்.

பாலா ஆன மட்டும் முயன்று அந்தப்பிரம்பைக் கீழே எறிந்து விடப் பார்த்தான். அதுதான் முடியவில்லை. மந்திரப் பிரம்பாதலால் அது அவனுடைய உதவியில்லாமலே சைக்கிளில் தொற்றிக் கொண்டு வந்தது. அவன் தள்ளினாலும் அது கீழே விழுகிற வழியாயில்லை.

பாலாவின் சைக்கிள் போகும் வேகத்தைக் கண்டு முத்து நடுங்கிப் போய் விட்டான்.

"பாலா, பாலா! என்னால் இதைவிட வேகமாக சைக்கிள் விட முடியாது! வேகத்தைக் குறைத்துக் கொள்! வேகத்தைக் குறைத்துக் கொள்!" என்று கதறினான் முத்து, பாவம்!

"முத்து! நான் சைக்கிளை வேகமாக விடவில்லை. அது தானாகவே ரொம்ப வேகமாகப் போகிறது!" என்று பாலா தன் கீச்சுக் குரலில் தன்னால் முடிந்த மட்டும் கத்தினான்.

வேகமாக ஓடிக் கொண்டிருக்கும் மெயில் வண்டியிலிருந்து யாராவது ஏதாவது சொன்னால் பிளாட்பாரத்தில் இருப்பவர்களுக்குக் காது கேட்குமா? அதைப் போல்தான் ஆகிவிட்டன, பாலா ஓடிக்கொண்டே சொன்ன வார்த்தைகள்.

முத்துவுக்குக் கால் ரொம்பவும் வலிக்க ஆரம்பித்தது. மேலும் மேலும் அவனால் சைக்கிளை விட்டுக்கொண்டே போக முடியவில்லை. மிகவும் களைத்துப் போய் அவனுடைய கால்கள் தாமாகவே ஓய்ந்து 'பெடல்' பண்ணுவதை



நிறுத்தின; கொஞ்ச நேரத்துக்கெல்லாம் முத்துவின் சைக்கிளும் தானுகவே நின்றுவிட்டது.

இதற்குள் பாலாவின் சைக்கிள் வெகு தூரம் போய், நீல வானத்தில் ஒரு சின்னப் புள்ளி மாதிரி ஆகி, அப்புறம் அதுவும் மறைந்து விட்டது.

பாலா போன திசையையே பார்த்துக்கொண்டு நின்ற முத்து எத்தனை நேரம் அப்படியே நின்று கொண்டிருந்தானே, அவனுக்கே தெரியாது. முத்துவுக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. பாலாவை எப்படிக் கண்டு பிடித்து வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போவது என்ற கவலை அவனுக்குப் பெரிதா யிருந்தது. பாலாவை விட்டுவிட்டு வீட்டுக்குப் போவது என்பதை அவனுல் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை.

"நானும் பாலாவும் விளையாடப் போனேம். அப்பொழுது பாலா மாத்திரம் என்னை விட்டு விட்டு எங்கேயோ போய்விட்டாள்!" என்று தன் அம்மாவிடத்திலும் பாலாவின் அம்மாவிடத்திலும் எப்படிப் போய்ச் சொல்லுவது? அவர்கள் எல்லாரும் இந்தச் செய்தியைக் கேட்டால் எவ்வளவு வருத்தப்படுவார்கள்?

"கூடாது. எப்படியும் பாலாவைக் கண்டு பிடித்து வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்துவிட வேண்டும்!" என்று திடமாகத் தீர்மானம் செய்து கொண்டான், முத்து. உடனே தன் மூன்று சக்கர சைக்கிளில் ஏறிக் கொண்டு மறுபடியும் தன் பிரயாணத்தைத் தொடங்கினுன்.

கீழ்த் திசையில் கிளம்பிய சூரியன் கொஞ்சம் கொஞ்சமாக நடுவானத்துக்கு வந்து கொண்டிருந்தான். வர வர வெய்யிலின் தாபம் அதிகமாகிக் கொண்டிருந்தது. முத்துவுக்கு மேலே பிரயாணம் செய்வது மிகவும் சிரமமாகத் தோன்றியது. பாலாவைக் காணவேண்டும் என்னும் ஒரே ஆவல் காரணமாகத்தான் அவனுல் இத்தனை தூரம் வர முடிந்தது. இல்லாவிட்டால் அவன் இத்தனை தூரம் வந்திருக்க முடியாது.

முத்து இன்னும் கொஞ்ச தூரம் போனதும் ஒரு பெரிய நதி தோன்றியது. கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் ஒரே ஜல மயமாகக் காட்சி அளித்த அந்த நதியைப் பார்த்ததும், பாலாவைப் பிரிந்து மன வருத்தத்தோடு இருக்கும் அந்த நிலைமையிலும் கூட, முத்துவுக்கு ரொம்ப உற்சாகமா யிருந்தது.

மூன்பு ஒரு சமயம் முத்து சென்னைப் பட்டணத்தில் இருந்த அவன் மாமா வீட்டுக்குப் போயிருந்தான். அப்பொழுது அவனுடைய மாமா அவனைச் சமுத்திரத்துக்கு அழைத்துக்கொண்டு போனுர். இந்த நதியைப் பார்த்ததும் முத்துவுக்குச் சமுத்திரத்தின் நினைவு தான் வந்தது.

ஆனல் இந்த நினைவு ஒரு நிமிஷம் தான் இருந்தது. அப்புறம் முத்துவுக்கு பாலாவின் ஞாபகம் வந்து விட்டது. சுழித்துக்கொண்டும் குதி போட்டுக் கொண்டும் வேகமாக ஓடிக் கொண்டிருந்த நதியைப் பார்த்தவுடன் முத்துவுக்கு பாலா அதை எப்படித் தாண்டிப் போயிருப்பாள் என்று ஒரே பயம் உண்டாகிவிட்டது; உடனே 'ஹோ' வென்று அழுது விட்டான்.

"பாலா எங்கே போயிருப்பாள்?"

இந்தக் கேள்வியை முத்து பல தடவை தன்னையே கேட்டுக் கொண்டான். பதில்தான் கிடைக்கவில்லை.

அவனுக்குத்தான் தெரியவில்லையே! பதில் எப்படிக் கிடைக்கும்?





























அந்த ஆற்றங்கரையின் அழகான மணலில் சில பையன்கள் விளையாடிக் கொண்டிருந்தனர்.

"என் சினேகிதி பாலா இந்த வழியாக மூன்று சக்கர சைக்கிளில் போனாளா?" என்று முத்து அவர்களைப் பார்த்துக் கேட்டான்.

"உன் சினேகிதி பாலாதான் என்று எங்களுக்கு நிச்சயமாய்த் தெரியாது. ஒரு சின்னப் பெண், நீலப் பாவாடையும் மஞ்சள் பட்டுச் சட்டையும் அணிந்து கொண்டிருந்தாள். மூன்று சக்கர சைக்கிள் வண்டியில் வாயுவேகமாக ஆற்றங்கரைக்கு வந்தாள். ஒரு விநாடி கூட இங்கே தாமதிக்கவில்லை. அவள் வந்தாளோ இல்லையோ, ஒரு அழகான படகு வந்து அவளையும் அவள் சைக்கிளையும் ஏற்றிக்கொண்டு, ஆற்றை நேராகக் குறுக்கே கடந்து போய் வெகு சீக்கிரத்தில் மறைந்து விட்டது. அந்தப் பெண்ணின் கையில் ஒரு சின்னப் பிரம்பு இருந்தது. அவள் தான் உன் சினேகிதி பாலாவாக இருக்க வேண்டும்!" என்று அந்தப் பையன்களில் ஒருவன் சொன்னான்.

உடனே முத்து, "அவள் தான் என் அருமை பாலா! சந்தேகமே இல்லை. அந்தப் பாழாய்ப் போன மந்திரப் பிரம்பை அவள் மைதானத்தில் கண்டு எடுத்து வந்ததனால்தான் இத்தனை சங்கடங்களும் வந்தன! அந்தப் படகு அவளை எங்கே கொண்டுபோய் விட்டதோ! ஒருவேளை தண்ணீரில் முழுகிப் போயிருப்பாளோ!" என்று கண்களில் நீர் பொங்கக் கதறி விட்டான்.

ஆற்றங்கரை ஓரமாக வளர்ந்திருந்த பெரிய மாமரத்தில் மைனாவும் கிளியும் இன்னும் பல பறவைகளும் கொஞ்சிக் கொஞ்சிப் பேசிக் கொண்டிருந்தன.

மரத்திலிருந்த அற்புதமான மாம்பழங்களை மேலேயிருந்த

பறவைகள் மூக்கால் கொத்திக் கீழே போட்டன. முத்துவுக்கு நல்ல பசி. ஆனால் பாலாவை விட்டுத் தான் மாத்திரம் பழம் தின்னப் பிடிக்கவில்லை அவனுக்கு.

அந்தப் பறவைகளைப் பார்த்து, முத்து, "பாலா ஆற்றில் மூழ்கிப் போயிருப்பானோ!" என்று கேட்டான்.

அதற்கு மைனா "இல்லை, இல்லை! நான் அப்படி நினைக்க வில்லை!" என்றது.

"பாலா ஆற்றில் மூழ்கி விட்டானோ!" என்று கிளியைப் பார்த்துக் கேட்டான் முத்து.

"இல்லை, இல்லை, நான் அப்படி நினைக்கவில்லை!" என்றது கிளி.

முத்துவுக்கு ஒன்றும் புரியவில்லை. அங்கேயே உட்கார்ந்து கொஞ்ச நேரம் யோசனை செய்தான். 'பாலா ஆற்றைக் கடந்து போனதைப் பார்த்ததாகப் பையன்கள் சொல்லுகிறார்கள். அவன் அந்தப் பிரம்பையும் எறியவில்லை. மந்திரப் பிரம்பு அவனைத் தன் மந்திர சக்தியால் எங்கேயோ இழுத்துக் கொண்டு போயிருக்கிறது. பாலா ஏன் பிரம்பைக் கீழே போட வில்லை? அவனை எங்கே தேடுவது? எப்படித் தேடுவது? அவன் போன இடத்தை எப்படிக் கண்டு பிடிப்பது? என்று பலப் பல விதமாக அவன் மனம் யோசித்தது.

இந்தப் பலமான யோசனைகளுக்கு மத்தியில் முத்துவின் மனம் "பாலா எங்கே?" என்று கேட்டுக்கொண்டே யிருந்தது. (தொடரும்)

ஓர் அர்ச்சகர் மூன்று கோவில்களில் பூஜை செய்கிறார். அவர் நாள்தோறும் சில பூக்களை எடுத்துக்கொண்டு முதல் கோவிலுக்குப் போவார். அங்கு சில பூக்களை அர்ச்சனை செய்து விட்டு மீதியுள்ள பூக்கள் மீது சிறிது தண்ணீர் தெளிப்பார். உடனே அது இரண்டு மடங்காகும். அவற்றை எடுத்துக் கொண்டு அடுத்த கோவிலுக்குப் போவார். அங்கு முதல் கோவிலில் அர்ச்சனை செய்த அளவு பூவை அர்ச்சனை செய்வார். பிறகு மீந்திருக்கும் பூக்கள் மீது முன்போலத் தண்ணீர் தெளிப்பார். அது இரண்டு மடங்காகி விடும். அவற்றை எடுத்துக் கொண்டு மூன்றாவது கோவிலுக்குப் போய் முதல் இரண்டு கோவில்களிலும் அர்ச்சனை செய்த அளவு பூக்களை அங்கும் அர்ச்சனை செய்கிறார். பூ எதுவும் மீஞ்சாமல் சரியாய்ப் போகிறது. அப்படியானால் அவர் முதலில் கொண்டு போன பூக்கள் எத்தனை?

# அதற்கும் போட்டி

இரண்டாவது உலக மகாயுத்தத்தின் போது இத்தாலியில் எல்லா உணவுப் பொருள்களுக்கும் திண்டாட்டமாகி விட்டது. ஒவ்வொரு பொருளையும் 'க்யூ'வில்தான் நின்று வாங்க வேண்டியதாக இருந்தது. இதனால் முசோலினியின் ஆட்சியில் பலருக்கு வெறுப்பு உண்டாயிற்று.

ஒரு நாள் ஒரு தொழிலாளி தன் மனைவியை நோக்கி, "நான் சீக்கிரம் வேலைக்குப் போக வேண்டும். ரொட்டி கொண்டு வா!" என்றான்.

"வெண்ணெய் இல்லை. வேலைக்காரி கடைக்குப் போய் ஒரு மணி நேரத்துக்கு மேலாகிறது. இன்னும் 'க்யூ'விலேயே நிற்கிறாள் போலிருக்கிறது" என்றாள் அவள்.



அவள் சொன்னதைக் கேட்டதும் அந்தத் தொழிலாளிக்கு அளவு கடந்த கோபம் உண்டாயிற்று.

"அவனைத் தொலைத்து விட்டு மறு காரியம் பார்க்கிறேன்" என்று கையில் ஒரு துப்பாக்கியை எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

"எங்கே? யாரைத் தொலைக்கப் போகிறீர்கள்?" என்று கேட்டாள் அவள்.

"முசோலினியைத்தான். வேறு யாரை?" என்றான் அவன்.

சற்று நேரம் கழித்து அவன் திரும்பி வந்தான்.

"என்ன, அவனைச் சுட்டு விட்டீர்களா?" என்று கேட்டாள் அவள்.

"இல்லை, அவனைச் சுடுவதற்கும் அங்கே ஒரு நீண்ட 'க்யூ' காத்துக் கொண்டிருக்கிறது!" என்றான் அந்தத் தொழிலாளி.




முப்பத்தைந்தாம் அத்தியாயம்

## தியாக சிகரம்

ரதத்தைப் பூட்டி வாசலில் கொண்டு வந்து நிறுத்துமாறு காவலாளனுக்குக் கட்டளையிட்ட பின்னரும் கூடப் பீஜகுப்தனுடைய சிந்தனை கலையவில்லை. எழுந்து மாற்று உடை உடுத்திக்கொண்டு வெளியே புறப்பட வேண்டுமே என்ற நினைவுகூட இல்லாமல் பீஜகுப்தன் மறுபடியும் தீவிரமான சிந்தனையில் ஆழ்ந்து விட்டான்.

“ஆமாம், இந்தச் சுவேதாங்கன் இருக்கிறானே, இவனுக்குத்தான் என்ன துணிச்சல்? யசோதராவிடம் நான் என் உள்ளத்தைப் பறி கொடுத்து விட்டேன் என்பது இவனுக்குத் தெரியாதா? எல்லாம் தெரிந்திருந்தும் இவன் யசோதராவைக் காதலிக்கத் தொடங்கி விட்டானே! யசோதராவைக் காதலிக்க இவனுக்கு எது உரிமை?” என்று எண்ணினான். அந்த எண்ணம் எழுந்தது தான் தாமதம்; அவனுக்கு உடல் எல்லாம் பற்றி எரியத் தொடங்கிவிட்டது. பல்லை ‘நறநற’ வென்று கடித்துக் கொண்டான். அவனுக்குத் தொண்டை உலர்ந்து விட்டது. நாக்கு வறண்டுவிட்டது. பக்கத்திலிருந்த கூஜாவுக் கருகில் சென்று ஒரு கோப்பை குளிர்ந்த நீர் எடுத்துப் பருகினான். அப்புறம் தான் அவனுக்குப் பரபரப்புச் சற்று அடங்கியது; உடல் எரிச்சலும் சற்றுத் தணிந்தது. கோபாவேசத்தில் இருந்த மூளையும் சற்றுக் குளிர்ந்தது. சற்று நிதான புத்தியுடன் சிந்தித்துப் பார்த்தபொழுது அவனுக்கு, “சுவேதாங்கன் மீது என்ன தவறு? அவன் காதலிப்பதும் இயல்புதானே? அவனும் வயது வந்த வாலிபன். அவனுடைய உடலும் ரத்த மாமிசத்தால் ஆனது தான். எல்லோருக்கும் இயல்பாக உள்ள இயற்கை உணர்ச்சிகள் அவனிடமும் இருக்கத் தானே செய்யும்? அப்படியிருக்கும் பொழுது அவனைக் கோபித்துக் கொள்ளுவதனாலோ கடிந்து கொள்ளுவதனாலோ என்ன பயன்? அது மட்டும் அல்ல; நான் சித்திரலேகாவின் மீது கொண்டிருந்த காதல் கருகி மடிந்து விட்டது என்பது அவனுக்கு எங்கே தெரிந்திருக்கப் போகிறது? ஆத்திரப்பட்டுக் கொண்டு நாம் வார்த்தைகளை அள்ளி வீசி விட்டோமே!” என்று தோன்றியது. அதை எண்ணி அவன் மனம் புழுங்கினான்.

ஆனால் அடுத்த கணம் பீஜகுப்தனுடைய நினைவு அலைகள் புரண்டு கொடுத்தன. “என்ன? நான் சித்திரலேகாவிடம் கொண்டிருந்த காதல் கருகி மடிந்துவிட்டதா? அது ஏன்? ‘ஏன்?’ என்ற கேள்வி வேறு? நான் மிகவும் பலம் அற்றவன். ஒருத்தியைக் காதலித்து விட்டு இன்னொருத்தியைக் காதலிக்கத் துணிந்தேனே, இதிலிருந்தே நான் மிகவும் பலம் அற்றவன் என்பது விளங்கவில்லையா? ஆமாம், இந்தக் காதல் என்பது உண்மையிலேயே ஒரு நிலையற்ற பொருள் தானோ?......”

இதைப் பற்றி பீஜகுப்தன் யோசித்தான், யோசித்தான்; அப்படி யோசித்தான். கடைசியில் அவனுடைய மூளை ஓரேயடியாகக் குழம்பிப் போய்விட்டது. அவனுடைய உள்ளுணர்ச்சியும் அநுபவமும் சேர்ந்து, ‘காதல் நிலையானதுதான், நிரந்தரமானதுதான்’ என்பதை வலியுறுத்தின. ஆயினும் அவன் அந்த முடிவை ஏற்றுக் கொள்ளத் தயாராயில்லை.

“இல்லை, அப்படியானால் காதல் நிலையற்றதில்லையோ? நிரந்தரமானது தானோ? நிரந்தரமானது தான் என்றால் நான் இம்மாதிரியெல்லாம் செய்யத் துணிவானேன்? —என்ன? சித்திரலேகாவைப் பழிவாங்குவதற்காகவா?—இது என்ன கூத்து? சித்திரலேகாவுக்கும் எனக்கும் என்ன விரோதம்? அவளை நான் எதற்காகப் பழி வாங்கவேண்டும்? இல்லை, இல்லை! அப்படியெல்லாம் அவளைப் பழி வாங்கவேண்டும் என்று எனக்கு எண்ணமே கிடையாது!”

பீஜகுப்தன் தனக்குத் தானே இவ்வாறெல்லாம் முணுமுணுத்துக் கொண்டான். உண்மையிலேயே அவனுடைய உள்ளத்தில் சித்திரலேகாவைப் பொறுத்தவரை எவ்விதமான கெட்ட அபிப்பிராயமும் கிடையாது. அம்மாதிரி கெட்ட அபிப்பிராயம் அவன் உள்ளத்தில் அதுவரை எழுந்ததும் இல்லை.

ரதம் பூட்டி வாசலில் வந்து நின்றது. காவலாளன் உள்ளே பிரவேசித்து ரதம் வந்து வாசலில் நிற்கும் செய்தியைப் பீஜகுப்தனுக்குத் தெரிவித்தான். உடனே பீஜகுப்தன் அவசர அவசரமாக மாற்றுடை தரித்துக்கொண்டு வாசற்புறம் வந்து ரதத்தில் ஏறி யசோதராவின் மாளிகையை நோக்கிப் புறப்பட்டான். அப்பொழுதும் கூட அவனுடைய அந்தச் சிந்தனைச் சங்கிலி அறுகவில்லை.

“புலனடக்கம், புலனடக்கம் என்று சொல்கிறோமே, அதன் அர்த்தம் இது தானோ? தன்னலத்தை விட்டால் இந்த உலகத்தில் வேறு ஒன்றுமே கிடையாதா? இந்த உலகத்தில் தன்னலம்தான் பிரதானமானதா? அப்படியானால் மனிதனுக்கும் மிருகத்துக்கும் உள்ள வித்தியாசம் தான் என்ன? ஜீவராசிகள் அனைத்தும் தனக்கெனவேதான் உயிர் வாழ்கின்றன. ஒவ்வொரு மனிதனும் தன்னலத்தின் தூண்டுதல் காரணமாகத்தான் வேலை செய்கிறான். அப்படியானால் எனக்கும் உலகத்தில் உள்ள ஏனைய பிராணிகளுக்கும் உள்ள வித்தியாசம்தான் என்ன? யசோதராவை நான் மணந்து கொண்டால் அதன் முடிவு என்ன ஆகும்? ஒரு மனிதனின் வாழ்க்கை வீணாகிவிடும்; பாழாகிவிடும். அதுவும் யாருடைய வாழ்க்கை? எனது அன்பிற்கு அன்பானவனும், என் சகோதரனுக்குச் சமமானவனுமான சுவேதாங்கனுடைய வாழ்க்கையல்லவா பாழ்பட்டுவிடும்? அது மட்டுமா? நான் என் கொள்கைகளிலிருந்தும் வழுவினவனாக அல்லவா ஆகி விடுவேன்? இதெல்லாம் எக்கேடு கெண்டு மாறுலும் கெட்டுப் போகட்டும். என்றால் யசோதராவைக் காதலிக்கவாவது முடியுமா?

“இப்பொழுது நம் உள்ளத்தை ஏதோ ஒரு சுமை அழுத்துகிறது. யசோதராவைக் கல்யாணம் செய்து கொண்டுவிட்டால் அந்தச் சுமை நீங்கி விடுமோ என்று சபலம். உள்ளத்தை வாட்டும் அந்தச் சுமையைப் போக்கிக் கொள்வதற்காக, உள்ளத்தை வாட்டும் அந்தத் துயரத்தைத் துடைத்தெறிவதற்காக நாம் யசோதராவைக் கல்யாணம் செய்து கொள்ளுவதாகவே வைத்துக் கொள்ளுவோம். ‘அவளை நம்மால் காதலிக்க முடியுமா?’ என்பதுதான் தற்போதைய கேள்வி. ஒருவேளை வருங்காலத்தில்...? இல்லை, இல்லை! கல்யாணம் செய்து கொள்ளுவதற்கு எனக்கு எவ்விதமான உரிமையும் கிடையாது. பிறர் வாழ்க்கையை—அதுவும் சுவேதாங்கனுடைய வாழ்க்கையைத் துயரக்காடாக ஆக்க எனக்கு உரிமை கிடையாது; கிடையவே கிடையாது. நீர ஆலோசித்து ஆராய்ந்து பார்த்த பின்னர் தான், நான் போக வேண்டிய பாதையை நிர்ணயித்தேன். அடிக்கடி மனம் மாறுவது சரியல்ல. இனி எனக்கு வெற்றி கிடைத்





தாலும் சரி, அல்லது தோல்வியே கிடைத்தாலும் சரி,—இன்பம் கிட்டினாலும் சரி, துன்பமே கிட்டினாலும் சரி, நாம் வகுத்த வழியிலேயேதான் நாம் செல்ல வேண்டும். பிறருடைய இன்பத்துக்கு இடையூறாக நிற்பதோ, தன் சுகம் ஒன்றையே பெரிதாகக் கருதி அதை அடைந்தே தீருவது என்று பாடுபடுவதோ பேடித்தனம்; பயங்கொள்ளித்தனம். அது மட்டும் அல்ல; அதை மிகவும் அற்பத்தனம்; நீசத்தனம் என்றுதான் சொல்ல வேண்டும். நான் அப்படிச் செய்வதால் பிறருக்கு மட்டும் அல்ல; எனக்குமே அநீதி இழைத்துக் கொள்கிறேன்; கேடு தேடிக் கொள்கிறேன். சுகம் - துக்கம் இரண்டுமே நம் பக்கில் உண்டு. இரண்டும் வாழ்க்கையில் மிகவும் சகஜமாக நேரக்கூடியவை. ஆகவே இரண்டையும் தைரியமாக அநுபவிக்க வேண்டியது நம் கடமையாகும்”

இவ்வாறெல்லாம் வழி நெடுக பீஜகுப்தன் எண்ணமிட்டுக் கொண்டே சென்றான்.

ரதம் அதற்குள் மிருத்யுஞ்ஜயரின் மாளிகை வாசலிலே வந்து நின்றது. பீஜகுப்தன் தான் வந்திருக்கும் செய்தியை மிருத்யுஞ்ஜயருக்குச் சொல்லி அனுப்பினான். உடனே மிருத்யுஞ்ஜயர் எழுந்து வெளியே வந்தார். இருவரும் ஒருவரையொருவர் குசலப்பிரச்னம் விசாரித்துக் கொண்டனர். பிறகு மிருத்யுஞ்ஜயர், “பீஜகுப்தா! நீ என் வீடு தேடி வரும் சிரமத்தை ஏற்றுக் கொண்ட காரணம் என்னவோ?” என்று மிகவும் பரிவுடன் கேட்டார்.

பீஜகுப்தன் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்து விட்டு, “ஸ்வாமி! நான் தங்களிடம் தங்கள் திருக்குமாரியின் விவாக விஷயமாகப் பேச வந்திருக்கிறேன்” என்றான்.

மிருத்யுஞ்ஜயரின் முகத்திலே இலேசாகப் புன்முறுவல் ஒன்று படர்ந்தது. “அப்படியா? சந்தோஷம்!” என்று சொல்லித் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ளாமலே தெரிவித்துக் கொண்டார்.

பீஜகுப்தனுக்கு மிருதயஞ்ஜயர் சிரித்த சிரிப்பின் அர்த்தம் ஒருவாறு விளங்கி விட்டது. அவனும் பதிலுக்கு இலேசாகச் சிரித்தான். பிறகு, “ஸ்வாமி! நான் என்னைப்பற்றி ஒன்றும் சொல்லிக் கொள்ள வரவில்லை. நான் தான் என்னுடைய முடிவை ஏற்கெனவே தங்களுக்குத் தெரிவித்து விட்டேனே. தங்கள் திருக்குமாரி யசோதாரையைச் சுவேதாங்கனுக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்வதற்காகத்தான் நான் வந்திருக்கிறேன். சுவேதாங்கனும் நற்குலத்தில் உதித்தவன். நல்ல அழகன். நாகரிகம் வாய்ந்தவன். நல்ல பண்பாடு உள்ளவன். நன்றாகப் படித்தவன். ஆகவே அவன் சகல விதத்திலும் தங்கள் திருக்குமாரிக்குத் தகுந்த வரனாகவே இருப்பான். என்னைவிட அவன் எவ்வளவோ மடங்கு மேலானவனாகக்கூட இருக்கலாம் என்று சொன்னால் அது மிகையாகாது” என்றான்.

பீஜகுப்தனின் அந்த வார்த்தைகளைக் கேட்ட மிருத்யுஞ்ஜயருக்கு மிகவும் ஆச்சரியமாகப் போய் விட்டது. பீஜகுப்தன் தன்னுடைய - திருமணத்தைப் பற்றித்தான் பிரஸ்தாபிப்பான் என்று மிருத்யுஞ்ஜயர் எண்ணியிருந்தார். ஆனால் அதற்கு நேர் மாறாக அவன் சுவேதாங்கனைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவே, அவர் ஆச்சரிய மிகுதியினால் வாய் அடைத்துப் போய் உட்கார்ந்து விட்டார். சிறிது நேரத்துக்குப் பின்தான் அவருக்குத் தன் சுயநினைவு வந்தது. அவர் மெதுவான குரலில், “பீஜகுப்தா! நீ சொல்லுவது போலச் சுவேதாங்கன் தகுந்த வரன்தான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் சுவேதாங்கன் பணக்காரத் தந்தையின் பணக்காரப் புதல்வன் அல்லவே! அவன் மிகவும் ஏழை ஆயிற்றே! ஆகவே, நான் என் பெண்ணின் திருமண விஷயத்தில் சுவேதாங்கனைப் பற்றிச் சிந்திக்கக்கூட இயலாதவனாக இருக்கிறேன்” என்றார்.

அதைக்கேட்ட பீஜகுப்தனுக்கு ஓரே ஆச்சரியமாகப் போய் விட்டது. "ஆனால் ஸ்வாமி! தாங்களோ அளவற்ற ஐசுவரியத்துக்கு எஜமானராக இருக்கிறீர்கள். உங்களுக்குச் சொத்து விஷயத்தில் ஒரு விதமான குறைவும் கிடையாது. அதையும் தவிர, தங்களுக்கு யசோதாராவை விட்டால் வேறு குழந்தை குட்டிகளும் கிடையாது. அப்படியிருக்கும் பொழுது ......" என்று ஆரம்பித்தான்.

அதற்குள் மிருத்யுஞ்ஜயர் 'கல கல' வென்று நகைத்தார். ஆகவே, பீஜகுப்தன் மேலே ஒன்றும் சொல்ல முடியாமல் நடுவிலேயே நிறுத்தும்படி ஆகிவிட்டது. மிருத்யுஞ்ஜயர் பீஜகுப்தனைப் பார்த்து, "பீஜகுப்தா! என் சொத்து விஷயத்தில் என் பெண்ணுக்கு யாதொரு விதமான உரிமையோ பாத்தியதையோ கிடையாது. நான் சுவீகாரம் எடுத்துக் கொள்ளப்போகும் பையனுக்குத்தான் என் சொத்து விஷயத்தில் பாத்தியதை உண்டு. ஆமாம், பீஜகுப்தா! நீயே என் யசோதாராவைக் கல்யாணம் செய்துகொண்டு விடக் கூடாது?" என்று கேட்டார்.

"இல்லை, ஸ்வாமி! நான் கல்யாணமே செய்துகொள்ளப் போவதில்லை. சுவேதாங்கனுக்கு யசோதாராவைக் கல்யாணம் செய்து வைப்பது என்பது நடக்கவே நடக்காத காரியமா?" என்று மறுபடியும் கேட்டான் பீஜகுப்தன்.

மிருத்யுஞ்ஜயர் மிகவும் மெதுவாக, ஆனால் அழுத்தம் திருத்தமாக, "ஆமாம், பீஜகுப்தா! சுவேதாங்கன் யசோதாராவுக்குத் தகுந்த வரனாகவே இருந்தபொழுதிலும், நற்குலத்தில் உதித்தவனாகவே இருந்தபொழுதிலும், அவன் ஏழை. அவன் ஏழையாக இருக்கும்வரையில் என் பெண் யசோதாராவை அவனுக்குக் கல்யாணம் செய்து வைப்பது பற்றி என்னால் கனவிலும் நினைக்க முடியாது" என்று சொல்லி விட்டார்.

பீஜகுப்தன் சிறிது நேரம் வரை யோசனையில் ஆழ்ந்து விட்டான். அதற்குப் பின் அவன் தன் தலையை நிமிர்த்தி, "ஸ்வாமி! சுவேதாங்கனை நான் என் சுவீகாரப் புதல்வனாக ஆக்கிக்கொண்டு விடுகிறேன். அப்படி நான் அவனைச் சுவீகாரம் எடுத்துக்கொண்டு விட்டால், என் சொத்துக்கு அவன் பாத்தியஸ்தனாக ஆகிவிடுவான். அம்மாதிரி நிலையில் தங்களுக்கு யாதொருவிதமான ஆட்சேபணையும் இருப்பதற்கில்லையே!" என்று கேட்டான்.

"பீஜகுப்தா! அதெல்லாம் நடக்காத பேச்சு. இப்பொழுது உனக்கு என்ன அப்படி அதிக வயதாகிவிட்டது? இன்னும் கொஞ்ச நாட்கள் கழித்து, நீயே மனம் மாறிக் கல்யாணம் செய்து கொண்டுவிடலாம் அல்லவா? அந்தமாதிரி நிலைமை ஏற்பட்டுவிட்டால் உனக்குப் பிறக்கும் பிள்ளைதானே உன் சொத்துக்குப் பாத்தியஸ்தனாக ஆவான்?" என்றார் மிருத்யுஞ்ஜயர்.

"ஸ்வாமி! தாங்கள் சொல்லுவது மிகவும் நியாயமான வார்த்தை! நான் இப்பொழுது என்னமோ கல்யாணம் செய்து கொள்ள விரும்பவில்லை என்பது உண்மைதான். மனுஷ்ய புத்திதானே? இன்றைக்கு ஒன்று, நாளைக்கு ஒன்று என்று மாறிவிடவும் கூடும். ஆனால் என்ன இருந்தாலும் யசோதாராவுக்கும் சுவேதாங்கனுக்கும்தான் கல்யாணம் ஆகவேண்டும் என்று நான் விரும்புகிறேன். இந்தக் கல்யாணம் நடந்தால் இருவருமே சுகமாயிருப்பார்கள். ஆகவே இதன்பொருட்டு எவ்வளவு பெரிய தியாகத்தையும் நான் செய்யச் சித்தமாயிருக்கிறேன். — ஸ்வாமி! நான் என் சொத்து முழுவதையும் சுவேதாங்கனுக்குத் தானம் செய்து விடுகிறேன். அப்படிச் செய்து விட்டால் தங்களுக்குச் சம்மதந்தானே?" என்று கேட்டான் பீஜகுப்தன்.

அதைக் கேட்ட மிருத்யுஞ்ஜயருக்கு ஆகாயத்திலிருந்து அதப் பாதாளத்தை நோக்கி விழுவது போலிருந்தது. "பீஜகுப்தா! நீ என்ன செய்கிறாய் என்பது உனக்கே சரியாகத் தெரியவில்லை. வீணில் மனதை அலட்டிக் கொள்ளாதே! உன்

## ஞாயிறு விடுமுறை!









உலக சமாதானத்தை முன்னிட்டு மீண்டும் ஒரு தடவை அணுகுண்டு போட வேண்டிய நிலைமை ஏற்படுமானால் அதற்குச் சிறிதும் தயங்கமாட்டேன். —ட்ரூமன் (வாஷிங்டனில் பேசும்போது)

மனம் ஒரு நிலையில் இல்லை என்று தோன்றுகிறது!" என்றார்.

"ஸ்வாமி! தாங்கள் என்னைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். தங்கள் முன்னிலையில் என் சொத்து முழுவதையும் சபை தாங்களுக்குத் தானம் செய்துவிடுவதாகச் சொல்லிவிட்டேன். அதற்குத் தாங்களே சாட்சி. பித்ராசர் பதவியை மாற்றும் விஷயத்தில் மட்டும் மன்னருடைய அங்கீகாரம் வேண்டும். அது சம்பந்தமாகவும் இன்றைக்கே நான் சக்கரவர்த்தியைக் கண்டு பேசி ஆவன செய்துவிடுகிறேன். இனித் தங்களுக்கு எவ்விதமான ஆட்சேபணையும் இருக்கக் கூடாது" என்றான் பீஜகுப்தன்.

மிருத்யுஞ்ஜயர் அகல விரிந்த கண்களுடன் பீஜகுப்தனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார். "பீஜகுப்தா! நான் உனக்கு மறுபடியும் சந்தர்ப்பம் அளிக்கின்றேன். உன் வேண்டுகோளை நான் ஒப்புக் கொண்டு விட்டால் அப்புறம் நீ சொன்ன சொல் பிறழக்கூடாது. சற்று, யோசித்துச் சொல்" என்றார்.

"ஸ்வாமி! நான் சொன்னால் சொன்னதுதான். சொன்னதைச் சொன்னபடி செய்தே தீருவேன். நான் மனிதன். சொன்ன சொல் பிறழ எனக்குத் தெரியாது" என்று ஒவ்வொரு சொல்லையும் அழுத்தி ஆணித்தரமாகச் சொன்னான்.

"சரி! அப்படியானால் உன் வேண்டுகோளை ஏற்க எனக்குப் பரிபூரண சம்மதம்" என்றார் மிருத்யுஞ்ஜயர். அதைச் சொல்லும்பொழுது அவருடைய குரல் மிகவும் கம்மியது; நடுங்கியது.

பீஜகுப்தன் எழுந்தவாறே, "ஸ்வாமி! நான் போய்வருகிறேன். தான சாஸனத்துக்கும் பதவி மாற்றத்துக்கும் அரசரைக் கண்டு அநுமதி பெறுவதற்கான ஏற்பாடுகளை இன்றைக்கே செய்ய முயற்சிக்கிறேன். அதில் அதிகக் காலதாமதம் ஏற்படாது என்றும் எண்ணுகிறேன். ஆகவே தாங்கள் திருமணத் தேதியைக் குறிப்பிடச் சீக்கிரமே ஏற்பாடு செய்யுங்கள்" என்று சொன்னான்.

மிருத்யுஞ்ஜயர் எழுந்தவாறே, "பீஜகுப்தா! நானும் உலகத்தில் எத்தனையோ பேரைப் பார்த்திருக்கிறேன். உன்னைப் பார்த்தால், 'நீ மனிதன் அல்ல, தெய்வம்!' என்றுதான் சொல்லத் தோன்றுகிறது" என்றார். அப்பொழுது அவருடைய கண்களில் நீர் துளிர்த்து நின்றது.

மிருத்யுஞ்ஜயரிடத்தில் விடை பெற்றுக் கொண்டு வெளியே வந்த பீஜகுப்தன் தனக்

காகக் காத்துக் கொண்டிருந்த ரதத்தில் ஏறி உட்கார்ந்தான். உடனே ரதம் அவனுடைய மாளிகையை நோக்கிப் புறப்பட்டது. குதிரைகள் கன கம்பீரமாகத் தலையை ஆட்டிக் கொண்டு நடந்தன. அவற்றின் குளம்புச் சத்தம் மத்திம கதியில் ‘டடக், டடக்’ என்று காதில் விழுந்து கொண்டிருந்தது. அந்தக் குளம்புச் சத்தத்திலிருந்தே அவை ஓடவில்லை; பெரு நடையாகத் தான் நடந்து கொண்டிருந்தன என்பது நன்கு விளங்கியது.

சில நிமிஷத்துக்கெல்லாம் பீஜருப்தனுடைய உள்ளத்திலும் பற்பல எண்ணங்கள் பெருநடை போட ஆரம்பித்தன.

“ஆமாம், நான் கட்டாயம் யசோதாராவைக் கல்யாணம் செய்து கொள்ளத்தான் போகிறேன். என்னைத் தடுக்காதே! என்று சுவேதாங்கனிடம் சொன்னேனே! அப்பொழுது அவனுடைய மனம் எவ்வாறு இருந்திருக்கும்? சுவேதாங்கனோ வாலிபன். அதிக உலக அநுபவமும் இல்லாதவன். வாழ்வின்பத்தை நுகர்ந்து அறியாதவன். வாழ்வின்பம் என்றால் என்ன என்பது பற்றி பற்பல கற்பனைகள் புரிந்து இன்பக் கனவு கண்டு கொண்டிருப்பவன். யசோதாராவை மணந்து இன்ப வாழ்வு வாழ வேண்டும் என்றெல்லாம் மனக் கோட்டைகள் கட்டி வாழ்பவன். யசோதாராவை நான் தான் மணந்து கொள்ளப்போகிறேன் என்று சொன்னதும் அவனுடைய மனக் கோட்டைகள் எல்லாம் தகர்ந்து தவிடு பொடியாகப் போயிருக்காதா? நானே யசோதாராவைக் கல்யாணம் செய்து கொள்ளுவதாக இருந்தாலும் நயமாகச் சொல்லி அவனுடைய மனதை மாற்றியிருக்க வேண்டியது தானே நியாயம்? இப்படிக் கடிந்து அவனுடைய உள்ளத்தைப் புண்படுத்துவது நியாயமாகுமா?” என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் எழுந்தது.

ஆனால் அதற்கு அடுத்தாற் போலவே, “நியாயமில்லைதான். ஆனால் நம்மைச் சித்திரலேகா உதறித் தள்ளிவிட்டுப் போனதிலிருந்து தான் நம் வாழ்க்கை ஒரே துயரக் காடாக ஆகி விட்டதே! துயரக் காடாக இருக்கும் வாழ்க்கையை அழித்துச் செப்பனிட்டு இன்பச் சோலையாக ஆக்கிக் கொள்ள விரும்புவது தானே மனித இயல்பு? எந்த மனிதனாவது வேண்டுமென்றே துயரத்தை வரவழைத்துக் கொள்ளுவானா? அல்லது அதை மனமொப்பி ஏற்றுக் கொள்ளத்தான் செய்வானா? சுகத்தை நாடுவதுதான் மனிதனது சுபாவம். அப்படியிருக்கும் பொழுது நான் யசோதாராவை மணந்து கொள்ள விரும்பியதில் என்ன தவறு? நான் அவசரப்பட்டு மிருத்யுஞ்ஜயரிடத்தில் ஏதேதோ உளறிக் கொட்டினேனே, அதுதான் தவறு!” என்ற எண்ணம் எழுந்து அவனுடைய உள்ளத்தை மிகவும் வாட்டியது.

இம்மாதிரித் தீவிரச் சிந்தனையில் ஈடுபட்ட பீஜருப்தனுக்குத் திரும்பவும் மிருத்யுஞ்ஜயரிடம் சென்று, “நான் ஏதோ தவறிச் சொல்லி விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள். நானே யசோதாராவை மணந்து கொள்ளுகிறேன் என்று சொல்லிவிட்டால் என்ன?” என்றுகூடத் தோன்றியது.

ஆமாம், அப்படிச் சொல்லிவிட்டால் மிருத்யுஞ்ஜயருக்கு நாம் அளித்த வாக்குறுதி என்ன ஆவது? ‘நான் மனிதன். சொன்ன சொல் பிறழ மாட்டேன்’ என்று அவரிடம் வீராப்புப் பேசினேனே! அந்த வாக்குறுதியைக் காற்றில் பறக்க விட்டு விடுவதா? அப்படிக் காற்றில் பறக்க விட்டுவிட்டு, அப்புறம் நாமும் மனிதன் என்று சொல்லிக்கொண்டு வெளியில் புறப்படுவது எப்படி?—இந்த எண்ணம் எழுந்ததுதான் தாமதம்; அவனுடைய காதுகளில் யாரோ, “நீ மிகவும் முன்னேறி விட்டாய், இனிப் பின் திரும்பாதே!” என்று எச்சரிப்பதுபோலிருந்தது. உடனே அவன் தன் மனதைத் திடப்படுத்திக் கொண்டான். ஆனால் கொஞ்ச நேரம் செல்வதற்குள்ளாகவே அவனுக்கு, “நாம் சுவேதாங்கனைப் போய்விடு, போய்விடு! என் முன் நில்லாதே!” என்று பிடித்துத் தள்ளாத தோஷமாகக் கடிந்து கொண்டோமே, ஒரு வேளை அவன் நம் மாளிகையை விட்டே வெளியேறி யிருப்பானோ?” என்ற சந்தேகம் உதித்தது.

“சுவேதாங்கன் வெளியேறிப் போயிருந்தால் கூட பாதகமில்லை. காதலில் படு தோல்வியுற்றதன் காரணமாக, அவன் ஏதாவது ஒன்றுக்கொன்று செய்து கொண்டு விட்டால் ...?”

இந்த நினைவு எழுந்தது தான் தாமதம்; அவனுக்கு மனதை என்னவோ செய்தது. இனந் தெரியாத வேதனை அவனுடைய உள்ளத்தைப் பிய்த்துப் பிடுங்கித் தின்றது. உணர்ச்சி மேலிட்டு அவனுடைய உதடுகள் துடித்தன. குதிரையைத் தட்டி வெகு வேகமாக ஓட்டுமாறு அவன் தன் சாரதிக்கு உத்தரவிட்டான். (தொடரும்)

# பூங்காவனம்

(வசு)

"ஆமாக்கு அரையணா முல்லை மொக்கு" என்ற குரல் பிற்பகல் மணி மூன்று அடித்ததோ இல்லையோ, எங்கள் தெருக்கோடியில் கேட்க ஆரம்பிக்கும். இந்தக் குரலுக்குச் சொந்தக்காரி வேறு யாருமில்லை; எங்களூர் பூக்கடை புண்ணிய கோடியின் மகள் பூங்காவனம்தான்! ஒரு நாள் தவறாமல் எங்கள் வீட்டிற்கு வந்து பூ கொடுத்து விட்டுப் போவது அவள் வழக்கம். அத்துடன் ஒரு பத்து நிமிஷ நேரமாவது என்னுடன் அரட்டையடிக்காமல் போக மாட்டாள். 'போக மாட்டாள்' என்றா சொன்னேன்? இல்லை, இல்லை! நான்தான் அவளைப் போகும்படி விட மாட்டேன். உண்மையைச் சொல்லித்தான் ஆக வேண்டும். அவளிடம் தினந்தோறும் அந்த மாதிரி அரட்டை அடிக்கா விட்டால் எனக்கு என்னமோ மாதிரி இருக்கும். எப்பொழுதும் அவளுக்கு மலர்ந்த முகம்; சரளமான சுபாவம். இவற்றுடன் கூடச் சிரிக்கச் சிரிக்கப் பேசும் திறமையும் சேர்ந்து கொண்டால் பூங்காவனத்துடன் எனக்கு மட்டுமென்ன? யாருக்குத்தான் அளவளாவ ஆசையாக இருக்காது?

"ஆமாம் பூங்காவனம்! இந்த மாதிரி வாயாடியாக இருக்கிறாயே, நாளைக்குக் கலியாணம் ஆகி மாமியார் வீட்டுக்குப் போனால் எப்படி வாயை அடக்கிக்கொண்டிருப்பாய்?" என்றேன் ஒரு நாள்.

"மாமியார் இருக்கிற வீட்டுக்கு நான் ஏன் போறேன்?" என்றாள் பதிலுக்கு.

"அப்படியானால் கலியாணமே இல்லாமல் இருக்கப் போகிறாயா, என்ன?' என்று மறு கேள்வி போட்டேன்.

"பவானியம்மா, எனக்குப் புருசனா வரப் போறவர் வீட்டிலே எனக்கு மாமியாக்காரியும் கிடையாது; மாமனார்க்காரரும் கிடையாது. அந்த வீட்டிலே என் புருசன்தான் ராசா. நான்தான் ராணி" என்று சொல்லிவிட்டுக் கலகலவென்று சிரித்தாள்.

"அப்போ, உனக்குப் புருசன் யாரு என்று நிச்சயம் செய்து விட்டாய் என்று சொல்லு!" என்றேன்.

"ஏம்மா, துருவித் துருவிக் கேக்கிறியே?" என்றாள் பூங்காவனம்.

"சரி, நீ சொல்லா விட்டால் மனதிலேயே வைத்துக்கொள். உன் ரகசியம் உன்னுடனேயே இருக்கட்டும்" என்றேன், அவளுடைய வாயை மறுபடியும் தூண்ட வேண்டுமென்ற நோக்கத்துடன்.

"என் புருசன் ஒண்ணும் சீமையிலிருந்து வரப்போறதில்லையம்மா, எங்கப்பாரு கடையிலேதான் வேலை செய்யாரு. அவருக்கு அப்பனுமில்லை, ஆத்தாளுமில்லை. அஞ்சு வருசமா எங்கப்பாரு கடையிலே வேலை செஞ்சுகிட்டு இருக்காரு. அவருக்கு என் மேலே ஒரு கண்; எனக்கும் அவரு மேலே ஒரு கண்!" என்றாள் குதூகலத்துடன்.

"அடியே, நீ லேசுப்பட்டவளில்லை! இத்தனை நாளா உன்னைச் சாமானியமாக அல்லவா நினைத்துக் கொண்டிருந்தேன்!" என்றேன் நான் ஆச்சரியத்துடன்.

"இப்போ நான் எப்படின்னு தெரிஞ்சு போச்சல்லியா?" என்று சொல்லிக் கொண்டே, கண்களை அகல விரித்து ஒரு தரம் என்னைப் பார்த்து விட்டு, முகத்தில் புன்னகை தவழ பூக்கூடையை எடுத்துக் கொண்டு வெளியே போனாள்.

அடுத்த நாள் பிற்பகல் மூன்று மணிக்கு அவளுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்த எனக்கு ஏமாற்றம்தான் எஞ்சியது. அன்று பூங்காவனம் வரவில்லை. அவளுக்குப் பதிலாக அவள் தாயார் செல்லாத்தாள் பூ விற்பதற்காக வந்திருந்தாள். பூங்காவனம் வராத காரணமென்ன வென்று அவளிடம் கேட்டேன். அதற்கு அவள் கொடுத்த பதிலிலிருந்து பூங்காவனம் புஷ்பவதியாகி விட்டாளென்றும், அவர்கள் சமூக சம்பிரதாயப்படி கலியாணமாகும் வரை அவள் வெளியே அதிகமாகப் பழகக் கூடாதென்றும் தெரிந்து கொண்டேன். அதைத் தெரிந்து கொண்டு நான் சும்மா இருந்திருக்கலாமல்லவா? பேச்சோடு பேச்சாக, "ஏன் செல்லாத்தா, பூங்காவனம் கலியாணத்துக்கு நீ மருமகனைத் தேடி அலைய வேண்டாமாமே! உன் புருஷன் கடையிலேயே ஒரு பையன் இருக்கிறானாமே!" என்றேன்.

"ஏம்மா, இதெல்லாம் உனக்கு யாரு சொன்னது?" என்று கேட்டாள். அவள் குரலில் கோபம் கலந்திருந்தது.

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. என் பதிலுக்குக் காத்திராமல் வெளியே போய் விட்டாள் செல்லாத்தாள். அடுத்த நாள் எனக்கு அவளிடமிருந்து திடுக்கிடத்தக்க தகவல்கள் வந்தன. அன்று செல்லாத்தாள் வந்ததும் "பவானியம்மா, நீ சொன்னது சரியாப் போச்சு. வீட்டுக்குப் போனதும் பூங்காவனத்தைக் கண்டிச்சுக் கேட்டேன். அப்போதான் அவ சங்கதி அம்பலமாச்சு. வேலைக்காரப் பையன் மேலேதான் அவளுக்கு கோட்டமெல்லாம். இதை என் புருஷன்கிட்டே சொன்னேன். அவரு உடனே அவனைக் கூப்பிட்டுப் பூந்தோட்டத்திலே இருக்கிற குடிசையிலே இருந்துகிட்டுத் தோட்டத்தைக் கவனிக்கச் சொல்லிக் கடையை விட்டு அனுப்பிட்டாரு. அவனுக்குச் சாப்பாட்டுக்குக்கூடச் சோத்துக் கடையிலே ஏற்பாடு பண்ணிட்டாரு. இனிமே அவன் என் வீட்டுப் பக்கம்கூட எட்டிப் பார்க்க மாட்டான். பூங்காவனத்தையும் அதட்டி வெச்சிருக்காரு!" என்றாள்.

செல்லாத்தாள் சொன்ன தகவல் என் நெஞ்சைப் பிளந்தது. ஏதோ சொல்லுவார்களே, 'சும்மா இருக்கிற சங்கை ஊதிக் கெடுத்தானாம் ஆண்டி' என்றபடி பூங்காவனம் என்னிடம் அந்தரங்கமாகத் தெரிவித்த தகவலை அவளுக்கு அனர்த்தம் உண்டாகும் வகையில் வெளியிட்ட என்னுடைய அவசர புத்தியை எண்ணி அல்லல் பட்டேன்.

ஏற்கெனவே நிச்சயித்திருந்தபடி அடுத்த மாதம் நான் மனதால் வரித்த என்னுடைய அத்தானுக்கும் எனக்கும் விமரிசையாக விவாகம் நடந்து முடிந்தது. அதையடுத்து நான் சென்னையிலிருந்த என் புக்ககத்துக்குப் புறப்படுமுன் ஒரு நாள் செல்லாத்தாளிடம் சொல்லிப் பூங்காவனத்தை என் வீட்டிற்கு அழைத்துக்கொண்டு வரச் சொன்னேன். பூங்காவனம் வந்ததும் அவளிடம் தனியாக என்னுடைய செய்கைக்கு வருத்தம் தெரிவித்துவிட்டு, கடைசியாக எப்படியும் அவள் மனமொப்பிய கணவனைத்தான் அடைவாள் என்று தைரியம் சொன்னேன். "பவானி யம்மா, உன் வாக்கு பலிக்குதான்னு பார்ப்போம்" என்று ஏக்கம் நிறைந்த குரலில் பதில் சொல்லிவிட்டு, என்னிடமிருந்து அவள் விடை பெற்றுச் சென்றாள்.

## 2

சென்னைக்கு வந்து அங்கே வேலையாயிருந்த என் புருஷருடன் நான் நடத்திய வாழ்க்கை இன்பகரமாகவே கழிந்தது.





ஆனாலும் ஒவ்வொரு சமயம் நான் பூங்காவனத்திற்கு என்னுடைய அறியாமையினால் இழைத்த இன்னலை நினைக்கும் போதெல்லாம் மன அமைதி இழந்து அவதிப்படுவேன். சென்னைக்கு வந்து மூன்று வருஷங்கள் கழிந்தன. பெற்றோர்களைப் பார்ப்பதற்காக ஒரு நாள் சென்னையை விட்டுப் புறப்பட்டு அடுத்த நாள் காலை என் சொந்த ஊருக்கு வந்தேன். வந்ததும் வராததுமாக அம்மாவிடம் பூங்காவனத்தைப் பற்றி விசாரித்தேன். "அவளுக்கு என்ன குறைச்சல்? கலியாணமாகிச் சமீபத்தில் கையில் ஒரு பெண் குழந்தை கூட இருக்கிறது. அடிக்கடி உன்னைப் பற்றி விசாரிக்கத் தவறுவதில்லை. நீ இன்றைக்கோ நாளைக்கோ இங்கே வருவாய் என்று கூட நான் அவளிடம் தகவல் கொடுத்திருக்கிறேன்" என்றாள் அம்மா. "ஐயோ பாவம்! ஒருவேளை இஷ்டமில்லாத புருஷனுக்கு வாழ்க்கைப் பட்டுத் தலைவிதியை நொந்துகொண்டு காலம் கழிக்கிறாளோ என்னவோ!" என்று ஆயாசப் பட்டது என் மனம்.

ரயிலில் வந்த அலுப்பு. சாப்பாடானதும் வீட்டு முன் கட்டில் காற்றோட்டமாக இருந்த பகுதியில் படுத்துக்கொண்டு கண்ணயர்ந்தேன். தூக்கம் கலைந்து எழுந்திருக்கும் சமயம். தெருக் கோடியில் "ஆழாக்கு அரையணா முல்லை மொக்கு" என்ற குரல் கேட்டது. அது பூங்காவனத்தின் குரல்தான்; சந்தேகமில்லை. சடடென்று எழுந்திருந்து முகத்தைக் கழுவிக் கொண்டு வாசலுக்கு வந்தேன். நான் இருப்பதை வெகு தூரத்திலிருந்தே பார்த்த பூங்காவனம் முகத்தில் மகிழ்ச்சி பொங்க ஓட்டமும் நடையுமாக வந்து நான் இருக்குமிடத்தை அடைந்தாள். வந்ததும் வராததுமாக இடுப்பிலுள்ள பூக்கூடையை வீட்டு முன் கட்டில் வைத்துவிட்டு, "பவானியம்மா, எப்போ வந்தே? நீ, உன் புருசன் எல்லாம் சுகமா?" என்றாள்.

"இன்றுதான் வந்தேன். எல்லோரும் சௌக்கியம்தான். நீயும் உன் புருஷன், குழந்தை எல்லோரும் சௌக்கியம் தானே?" என்றேன் பதிலுக்கு.

"உன் புண்ணியத்திலே எல்லாரும் சுகம்தான், அம்மா! உன்னை நான் நினைக்காத நாளே கிடையாது. கடைசியா உன் வாக்குப் பலிக்கப் போச்சு" என்றாள் ஆனந்தம் ததும்பும் குரலில்.

பூங்காவனம் மேலும் தொடர்ந்து "அது பெரிய கதையம்மா!" என்றாள்.

"அப்படியா?" என்றேன் நான்.

பூங்காவனம் சொல்ல ஆரம்பித்தாள்:

"நீ கலியாணம் பண்ணிக்கிட்டுப் புருசன் வீட்டுக்குப் போன அப்புறம் எங்கப்பா என்னை ஏச்சுப்பிடப் பார்த்தாரு. அவரு என்ன செய்தாரு, தெரியுமா? — எங்க தோட்டத்துக்கு அடுத்தாப்போல ஒரு சம்பங்கித் தோட்டம் இருக்குது. அதன் சொந்தக்காரருக்குச் சங்கரலிங்கம்னு பேரு. அவருடைய மகனுக்கு என்னைக் கட்டிக் கொடுக்கிறதாக முடிவு செஞ்சிட்டாரு. அவங்களும் ஒரு நல்ல நாளிலே வந்து பரிசம் போடறேன்னு சொல்லிவிட்டுப் போயிட்டாங்க. பரிசம் போடற நாளுக்கு முதல் ராவிலே சந்தைக்குப் போய் தேங்காய், பழம், சர்க்கரை, மஞ்சள் எல்லாம் வாங்கிக்கிட்டு, சங்கரலிங்கம், அவர் மகன் — இன்னும் அவங்களுக்கு வேண்டியவங்க எல்லாரும் சம்பங்கித் தோட்டத்தை ஒட்டி இருக்குதே, அந்த வரப்பு மேலே நடந்து வந்துக்கிட்டிருந்தாங்க. அப்போ பாரு, சங்கரலிங்கத்தோட மகன் இருக்காரே, அவரு வரப்பிலே படுத்துக்கிட்டிருந்த ஒரு நல்ல பாம்பை மிதிச்சிட்டாரு. அவ்வளவுதான்; பாம்பு சீறிக்கிட்டு அவர் காலிலே ஒரு போடு போட்டுவிட்டுப் புத்துக்குள்ளே போயிடுச்சு. அவரு 'ஐயோ, பாம்பில்லே கடிச்சிடுச்சு!' என்று கூவிட்டாரு. பயத்திலே மயக்கம் போட்டு அங்கேயே விழுந்திட்டாரு. கூட வந்தவங்களிலே ஒருத்தர் வைத்தியரைக் கூட்டிவரப் போனாரு. மத்தவங்க பித்து பிடிச்சாப்போலே நின்னுக்கிட்டிருந்தாங்க. அப்போதான் இவரு இருக்காரே—அதுதான் என் புருசன்—அவரு சோத்துக் கடையிலேயிருந்து சோறு தின்னுட்டுத் தோட்டத்துக்குத் திரும்பி

வந்துவிட்டு இருக்காரு. கடு வரப்பிலே கூட்டமாக இருக்கிறவங்களைப் பார்த்து விசயம் என்னன்னு தெரிஞ்சுகிட்டாரு. 'அடடா! பாம்பு விசம் தலைக்கு ஏறிப் போயிடுமே!'ன்னு சொல்லிக்கிட்டு, சங்கரலிங்கத்தோட மகன் காலிலே கொத்தின இடத்தை வாயாலே கடிச்சு ரத்தத்தை உறிஞ்சி உறிஞ்சி வெளியே துப்பி விட்டாரு. கொஞ்ச நேரத்துக்கெல்லாம் சங்கரலிங்கத்தோட மகன் மயக்கம் தெளிஞ்சு முழிச்சுக்கிட்டாரு. வைத்தியர் வந்து பார்த்து விசம் இறங்கிப் போச்சுன்னு சொல்லி, கடிவாயிலே ஏதோ பச்சிலை வெச்சுக் கட்டிப் பிட்டுப் போயிட்டாராம். இரண்டு மூணு நாளிலே சங்கரலிங்கம் மகனுக்கு நல்லா குணமாயிடுச்சு. குணமானது என்ன? எனக்கு அவுங்க பரிசம் போடறேன்னு சொன்ன நாள் தாண்டிப் போயிடுச்சு!

"இதுக்குள்ளாற 'இவரு' செஞ்ச உதவிக்காக இவரைக் கூப்பிட்டு, சங்கரலிங்கம் என்ன வேணுமின்னு கேட்டாராம். அப்போ இவரு எங்க ரெண்டு பேருக்கும் மனசிலே இருக்கிறதை எடுத்துச் சொன்னாராம். அதுக்குச் சங்கரலிங்கம், நான் சகுனம் சரியாயில்லே. அந்தப் பொண்ணுக்குப் பரிசம் போடவேண்டாம்னு என் மகன்கிட்டே சொல்லிவிட்டேன். நீயே பூங்காவனத்தைக் கட்டிக்கிடு. நான் வேணுமானாக்கூட அவன் அப்பாருகிட்டே சொல்றேன்'னு வாக்குக் கொடுத்தாராம். அதேமாதிரி சங்கரலிங்கம் எங்கய்யாகிட்டே வந்து சொன்னாரு. அவரு பேச்சை எங்கய்யாவாலே தட்ட முடியல்லே. அவ்வளவுதான் அம்மா. அடுத்த மாசமே நானும் இவரும் புருசனும் பெஞ்சாதியுமாக ஆயிட்டோம்.

"பவானியம்மா, நீ மாத்திரம் எங்காத்தாகிட்டே அன்னிக்கி என் சங்கதியைப் பத்திச் சொல்லியிருக்காட்டா 'இவரு' தோட்டத்துக் குடிசைக்குப் போயிருக்கவும் முடியாது; அப்படிப் போகாமப் போனா இப்போ என் புருசனை வந்திருக்கவும் முடியாது" என்று சொல்லி, அவள் கதையை முடித்தாள்.

சுவரிலுள்ள கடிகாரத்தில் மணி ஆறு அடித்தது. "பவானியம்மா, விளக்கு வைக்கிற நேரமாச்சு. நான் போய் அந்த நல்ல பாம்புப் புத்திலே பால் ஊத்தணும். உனக்கு அடுத்தாப்போலே அந்த 'நாகம்'தான் எனக்கு நல்ல வாழ்வு கொடுத்தது!" என்று சொல்லிக் கொண்டே எழுந்தாள். அதே கணத்தில் எனக்கும் என் நெஞ்சை அன்றுவரை அழுத்திக் கொண்டிருந்த பாரம் அகன்றது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது.








# கைமேல் பலன்

வி.எஸ்.ஆர்.

**பா**ல் 'டின்'னை ஸைகிளின் பின் ஸீட்டில் வைத்துக் கட்டிக்கொண்டான் தாமோதரன். குவளைகள் எல்லாம் பத்திரமாக இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டு டெப்போவை விட்டுப் புறப்பட்டான். அவன் வேலை செய்து வந்தது ஒரு கூட்டுறவுப் பால் பண்ணையில். அதில் அங்கத்தினர்களாயிருந்தவர்கள் வீடுகளுக்குச் சென்று காலை மாலை இரு வேளைகளிலும் பால் கொடுப்பது அவன் வேலை. எழும்பூர் பேட்டை முழுதும் பால் சப்ளை செய்ய வேண்டியது அவன் பொறுப்பு. அன்று காலை, அவன் சிநேகிதன் பங்காரு லீவு வாங்கிக் கொண்டிருந்தபடியால், அவன் 'பீட்'டிலுள்ள நுங்கம்பாக்கத்துக்கும் தாமோதரன் பால் கொடுக்க வேண்டி வந்தது.

சமீபத்தில் வெளியான தமிழ்ப் படத்தில் வந்த ஒரு பாட்டை முனகிக்கொண்டு நுங்கம்பாக்கத்தில் ஒரு பங்களாவுக்குள் ஸைகிளைச் செலுத்தினான். அந்த வீட்டுக்குப் பால் போடவேண்டுமென்று ஏற்கனவே குறித்துக் கொண்டிருந்தான். நாய்கள் இருக்குமோ என்று பயத்துடன் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே சென்றான்.

பங்களாவில் நின்று, தாமோதரன் 'கண கண' வென்று மணியை அடித்ததும், உள்ளேயிருந்து ஒரு பெண் கையில் பாத்திரத்துடன் வந்தாள்.

"இத்தனை நேரமா பால் கொண்டு வருவதற்கு? இப்பொழுது மணி..." என்று கூற வந்த அந்தப் பெண் அவ்வாலிபன் முகத்தைப் பார்த்து மேலே பேச முடியாமல் தயங்கினாள். வந்தது புதிய ஆசாமி என்பதையும், தான் ரொம்பப் படபடப்பாகப் பேசிவிட்டதையும் உணர்ந்து கொண்டவள் போல் தோன்றினாள். அவள் முகத்தில் லேசான புன்னகை தோன்றியது.

"மணி ஆறரைதான் ஆகிறது" என்று சொல்லிக்கொண்டே குவளையை எடுக்கப் போனவன் அந்தப் பெண் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றான்.

"பாலைக் கொடுங்க, சீக்கிரம்!" என்றாள் அவள்.

குழாயைத் திறந்துவிட்டுக் குவளையை அதன் கீழே பிடித்தான் தாமோதரன்.

"இந்தாங்க! இந்தாங்க! நிரம்பிடிச்சு. மூடுங்க குழாயை!" என்றாள் அவள், தன் முகத்தையே பார்த்துக் கொண்டு மெய் மறந்து நின்ற தாமோதரனைப் பார்த்து.

அவள் பாலை வாங்கிக் கொண்டு உள்ளே போன பிறகு, தாமோதரன் ஸைகிளை 'ரிப்பேர்' செய்கிறவன்போல் பாசாங்கு செய்து கொண்டு வாசலில் வெகுநேரம் நின்றுவிட்டுத் திரும்பினான்.

தன் சிநேகிதன் பங்காரு ஒரு வாரம் லீவ் வாங்கிக்கொண்டிருக்கிறான் என்பதைத் தாமோதரன் மறுநாள் அறிந்து கொண்டதும் அவன் அடைந்த சந்தோஷத்துக்கு அளவில்லை. அவன் வேலைக்குத் திரும்பி வரும் வரை நுங்கம்பாக்கம் சென்று அந்தப் பெண்ணைச் சந்திக்கும் சந்தர்ப்பம் கிடைக்குமல்லவா?

மறுநாள் காலை சீக்கிரமாகவே பாலை எடுத்துக்கொண்டு கிளம்பினான். அரை மணி நேரத்தில் எழும்பூர் 'சப்ளை'யை முடித்துவிட்டு நுங்கம்பாக்கம் சென்றான். அந்தப் பங்களா வாசலில் நுழையும் போதே அது யாருடைய பங்களா என்று கவனித்தான். ஒரு பக்கத்தில் 'குபேர விலாஸ்' என்று எழுதியிருந்தது. செல்வரங்கம் பிள்ளை என்ற பெயர் மற்றொரு பக்கம் பலகையில் காணப்பட்டது. அந்தப் பெண் இவருக்குச் சொந்தமா? இராது; பார்த்தால் வேலைக்காரப் பெண் மாதிரிதான் இருக்கிறாள். எதற்கும் மெதுவாகப் பேச்சுக் கொடுத்து விசாரிக்க வேண்டும் என்று தீர்மானித்தான்.

'கண கண' வென்று அன்றும் மணியை அடித்தான். அந்தப் பெண் வந்தாள். அவளுடன் கூடவே ஒரு அம்மாளும் வந்தாள். அவள் வீட்டுக்கார எஜமானியம்மாள் போல் தோன்றினாள்.

"யாரப்பா, புதுப் பால்காரன்போலிருக்கிறதே!" என்றாள் எஜமானியம்மாள்.

"ஆமாம்" என்றான் தாமோதரன்.

"போகிறது; நீ வந்ததும் ஸைகிள் மணியை அடிப்பது புத்திசாலித்தனமான காரியம். பழைய பால்காரன் 'அம்மா, அம்மா' என்று 'ஹோ' வென்று கத்துவான்" என்றாள் அந்த அம்மாள்.

அந்தப் பெண் தாமோதரனைப் பார்த்துச் சிரித்தாள். அந்தச் சிரிப்பு அவன் உடலில் ஒரு மின்சார அதிர்ச்சியை உண்டாக்கியது. அவன் கையிலுள்ள பால் கீழே கொட்டாதது ஆச்சரியம்தான். தாமோதரன் பாலைப் பாத்திரத்தில் ஊற்றும்போது, அவன் விரல் அந்தப் பெண்ணின் கையை ஸ்பர்சித்தது. அந்த அதிர்ச்சியை அவனால் தாங்க முடியவில்லை. பால் பாத்திரம் கீழே விழுந்து, பால் கொட்டியது.

"மூதேவி! பாலைக்கூடச் சரியாக வாங்கத் தெரியவில்லை. ஒரு வேலைக்கும் துப்பு இல்லை. உள்ளே போ! சனியனே இனிமேல்

வாங்கிக் கொள்கிறேன்" என்று கர்ஜித்தாள் எஜமானியம்மாள்.

அவள் வேலைக்காரப் பெண்தான் என்பது ஊர்ஜிதமாகி விட்டது தாமோதரனுக்கு. "கோபித்துக் கொள்ளாதீங்க. அந்தப் பாலைக் கணக்கில் சேர்த்துக் கொள்ள வேண்டாம். அதற்குப் பதிலாகப் புதுப் பால் கொடுத்து விடுகிறேன்" என்றான் தாமோதரன்.

கையைப் பிசைந்து கொண்டு கீழே ஓடும் சிறு பாலாறுகளைப் பார்த்த வண்ணம் இருந்த அப்பெண் நன்றியுடன் அவனைப் பார்த்தாள்.

"ஆனால்......" என்று ஆரம்பித்தான் தாமோதரன்.

"ஆனால் என்ன?" என்றாள் சிரித்துக் கொண்டே எஜமானியம்மாள். அவன் நஷ்ட ஈடு கொடுப்பதாகச் சொன்னதில் அவளுக்குப் பரம திருப்தி.

"ஆனால், இவளை மட்டும் பால் வாங்க வரவேண்டாமென்று சொல்லாதீர்கள்!" என்று சொல்ல நினைத்தவன், "ஆனால் கை தவறுகிறது எல்லாருக்கும் உள்ளது, பாருங்கள்!" என்றுதான் சொன்னான்.

திரும்பி வரும்போது அவனுக்கு ஒரே பயம். பயமுறுத்தியபடி, மறுநாள் அந்த அம்மாள் பால் வாங்க அந்தப் பெண்ணை அனுப்பமாட்டாளோ என்று கவலை கொண்டான்.

மூன்றாவது நாள் தாமோதரன் அவ்வீட்டினருகில் செல்லும்பொழுதே, அந்தப் பெண் வாசலில் கோலம் இட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தான். அவன் வந்ததை அவள் கவனிக்கவில்லை. மணியை அடித்தால் வீட்டுக்கார அம்மாள் வந்து விடுவாளோ என்று பயந்து தாமோதரன் அருகில் சென்று கோலத்தைக் கவனித்தான். கோலத்தில் ரதத்தின் படம் இருந்தது. அதற்குக் கீழே 'வெள்ளிக்கிழமை' என்று குண்டு குண்டாக எழுதிக்கொண்டிருந்தாள். அதைப் பார்த்த பிறகு, அன்று வெள்ளிக்கிழமை என்பது அவனுக்கு ஞாபகம் வந்தது. அந்தப் பெண் பக்கத்தில் சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினாள். தாமோதரன் நின்று கொண்டிருந்ததைப் பார்த்து, அவள் சட்டென்று ஓடி வாசற்படியில் தயாராக இருந்த பால் பாத்திரத்தை எடுத்து வந்தாள்.

"உங்களைத்தான் எதிர்பார்த்து இத்தனை நேரம் மெதுவாகவே கோலம் போட்டுக் கொண்டிருந்தேன்" என்றாள் அந்தப் பெண். அவள் முகம் வெட்கத்தால் சிவந்தது.

ஆயிரம் கேள்விகள் கேட்க வேண்டுமென்று துடித்தான் தாமோதரன்.

ஆனால் இந்தச் சமயத்தில், "காமாக்ஷி!" என்று இடிபோன்ற குரல் மாடியிலிருந்து கேட்டது. அது வீட்டுக்காரரின் குரலாகத்தானிருக்கவேண்டும். மறுகணம் அந்தப் பெண் உள்ளே ஓடிவிட்டாள். அந்தப் பெண்ணின் பெயர் காமாக்ஷிதான் என்று அவன் தெரிந்து கொண்டான்.

தாமோதரனின் ஏமாற்றத்துக்கு ஓர் அளவில்லை. ஒரு வார்த்தைகூட அவளுடன் பேச முடியாதது வேதனையாகத்தானிருந்தது. அந்தப் பெண் ஓர் அநாதை. இந்த வீட்டில் வயிற்றுப் பிழைப்புக்காகப் பல கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டிருக்கிறாள் என்று தோன்றியது. அவள் உதவியை எதிர்நோக்கிக் காத்திருப்பவள் போலவும் காணப்படுகிறாள். அவளுக்கு எழுதப் படிக்கவும் தெரிந்திருக்கிறது. பார்ப்பதற்கும் லட்சணமாயிருக்கிறாள். ஏன் இவளைக் கலியாணம் செய்து கொள்ளக் கூடாது என்று எண்ணமிட்டான் தாமோதரன்.—வீட்டில் அவன் வயதான தாயார் இருந்தாள். இந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டால் அவளுக்கும் திருப்தியாகத்தானிருக்கும்.

மறுநாள் டெப்போவுக்குப் போனதும் லீவிலிருந்து எதிர்பாராதவிதமாகப் பங்காரு திரும்பிவிட்டதைக் கண்டு தாமோதரனுக்குத் தூக்கிவாரிப்போட்டது. இனிமேல் நுங்கம்பாக்கம் போவதோ அந்தப் பெண்ணைப் பார்ப்பதோ முடியாத காரியம் அல்லவா? சட்டென்று அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. அந்தப் பெண்ணுக்கு எழுதப் படிக்கத் தெரியுமாதலால் அவளுக்கு ஏன் ஒரு கடிதம் எழுதக் கூடாது? அந்தப் பெண்ணின் பெயரும் அவனுக்குத் தெரியும். ஆகவே





அன்று வேலை முடிந்ததும் பின்வரும் கடிதம் எழுதினான்:

"அன்புள்ள காமாக்ஷிக்கு,

உன்னைப் பார்த்ததிலிருந்து பித்துப் பிடித்தவன் போலிருக்கிறேன். நேற்று அறுபது வீடுகளுக்குப் போடவேண்டிய பாலை இருபத்தைந்து வீடுகளுக்குப் போட்டுவிட்டேன் சில இடங்களில் ஆழாக்கை இரண்டு ஆழாக்காகவும் கால் படியை அரைப்படியாகவும் அளந்து கொடுத்தேன். பால் போடாத வீடுகளிலிருந்து புகார் வந்தது. 'வேறு ஆசாமியாக இருந்தால் உன்னை வேலையை விட்டு நீக்கி விடுவார்கள். இனி இம்மாதிரிப் புகார் வரக்கூடாது' என்று எச்சரித்தார் டெப்போ மானேஜர். நிற்க.

எனக்கு 40 ரூபாய் சம்பளம். கெட்ட பழக்கம் எனக்கு எதுவும் இல்லை. நாம் இருவரும் கல்யாணம் செய்து கொண்டால் சந்தோஷமாக இருக்க முடியும் என்று மனப்பூர்வமாக நம்புகிறேன். உனக்குச் சம்மதமானால் நாளை மாலை ஏழுமணிக்கு உங்கள் பங்களா அருகிலுள்ள பார்க்கில் என்னைச் சந்திக்கவும்.

தாமோதரன்."

கவரின் மீது, 'சென்னை நுங்கம்பாக்கம் குபேர விலாஸிலிருக்கும் செல்வரங்கம் பிள்ளை மேற் பார்த்து காமாக்ஷியிடம் கொடுப்பது' என்று எழுதித் தபாலில் சேர்த்துவிட்டான். தன் தைரியத்தை எண்ணியதும் அவனுக்கே ஆச்சரியமாகி விட்டது.

* * *

டிப்போவிலிருந்து வீட்டுக்குத் திரும்பி வரும் வழியில் பங்காருவின் வீட்டுக்குப் போனான். பங்காரு கம்பெனியில் வேலைக்கு வந்து மூன்று மாதங்கள்தான் ஆகியிருந்தன. ரொம்பவும் தமாஷாகவும் கலகலப்பாகவும் பேசும் சுபாவம் உள்ளவன். தன் அந்தரங்க விஷயத்தைக் கூட அவன் தாமோதரனிடம் சொல்வதுண்டு. பங்காரு, தான் வெகு நாளாக அனுபவித்து வந்த அந்தரங்க வேதனையைத் தாமோதரனிடம் கூறிவந்தான். அது என்னவென்றால், அவனது அத்தை மகள் அபிராமி தன்னைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று பங்காருவை வெகு காலமாக வற்புறுத்தி வந்தான். பங்காருவுக்கு இதில் கொஞ்சமும் இஷ்டமில்லை. அவன் பலவிதங்களில் மாமனுக்குக் கடமைப்பட்டிருந்தபடியாலும் மிகவும் பொல்லாதவனான மாமனின் விரோதத்தைச் சம்பாதித்துக் கொள்ளப் பயமாயிருந்ததாலும் "முடியாது" என்று வெளிப்படையாகச் சொல்லமுடியவில்லை இந்தத் தவிப்பைப் பங்காரு தாமோதரனிடம் அடிக்கடி சொல்லுவான்.

ஆகவே, தாமோதரன் தன் சிநேகிதனிடம் காமாக்ஷியைப் பற்றிப் பிரலாபித்து அவளுக்குக் கடிதம் எழுதிய விஷயத்தையும் பிரஸ்தாபித்தது இயற்கை தானே? ஆனால் இந்த விஷயத்தைக் கேட்டதும் பங்காரு விழுந்து விழுந்து சிரித்தான். "ஏன் சிரிக்கிறாய்?" என்று கேட்டான் தாமோதரன். "காமாக்ஷி என்பது அந்தப் பெண்ணின் பெயரல்ல; அந்த வீட்டுக்கார அம்மாளின் பெயர்!" என்று பெரிய வெடிகுண்டைத் தூக்கிப் போட்டான் பங்காரு.

"வீட்டு எஜமான் 'காமாக்ஷி!' என்று கூப்பிட்டதும் அந்தப் பெண் உள்ளே ஓடினாளே?" என்றான் தாமோதரன் குழப்பத்துடன்.

"அதிலிருந்து அந்தப் பெண்ணின் பெயர் காமாக்ஷிதான் என்று முடிவு செய்யலாமா? எஜமான் கூப்பிடும் சமாசாரத்தை அந்த அம்மாளிடம் போய்ச் சொல்லுவதற்காக அந்தப் பெண் ஓடியிருக்கக் கூடாதா?" என்றான் பங்காரு.

"நிலைமை மோசமாக இருக்கிறதே! அந்தக் கடிதம் அந்த அம்மாள் கையில் கிடைத்தால் என்ன ஆகும்?" என்று கூறிக் கலங்கினான் தாமோதரன்.

"தாமு! அந்தப் பார்க்குக்கு ஒரு மைல் தூரத்தில்கூட இனிமேல் நீ உன் தலையைக் காண்பிக்காதே! ஜாக்கிரதை!" என்று எச்சரித்தான் பங்காரு.

"எனக்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது? ஆனால் இந்த ஊரை விட்டே

ஓடும்படியான நிலைமையை யல்லவா நான் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறேன்?'' என்றுன் தாமோதரன்.

தன் அசட்டுக் காரியத்தை நினைத்து அவனுக்கே துக்கமாகத்தா னிருந்தது. அப்போழுது பங்காருவுக்குத் தெரிந்தவர் யாரோ வரவே தாமோதரன் தன் சிநேகிதனிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பினுன்.

தனக்கு ஏற்பட்ட மனக் குழப்பத்தில் பங்காருவின் வீட்டிலேயே செருப்பை விட்டு வந்தது சற்று தூரம் சென்றதும் அவனுக்குத் தெரிந்தது. திரும்பி, பங்காருவின் வீட்டை நோக்கி நடந்தான். உள்ளே பங்காரு உரத்த குரலில் தன்னைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டு உற்றுக் கவனித்தான்.

"துரைசாமி! இந்தத் தாமுவைப்போல் ஏமாளி உலகத்திலே இருப்பானு? காமாக்ஷி என்கிறது வீட்டுக்கார எஜமானியின் பெயர் என்று நான் சொன்னதை அவன் நிஜம் என்றே நம்பி விட்டான். வாஸ்தவத்திலே அந்தப் பெண்ணின் பெயர்தான் காமாக்ஷி! எத்தனை நாளாய் நான் அவளைப் பார்த்துப் பெருமூச்சு விட்டிருக்கிறேன், தெரியுமா? ஆனல் இந்த மாதிரி கடிதாசி எழுதுகிற யோசனை எனக்குத் தோன்றவே யில்லை. காத்திருந்தவன் பெண்ணை நேற்று வந்தவன் கொண்டுபோகவாவது? பார்க்குப் பக்கம் அந்தப் பயல் இனி வரமாட்டான். நாளை நானே பார்க்குக்குப் போய் அந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு என் அக்கா வீட்டில் கொண்டு போய் விட்டு விட்டு வருகிறேன்'' என்று சொல்லிக் கொண்டிருந்தான் பங்காரு.

"அப்படியா சேதி?'' என்று மனதில் கருவிக் கொண்டு திரும்பினுன் தாமோதரன். வேகமாக வீட்டுக்கு வந்தான். இன்னொரு கடிதம் அவசரமாக எழுதி விலாசம் எழுதித் தபாலில் போட்ட பிறகு தான் அவனுக்கு நிம்மதி ஏற்பட்டது.

*　　*　　*

மறுநாள் இரவு ஏழு மணி இருக்கும். தாமு பார்க்குக்குப் போகும் வழியில் ஒதுக்கமாக நின்று போகிறவர்களைக் கவனித்து வந்தான். முன்னிருட்டு நேரமானதாலும், அருகில் மின்சார தீபம் இல்லாததாலும் அவன் இருக்குமிடம் யாருக்கும் தெரியாது. சற்றுத் தூரத்திலேயே பங்காரு வருவதைக் கவனித்து விட்டான். அவன் என்றுமில்லாத வண்ணம் பட்டு ஜிப்பாப் போட்டுக் கொண்டிருந்தான். குஷாலாகச் சீட்டி யடித்துக் கொண்டு நடந்தான். சற்று தூரத்தில் தாமு அவனைப் பின் தொடர்ந்தான். பார்க்குள் சென்றதும் பங்காரு நயனிச் சுற்று முற்றும் பார்த்தான். மின்சார வெளிச்சத்தில் சற்றுத் தூரத்தில் எதிரே ஒரு பெண் உருவம் வருவதைப் பார்த்தான். 'திக்' 'திக்' கென்று அவன் நெஞ்சு அடித்துக் கொண்டது. அந்தத் தென்றல் காற்றில் கூட அவன் உடம்பு வியர்த்தது.

"பங்காரு!'' என்று தன்னைக் கூப்பிட்ட வண்ணம் எதிரில் நின்ற பெண் தன் அத்தை மகள் அபிராமி என்று அறிந்ததும் அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. மறு கணம் அபிராமியின் தந்தை பக்கிரிசாமிப் பிள்ளையும் அங்கே தோன்றினர். "பங்காரு! உனக்கு என் மகளைக் கொடுக்கிறதிலே எனக்குச் சம்மதம். நான் முடியாது என்று ஒரு நாள் கூடச் சொல்லவில்லையே! அப்படி யிருக்கும்போது எங்களுக்குத் தெரியாமல் அவளை நீ எதுக்காகக் கூட்டிக் கொண்டு இரவோடு இரவாக ஓடிப் போகிறதாகக் கடிதம் எழுதியிருக்கிருய்? வேண்டாம்; நாளைக்கே உங்கள் கல்யாணத்தை நடத்தி வைக்கிறேன், வா!'' என்றுர் பக்கிரிசாமி.



"ஏன் ஸார், நீங்கள்தானே 'ஹை கோர்ட்' வாங்கி இருக்கிறீர்கள்!''

"என்னப்பா, இது! குடியிருக்க வீடில்லாமல் நான் நாளும் போடுகிறேன், நீ என்னடா வென்றல் 'ஹைகோர்ட்'டையே விலைக்கு வாங்கி விட்டேன் என்கிருயே?''

"அதைக் கேட்கவில்லை; நீங்கள் 'ஹைகோர்ட்'டுக்கு டிக்கெட் வாங்கி யிருக்கிறீர்களா என்றுகேட்கிறேன்!''



"வரதட்சிணைத் தடை மசோதா கட்டாயம் வரத்தான் வேண்டும்."

"என்ன ஸார், இது? முன்னெல்லாம் வரதட்சிணை மசோதா வரவே கூடாது என்று வேண்டிக் கொண்டிருந்தீர்களே!"

"ஆமாம் ஸார், அப்போது என் பிள்ளைக்குக் கலியாணம் பண்ண வேண்டியிருந்தது; இப்போது என் பெண்ணுக்குக் கல்யாணம் பண்ண வேணுமே!"

---

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? எனக்கு ஒன்றுமே புரியவில்லை. நான் ஒன்றும் எழுதவில்லையே!" என்று தடுமாறினான் பங்காரு.

"பரவாயில்லை; உன்னை நான் கோபித்துக் கொள்ள மாட்டேன்" என்று கூறி அவனைத் தட்டிக் கொடுத்தார் பக்கிரிசாமிப் பிள்ளை. "இல்லை, மாமா! நான் கடிதமே எழுதவில்லை" என்று பரிதாபமாகக் கூறினான் பங்காரு.

"பயப்படாதே! நீ எழுதினால்தான் என்ன? உன்னைக் கடித்துத் தின்றுவிடப் போகிறேனா?" என்று கூறி அவன் கையைப் பிடித்து, வாசலில் நின்ற ஜட்கா வண்டிக்கு அழைத்துப் போனார்.

இதையெல்லாம் ஒரு மூலையில் நின்று கொண்டு கவனித்துக் கொண்டிருந்தான் தாமோதரன். அவன் முகத்தில் அரும்பிய புன்னகை அவன் மனதிலிருந்த மகிழ்ச்சியை வெளியிட்டது.

"உங்களைத்தானே!" என்று தன் பக்கத்திலிருந்து வந்த குரலைக் கேட்டு அவன் திரும்பினான். காமாக்ஷி அருகில் நின்று கொண்டிருந்தாள்.

"வந்துவிட்டாயா?"

"வராமல் இருப்பேனா?"

"நான் கடிதத்தில் எழுதினதெல்லாம் நிஜம் என்று நம்புகிறாயா?"

"ஆமாம்; மனதார நம்புகிறேன். நீங்கள் எழுதின ஒவ்வொரு வார்த்தையும் நெஞ்சிலிருந்து வந்த நிஜமான வார்த்தையாகத்தான் இருக்க முடியும். உங்களை நான் பார்த்ததிலிருந்து என் மனசும் சரியாகத்தான் இல்லை. அன்று பாலைக் கீழே கொட்டியதுமாதிரி, நேற்று ஒரு பீங்கான் ஜாடியைக் கீழே போட்டு உடைத்துவிட்டேன். 'இவ்வளவு அஜாக்கிரதையாக இருக்கலாமா? வேறு வீடாக இருந்தால் இப்படிச் செய்வதற்கு வேலையை விட்டு நீக்கிவிடுவார்கள்' என்று எஜமானியம்மாள் சொன்னாள்" என்றாள் காமாக்ஷி.

"இனிமேல் உன்னைக் கோபித்துக் கொள்கிறவர்கள், கஷ்டப்படுத்துகிறவர்கள் வீட்டுக்கு நீ போகவேண்டியதில்லை. உன்னை அழைத்துக் கொண்டு வருகிறதாக என் தாயாரிடமும் நான் சொல்லி விட்டேன்."

"என்னை அவர்கள் கஷ்டப்படுத்துவதாக உங்களுக்கு யார் சொன்னார்கள்? என் வீட்டு எஜமானருக்குக் காது செவிடு. அம்மா உரக்கப் பேசிப் பேசி அது அவருக்கு வழக்கமாகி விட்டது. அம்மாள் போடும் கூச்சலைக் கேட்டு அவர்கள் என்னைக் கஷ்டப்படுத்துகிறதாக நினைச்சீர்களா?......என் அம்மா காலமானதிலிருந்து இவர்கள் என்னை எவ்வளவு பிரியமாக நடத்துகிறார்கள், தெரியுமா? என்னைப் படிக்க வைத்தவர்கள்கூட இவர்கள்தான். நீங்கள் எழுதின கடிதாசைப் பற்றி ஐயாவிடமும் அம்மாவிடமும் சொன்னேன். அவர்கள்தான் இங்கே வர உத்தரவு கொடுத்தாங்க. நம்ம இருவருக்கும் சம்மதம் ஏற்பட்டவுடன் நம் கல்யாணத்தை இவங்களே நடத்தி வைக்கிறதாகச் சொன்னாங்க!"

"அப்படியா!" என்று தாமு ஆச்சரியப்பட்டான்.

வாசலில் ஜட்கா வண்டி புறப்பட்டுக் கொண்டிருந்தது.

"பங்காரு! போய் வருகிறாயா?"

"ஓஹோ! இது உன் வேலைதானா?"

"என் வேலை அல்ல; உன் வேலைதான்! நம் இருவருக்குமே கைமேல் பலன் கிடைத்தால் உனக்குச் சந்தோஷந்தானே? என் கல்யாணத்துக்கு உனக்கு அழைப்பு அனுப்புகிறேன். ஆனால் உன் கல்யாணத்தின்போது நீ என்னை மறந்துவிடாதே!" என்று தாமு கூறிக்கொண்டிருக்கும்போதே ஜட்கா நகர்ந்தது. தாமுவும் காமாக்ஷியும் கை கோத்துக்கொண்டு குபேர விலாஸை நோக்கி நடந்தனர்.

# பாமோலிவ்வின் அழகு உபாயம் இதோ இருக்கிறது

## 14 நாட்களில் அழகுள்ள சருமத்தை அளிக்கக்கூடியது!




பாமோலிவ் அழகு உபாயம் வெவ்வேறு வயதுள்ள 1,285 பெண்மணிகளாலும், சகல தேகாஷ்ண ஸ்திதிகளிலும், பல்வேறு சருமங்களின் மேலும் உபயோகிக்கப்பட்டு பரிசோதிக்கப் பட்டது. ஒவ்வொரு 3 நபர்களில் 2 பேர், 14 நாட்களில் அழகுள்ள சருமத்தைப் பெற்றார்கள்!

நீங்கள் செய்ய வேண்டியது இதுதான்: பாமோலிவ் சோப்பால் உங்கள் முகத்தைக் கழுவுங்கள். அதன் உயர்ந்த க்ரீம் நுரையை உங்கள் சருமத்தின் மேல் வைத்து 60 செகண்டுகள் தேயுங்கள். பிறகு கழுவுங்கள். நாளைக்கு 3 வேளை விதம் 14 நாட்கள் இவ்வாறு செய்யுங்கள் இத்தகைய சுத்தம் செய்தல் உங்கள் சருமத்திற்கு புதிய சுத்தத்தையும் அழகையும் அளிக்கிறது.

பாமோலிவ் உண்மையான சரும அழகை அளிக்கிறது



வரிய கேக் 7 அணா உள்நாட்டு வரி உள்பட

**பாமோலிவ்வின் புதிய அழகு சிகிச்சையை இன்றே ஆரம்பியுங்கள்!**

---

உலகப் பிரசித்தி பெற்ற ஜாம்பக் உபயோகிப்பதனால்

## தசை வலியும், நோவும்

### மாயமாய் மறைகின்றன

இலேசாக ஜாம்பக் தேய்த்தவுடனேயே ஆஸ்வாசம் ஏற்படுகிறது. அதி ஆச்சரியகரமான இந்த மூலிகைக் களிம்பிலுள்ள உயர்ந்த மருந்துத் தைலங்கள் சருமத்தின் ஊடே சென்று வாடி வதங்கி வலியுறும் தசைகளுக்கு குணமாகும்படி ஹிதமளிக்கிறது. எத்தகைய தசைப் பிடிப்பு, தசை வலி, மூட்டுப் பிடிப்பு, பாதங்களில் வெக்காடு, வலி ஆகிய உபாதைகளுக்கும் ஜாம்பக் ஒரு சிறந்த ஔஷதம். மிருகக் கொழுப்பு கலப்பற்றது என்பதற்கு உத்தரவாதம்.




எப்போதும் உபயோகியுங்கள்

# Zam-Buk

ஆறுதலளித்துக் குணமாக்கும் கிருமிநாசனக் களிம்பு

# காலக்ஷேபம்



தம்பி :—சூரியன் காலையில் கிழக்கே உதித்துச் சாயங்காலம் மேற்கே தெரிகிறது. மறுபடியும் மறுநாள் காலையில் கிழக்கே உதிக்கிறதே! அது எப்படி, அண்ணா?

அண்ணன் :—சாயங்காலம் மேற்கே சூரியன் கொஞ்சம் கொஞ்சமாக வந்துவிடுகிறது. பிறகு இராத்திரி கிழக்கு நோக்கி வந்து, காலையில் அங்கே உதயமாகிறது.

தம்பி:—அது திரும்ப வருவது நமக்குத் தெரிகிறதில்லையே!

அண்ணன் :—இராத்திரி இருட்டாயிருப்பதனால், நமக்குத் தெரிவதில்லை!

★

பிரபு (தம் மகனைப் பார்த்து):—நீ எப்பொழுதும் ஏழைகளின் மேல் அன்பாயிருக்க வேண்டும்.

பையன் :—ஏன், அப்பா?

பிரபு :—யார் கண்டது? அவர்களும் ஒரு நாள் பணக்காரர்களாகலாம் அல்லவா?

★

பல் டாக்டர் :— பயப்படாதேயும். வலிக்காமல் பல்லைப் பிடுங்கி விடுகிறேன்......

வந்தவர் (வெளியூர்க்காரர்) :—என்னிடம் அதெல்லாம் சொல்லாதீர்கள், டாக்டர் ஸார்! நானே ஒரு பல் டாக்டர்தான்!

★

பிள்ளை :—அம்மா, அடுத்த வீட்டு ராஜு குதிரையே பார்த்ததில்லை போலிருக்கிறது!

அம்மா :—உனக்கு எப்படியடா கண்ணே, தெரியும்?

பிள்ளை :—நான் குதிரையின் படம் போட்டு அவனிடம் காண்பித்தேன். அவனுக்கு அது என்னவென்றே தெரியவில்லை, அம்மா!

ஒரு தோட்டத்தில் வாழை தார் போட்டிருந்தது. ஆனால் அது முற்றவில்லை. தோட்டக்காரன் ஓர் அட்டையில் "வாழைத் தாரைத் திருடினால் உதைப்பேன்!" என்று எழுதி, வாழை மரத்தில் மாட்டிவிட்டுப் போனான்.

மறு நாள் அவன் வந்து பார்த்த போது வாழைத் தார் காணப்படவில்லை. அந்த அட்டையின் இன்னொரு பக்கத்தில், "திருடனைக் கண்டு பிடிக்காவிட்டால் அடிப்பேன்!" என்று எழுதியிருந்தது.

★

பையன் :—அம்மா, குழந்தை படுத்திருக்கும் தூளிக்குப் பக்கத்திலேயே படுத்துக் கொள்ளுகிறேன்.

அம்மா :—ஏன், நீ எப்போதும் போல் வாசற்பக்கத்து அறையில் படுத்துக் கொள்ளுவதற்கு என்ன?

பையன் :—இல்லை, அம்மா! நம்ம வீட்டு அலாரம் கடிகாரம் ஓடவில்லையே! நான் படிக்க எழுந்திருக்க வேண்டாமா? குழந்தை விடியற்காலையில் என்னை எழுப்பி விட்டுவிடும்!

---




"அடி சரளா! நான் உனக்கு ஒரு கட்டு நாவல்கள் கொடுத்தேனே, அதில் ஏதாவது உபயோகப் பட்டதா?"

"ஓ...... பேஷாக உபயோகப்பட்டதே! ஒரு நாவலுக்குள்ளே இருந்த தேள் எங்கள் மாமியாரை நன்றாய்க் கொட்டி விட்டது!"

# கண்கட்டு-மயிலை

வெங்கடரத்தினம்

பண்ணை முதலாளியின் எதிரே சோலைமுத்து கை, வாய் பொத்திக் கொண்டு நின்ற வண்ணம் இருந்தான். அவன் பண்ணையின் பெரிய வண்டிக்காரன். அதாவது பெரிய ஐயா எங்கே யாவது கிளம்பினால், அவன் தான் வண்டி கட்டிக் கொண்டு செல்வான். தலையைச் சொறிந்து கொண்டே, அவன் எஜமானனிடம் சொன்னான் :

" ஐயா, இப்ப முயற்சி பண்ணிப் பார்க்கலாம் ஒரு சமயம் கிழவனுரு சம்மதிச்சிடும் "

" அவன்தான் பிடிவாதமாய் இருக்கானே ! அவனை யார் சம்மதிக்க வைக்கிறது ? இடீர்னு மனசு இப்ப மாறிப் போயிரிச்சா ?" என்ற அசுவாரஸ்யப் பட்டுக் கொண்டே முதலாளி சொன்னார்.

"அப்படி யில்லீங்க ! நான் விசாரிச்சேன். கிழவனுர பொஞ்சாதிக்கு உடம்பு சரியாய் இல்லீங்களாம். டவுனிலேருந்து டாக்டர் கூட வந்து பார்த்தாராம். நாலஞ்சு நாளாய்க் காய்ச்சல் பலமாய் அடிக்குதாம்."

" நீ எப்பவா சும்மா கதை பண்ணுறே ? அவன் பொஞ்சாதி இருந்தா என்ன, செத்தா என்ன ? நமக்கு வேண்டியது அந்தக் காளே. அது நம்ம கைக்குக் கிடைக்கிற வழி ஏதாச்சும் உண்டுன்னுப் பேசு. சும்மா கதை பண்ணுதே !"

" அதுதானுங்க சொல்றேன். டாக்டர் வந்து பார்த்துட்டு வைத்தியத்துக்குக் குறைஞ்சது நூறு ரூபாயாவது வேணு மின்னு சொல்லிப்புட்டுப் போயிட்டாராம். அதனாலே இப்ப கிழவனுருக்குப் பணம் ரொம்ப முடையாய் இருக்கு. அக்கம் பக்கத்துக்காரங்க கிட்டே கூடச் சொல்லி வருத்தப் பட்டாராம்."

" அப்புறம் ?" என்று முதலாளி சுவாரஸ்யமாய்க் கேட்டார்.

"கிழவனர் கிட்டே போ நூறு ரூபாய்க்கு வேறொண்ணும் கிடையாது. பொஞ்சாதி பிழைக்கணுமின்னு இருந்தா, அந்தக் காளையை வித்துத்தான் ஆகணும். இந்தச் சமயத்திலேன்னு பார்த்து எசமான் முயற்சி பண்ணினு, எப்படியும் அது கைக்குக் கிடைச்சிடும். என்ன இருந்தாலும் பொஞ்சாதி உசிருக்கப்புறம் தானே காளை மாடு ?"

" நீ சொல்றது சரிதான், சோலை ! ஆனால் அவன் ஒரு அதிசயப் பிறவி யாச்சே ! அதனால் எனக்கு இப்பவும் சந்தேகம்தான். பெண்டாட்டி செத்தா சாகட்டுமின்னு எண்ணி, மாட்டை விற்க மாட்டேன்னு சொன்னுக்கூட நான் ஆச்சரியப்பட மாட்டேன்."

" எசமான் சொல்றதும் வாஸ்தவந்தான். அவருக்கு என்னத்தினுலேயோ அந்தக் காளை மேலே அம்பிட்டு ஆசை. இருந்தாலும் எசமான் நிறையப் பணம் கொடுத்தா, அவர் வழிக்கு வந்திடுவார்."

" அதுதான் நானும் யோசிக்கிறேன். இதை விட்டா, அவனைத் திருப்ப வேறெ சமயம் கிடைக்காது. எதுக்கும் நீ இப்ப ஒரு காரியம் பண்ணு."

" நல்லதுங்க " எனக் கூறி, சோலை முத்து முதலாளியின் வாயிலிருந்து என்ன உத்தரவு வருமோ என்று எதிர் பார்த்துக் கொண்டு நின்ருன்.

" நீ இப்ப அவன் கிட்டப் போய், நான் கூப்பிட்டதாகச் சொல்லு. வழியிலே நீயும் அவன் மனசை எவ்வளவு தூரம் மாத்த முடியுமோ, அவ்வளவும் செஞ்சி பார்த்து விடு. உசிரில்லே பெரிசு, காளை மாடா பெரிசு ?—அப்படி இப்படி யெல்லாம் சொல்லிச் சரிப்படுத்தி விடு. பார்க்கணும் உன் சாமர்த்தியத்தை ?—"

சோலைமுத்து துண்டை உதறித் தலையில் கட்டிக் கொண்டு நடந்தான்.

## 2

நாகப்பனை நல்ல அதிர்ஷ்டக்காரன் என்றுதான் குறிப்பிட வேண்டும். இல்லாவிட்டால் பண்ணையாருக்கே கிடைக்காத அவ்வபூர்வ வஸ்து அவனுக்கு அவ்வளவு இலேசில் கிட்டியிருக்குமா ? ஐம்பது ரூபாய்ப் பணத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, பக்கத்து ஊர் மாட்டுச் சந்தைக்குச் சென்றவன் அங்கேதான் கண்கட்டு மயிலையைச் சந்தித்தான். அதை விற்க வந்திருந்தவனுக்கு அப்போது என்னவோ வீட்டில் பணம் மிகவும் முடையாக இருந்ததாம். அதனால்தான் அவன் அந்த உயர்ந்த சாதிக் காளையையே விற்கும்படி நேரிட்டிருந்தது.

ஏதோ நல்ல சாதிக் காளை போல் இருக்கிறது என்று சாதாரணமாய் நினைத்துக் கொண்டுதான் நாகப்பன் அதை விலை பேசினுன். ஆனல் அதன் உண்மை மதிப்பு, விலை கொடுத்து வாங்கிச் சற்று நேரம் கழித்துத்தான் அவனுக்குத் தெரிந்தது. அதன் சொந்தக்காரன் யாரோ ஒரு ஜமீன்தாரிடம் வேலை பார்த்

துக் கொண்டிருந்தவனும். அவர் அவ னுக்குப் பரிசாக அளித்தது அந்தக் காளையைத்தான். நாகப்பன் எழுபது ரூபாய்க்கு அதை வாங்கியிருந்தான்.

சிறிது நேரத்தில் பண்ணையாட்கள் நான்கைந்து பேர் வந்தார்கள். "கன்று கட்டு மயிலை யொண்ணு விலை போகிற தாமே?" என்று அவர்கள் விசாரித்துக் கொண்டு வந்தனர். அக் காளை நாகப்ப விடம் இருப்பதைக் கண்டதும் அவர்க ளுக்குப் பலத்த ஏமாற்றமாகப் போய் விட்டது. "யாரிடம் வாங்கினே?" என்று அவர்கள் விசாரித்தனர்.

"அதோ ஒருத்தன் போய்க் கொண்டி ருக்கிறானே, அவனிடம்தான்!" என்று நாகப்பன் அந்த ஆசாமியைக் காண்பித் தான். அவனிடம் சென்று பண்ணை யாட்கள் கேட்டனர். "நூறு ரூபாய் தரோம், எப்படியாவது அதைத் திருப்பி வாங்கிக் கொடுத்து விடு!" என்று ஆன மட்டும் சொல்லிப் பார்த்தார்கள். மாட் டுக்காரன் தன் அவசரக் குடுக்கைத் தனத்தை எண்ணி வருந்திக்கொண்டே, "இனிமேலே என்ன பண்ணறது? அந்த ஆள்கிட்டே வித்தாயிடுத்தே!" என்று சொல்லிவிட்டுப் போய் விட்டான்.

உடனே அவர்கள் நாகப்பனிடமே வந்து நூறு ரூபாய் நோட்டை நீட்டி னார்கள். அப்போதுதான் காளையின் மதிப்பு நாகப்பனுக்கு விளங்கியது. "இந்த மாதிரி ஒரு மாடு விலை போகிறதென் பதை முன்னதாகத் தெரிந்து கொண்டு, பண்ணை முதலாளியே நூறு ரூபாய் நோட்டுடன் நாலைந்து ஆட்களை அனுப் புவதென்றால், காளை எப்பேர்ப்பட்டதாக இருக்க வேண்டும்?" என்று அவன் வியந்து கொண்டான்.

நூறு ரூபாய் நோட்டுக்கு அவன் சிறி தும் அசைந்து கொடுக்கவில்லை. அவர்கள் தமக்குள் என்னவோ ரகசியமாக வென்று பேசிக் கொண்டார்கள்.

"அதெல்லாம் இல்லை; முதலாளி ஒண்ணும் கோவிச்சுக்க மாட்டார்!" என்றான் ஒருவன்.

"எப்படியாவது காளையை நம்ம பண் ணைக்கு அழைச்சிட்டு வந்து விடணும். என்ன விலையானாலும் பரவாயில்லைன்னு அவர் சொல்லியிருக்காரே!"—இது இன் னொருவன்.

அவர்கள் நாகப்பனிடம் இன்னொரு ஐம்பது ரூபாயையும் சேர்த்து நீட்டினர். நாகப்பனுக்கு நூற்றைம்பது ரூபாய் விலையாக வருவதைக் கண்டதும் சிறிது ஆசை தட்டியதென்னவோ வாஸ்தவம் தான். எனினும் மாட்டை விட்டுக் கொடுக்க அவனுக்கு ஆசையில்லை. அவன் கொஞ்சமும் சந்தேகத்திற்கு இடம் இல் லாதபடி, "இப்ப எனக்கு ஒரு நல்ல காளை மாடு எப்படியும் வேண்டியிருக்கு. இதை உங்ககிட்டே வித்துப்புட்டாலும், இன்னொண்ணு வாங்கித்தான் ஆகணும். அப்படி யிருக்கிறபோது இதை விற்பா னேன்?" என்று கூறிவிட்டு மாட்டை ஓட்டிக் கொண்டு சென்று விட்டான்.

## 3

பண்ணை முதலாளி இரண்டு நாள் கழித்து ஒரு ஆளை அனுப்பி நாகப்பனைக் கூப்பிட்டுக் கொண்டு வரச் சொன்னார். அவன் அவர் எதிரே சென்று கும்பிடு போட்டுக் கொண்டு நின்றான். அவர் அவனை அழைத்து வரச் செய்தது காளை விஷயமாகத்தான். முதலாளி தொண் டையைக் கனைத்துக் கொண்டு, தெளி வான குரலில் ஆரம்பித்தார்:

"நாகப்பா, உனக்கு இன்னொரு ஐம் பது ரூபா வேணுமின்னு சேர்த்துக் கொடுக்கிறேன். நீ பணத்தைப் பத்திக் கொஞ்சங் கூட யோசனை பண்ண வேண்டாம்......"

நாகப்பன் கேட்டுக் கொண்டே நின்றான்.

"விலையாய் இருநூறு ரூபா இப்பவே இரும்புப் பெட்டியிலேந்து எடுத்துக் கொடுத்துடறேன். நீ வீட்டுக்குப் போய்க் காளையை ஓட்டிக்கொண்டு வந்து விடு. என்ன, சம்மதம்தானே?"

"நான் சொல்றேன்னு எசமான் கொச்சிக்கப் படாது. இருந்தாலும், அதை விடறதுக்கு எனக்கு மனசு வரல்லீங்க."

"சரிதாம்ப்பா, பிரமாதப்படுத்தறியே! வாங்கி நாலு நாள் கூட இன்னும் ஆகல்லே; அதுக்குள்ளே விட்டுப் பிரிய மனசு இல்லேங்கிறியே!"

"கிடைக்காத சொத்து கிடைச்சிருக்கு. அதை வச்சிக்கணுமின்னு ஆசை இருக் காதா, சொல்லுங்க."

"அதென்னவோ, நான் உன்னை அவ சரப்படுத்தல்லே. நீ நல்லா உட்கார்ந்து யோசனை பண்ணிப்பிட்டு வந்து என் கிட்டே சொல்லு. போதும்."

நாகப்பன் கும்பிடு போட்டுவிட்டு, அவரிடமிருந்து நழுவி வந்து விட்டதா கச் சந்தோஷப்பட்டுக் கொண்டே நடந் தான். ஆனால் உண்மையில் முதலாளியி னுடைய காளைக் காதல் சிறிதும் குறைய வில்லை யென்பது அவனுக்குப் போகப்

போகத்தான் தெரிந்தது. ஒரு மாதத்திற்கு ஒரு முறையாவது அவனை அழைத்து வர அவர் ஆள் அனுப்பிவிடுவார். "அந்த மாட்டிற்கு ஆகாரம் போட்டுக் காப்பாத்தறது இலேசுப்பட்ட காரியமின்னு நெனச்சிக்காதேப்பா! எத்தனை புண்ணாக்கும் பருத்திக் கொட்டையும் வச்சாலும், இன்னம் இன்னமின்னு கேட்டுக்கிட்டேதான் இருக்கும். அதைப் பரிபாலிக்கறதுக்கு உன் வரும்படியே போறாது!" என்று ஒரு தரம் அவனுக்கு உபதேசம் செய்தார்.

கண்கட்டு மயிலையின் மேல் முதலாளி அவ்வளவு தூரம் கண் வைத்திருந்ததற்குக் காரணம் இருந்தது. அவரோ பெரிய பண்ணை முதலாளி. நாகப்பன் சாதாரண உழைப்பாளி. அவனுக்குச் சொந்தமாகக் கொஞ்சம் நிலம் உண்டு. அதன் ஒரு பகுதியில்தான் அவனும் அவன் மனைவியும் வசித்து வந்தனர். பாக்கி இடத்தில் ஒரு சிறிய தோட்டம் போட்டிருந்தான். கத்தரிக்காய், வெண்டைக்காய், தக்காளி — இத்தியாதி காய்கறி வகைகளைப் பயிரிட்டிருந்தான். அந்தந்த வார விளைச்சலைச் சந்தையில் கொண்டு போய் விற்றால், அந்தத் தம்பதிகள் உயிர் வாழ்வதற்குப் போதிய பணம் கிடைக்கும்.

இப்படிப்பட்ட ஒரு சின்ன கறிகாய்த் தோட்டக்காரன் ஆனந்தமாக ஒய்யார நடை போட்டுச் செல்லும் கண்கட்டு மயிலைக் காளை பொன்று இழுத்துச் செல்லும் வண்டியில் போவது முதலாளி கண்ணை உறுத்தியது. வாரா வாரம் சந்தை தினத்தன்று சலங்கை நாதத்தின் கம்பீரத்துடன் அசைந்தாடிக்கொண்டே போகும் நாகப்பனின் வண்டியைப் பார்க்கும் பொழுதெல்லாம் அவருக்கு ஆத்திரம் பொங்கி வந்தது.

ஒரு சமயம் முதலாளி நாகப்பனிடம் நேருக்கு நேராகவே இதைச் சொன்னார்:

"நாகப்பா, நானோ ஒரு பண்ணை முதலாளி. நீயோ சாதாரணத் தோட்டக்காரன். நீ மயிலைக் காளை வச்சிண்டிருப்பது அவ்வளவு பொருத்தமாயில்லை. கம்பீரமாய் அந்தக் காளை பூட்டின வண்டியிலே போகணுமின்னு எனக்கு ஆசை. உனக்கெதுக்கு இந்த வீண் டாம்பீகமெல்லாம்?"

அவர் இதோடு நிறுத்திக் கொள்ளவில்லை. ஒரு படி மேலேயே சொன்னார்:

"நீ சந்தைக்குப் போறதைப் பார்த்து எல்லாரும் கண் பூரிக்கப் போறாங்கன்னு நெனச்சிக்காதே. உன் வண்டி அந்தண்டை போனதும் விளக்கு மாத்துக்குப் பட்டுக் குஞ்சலம் வேண்டிக் கிடக்கான்னு கேலி பண்ணறாங்க. எனக்கே ரொம்ப வருத்தமாய் இருந்திச்சி. அவங்க சொல்றதும் வாஸ்தவம்தானே? உன்னோட அந்தஸ்துக்கு மயிலைக் காளை கட்டின வண்டி வேறே வேணுமா என்ன?"



பண்ணையாருக்குக் காளையின் மீது விழுந்த கண் விரிந்து கொண்டே சென்றது.

## 4

நாகப்பனும் அவன் மனைவியும் அன்னியோன்னிய தம்பதிகள். நன்றாய் உழைப்பார்கள். நாலு காசு சம்பாதித்து, நல்ல வழியில் வயிற்றைக் கழுவுபவர்கள். இத்தனைக்கும் வயதென்னவோ ஐம்பதிற்கருகில் ஓடிக் கொண்டிருந்தது. குழந்தை, குட்டி ஏதும் இல்லாத அவ்விருவருக்கும் மயிலை உகந்த குழந்தையாக இருந்து வந்தது. எந்த வாரத்திலாவது வரும்படி குறைந்து போய்விட்டால், உள்ள பணத்தில் அவர்கள் முதலில் மயிலைக்கு வேண்டிய புண்ணாக்கு, பருத்திக் கொட்டையெல்லாம் வாங்கி வைத்து விட்டுத்தான் தம் செலவை ஆரம்பிப்பார்கள்.

காளையும் நன்றாய்க் கொழு கொழுவென்று விளங்கியது. நாகப்பன் பண்ணையாரின் ஆசை காட்டும் சொற்களுக்குச் சிறிதும் அடிமையாகக் கூடாது என்று பிடிவாதமாக இருந்தான். கிழவன் தன் முழு அன்பையும் அதன் மேல் வைத்திருந்தான். தான் பணத்திற்கு அடிமையல்ல என்பதைக் கடைசி வரை இருந்து நிரூபித்துக் காட்ட வேண்டும் என்று மனதில் திட்டமிட்டிருந்தான்.

இதையெல்லாம் தகர்த்தெறியும்படி செய்யத்தானோ என்னவோ, திடீரென்று ஒரு நாள் நாகப்பனின் மனைவி படுத்த படுக்கையாகி விட்டாள். அவன் பட்டணத்துக்கு வண்டி கட்டிக் கொண்டு சென்று டாக்டரை அழைத்து வந்தான். வந்தவர் ரப்பர்க் குழாயினால் தன் காதிற்கும் கோடாளியின் உடலுக்கும் பாலம் அமைத்துப் பரிசோதித்தார். அவர் வேறொன்றும் பேசவில்லை. "கனையாக நூறு ரூபாய் எடுத்துத் தனியே இந்த வைத்தியத்திற்கென்று வைத்தாகணும். உம்மால் முடியுமா?" என்று கேட்டார்.

இக்கேள்விக்குப் பதிலாகக் கிழவன் தலையைச் சொறிந்தான். "நான் அதிகப்படியாக ஒன்றும் சொல்லவில்லை. மருந்துச் செலவு ஊசி போடறதுக்கான சார்ஜ்—இவ்வளவுதான்! நான் போறேன். நீ யோசனை பண்ணிவிட்டு வந்து சொல்லும்" என்று கூறிவிட்டு டாக்டர் நடையைக் கட்டினார். கொஞ்ச தூரம் சென்ற பின் டாக்டரைக் கிழவன் துரத்திக் கொண்டு சென்றான்.

"ஆமாங்க; ஒரே ஒரு சந்தேகம்...."

"என்ன?"

"பணம் செலவழிச்சா, நிச்சயம் உடம்பு குணமாயிடுமில்லே?"

"இது தீராத வியாதியில்லே, பணம் செலவழிச்சு வைத்தியம் பண்ணினால் தானாக ஓடிப் போய்விடும்" எனக் கூறிவிட்டு டாக்டர் சென்றார்.

நாகப்பனுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. நூறு ரூபாய் என்பது அவன் சுமார் பத்துப் பன்னிரண்டு வாரத்தில் சம்பாதிக்கும் பணம். இப்போது ஒரே சமயத்தில் நூறு ரூபாயை எடுத்து எதிரே வைத்தால்தான், டாக்டர் வைத்தியத்தை ஆரம்பிப்பார். அவனிடம் உள்ள சொத்து வண்டியும் மாடும்தான். வண்டியோ அந்தக் காலத்து வண்டி. அது போய்விட்டால் பட்டணத்துக்குப் போய் மருந்து ஏதாவது வாங்குவதென்றால் என்ன செய்வது?

ஆக, மயிலையின் தலையில்தான் வந்து விடிந்தது. நாகப்பனுக்கு மயிலையை விட்டுப் பிரிய இஷ்டமில்லை. அது வீட்டில் லக்ஷ்மீகரமாக அழகாய் நின்று கொண்டிருந்தாலே சகல வியாதிகளும் தீர்ந்து விடுமே என்று அவனது மனம் ஒரு புறம் எண்ணியது. நாற்பது வருஷத்திற்கு மேலாக, கூட இருந்து உதவியுள்ள மனைவியின் உயிரைவிட, ஐந்தாறு வருஷ சகவாசமான காளைமாடு பெரிதில்லையென்று அவனுக்கே உறைத்தது தவிர, வயதான கட்டைதானே? சாகட்டுமே என்று விட்டு விடுவதும் தப்பு. ஏனென்றால், பணம் செலவழித்தால் உயிர் நிச்சயம் தேறிவிடும் என்று டாக்டர் சொல்லியிருக்கிறாரே!

இப்படி நாகப்பனது சிந்தனை ஓடிக் கொண்டிருந்தது.

## 5

"நாத்தா இருக்காங்களா?"

பண்ணையாரினால் அனுப்பப்பட்டிருந்த சோலைமுத்துவின் குரல்தான் அது. நாகப்பன் வெளியே வந்து எட்டிப் பார்த்தான். அப்போதுதான் அவன் மனதிற்குள் மயிலையை முதலாளியிடம் விற்றுவிட வேண்டும் என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தான். அதே சமயத்தில் சகுனம் போல முதலாளியிடமிருந்து சோலைமுத்து வந்து கூப்பிட்டது நாகப்பனின் எண்ணத்திற்குத் தூபம் போட்டது. மறு பேச்சுப் பேசாமல் துண்டை எடுத்துப் போட்டுக்கொண்டு கிழவன் சோலைமுத்துவுடன் நடந்தான்.

மயிலையை விற்றுவிடாமல், பட்டணத்தில் எந்தச் செட்டியிடமாவது அதை அடகு வைத்து விட்டுப் பணம் வாங்கி வரலாம் என்ற யோசனை முதலில் அவனுக்குத் தோன்றியது. ஆனால் அதில்

உள்ள தொல்லைகள் அவன் கண் எதிரே தெளிவாய்த் தெரிந்தன. இந்தத் தேதிக்குள் பணத்தைக் கொடுத்து விட்டு, மாட்டை மீட்டுக்கொண்டு போகலாம் என்று எழுதிக் கொடுப்பான் சேட். எப்படியோ கெடுவிற்குள் பணம் திருப்பித் தர முடியாதபடி போய்விட்டால், ஆசைக்காரப் பயல்கள் அருமைக் காளையைச் சொந்தப்படுத்திக் கொள்வார்கள். அதோடு, இடைக்காலத்தில் காளைக்குச் சரியான ஆகாரம் போடாமல் பட்டினி போட்டுச் சாக அடித்தால்கூடக் கேள்வி முறை இராது.

முதலாளி மயிலைக்கு நிறையத் தீனியாவது போடுவார். அது மட்டும் நிச்சயம் என்று நினைத்துத்தான் நாகப்பன் மயிலையை விற்க உட்பட்டான். முதலாளி இருநூறு ரூபாய் எடுத்துக் கொடுத்தார். நாகப்பன் காளையைக் கொண்டு போய் அங்கே விட்டுவிட்டு வந்தான். அவனுக்கு என்ன தைரியம் என்றால், எப்படியோ பெண்டாட்டி பிழைத்துக் கொண்டாளானால், போதும். அப்புறம் மிக மிகச் செட்டாகக் குடித்தனம் பண்ணி இந்நூறு ரூபாய் மீத்த முடியாதா, என்ன? இந்நூறு ரூபாயை நீட்டினால் முதலாளி மூந்நூறு ரூபாய் கனியாக லாபம் கிடைக்கிறதே என்று மயிலையைத் திருப்பிக் கொடுத்து விடுவார். என்ன இருந்தாலும், அவருக்கு மயிலையைவிடப் பணமே பெரிதென்பது உலக மறிந்த விஷயம். இல்லாவிட்டால் அவர் மயிலையின் விலையை இருநூற்றுக்குமேல் உயர்த்திக் கேட்கப் படாதோ?

இவ்வாறு எண்ணிய வண்ணம் கிழவன் பணத்துடன் வீடு திரும்பினான். அங்கே பண்ணையாரிடத்தில் கண்கட்டு மயிலை தன் லீலா விநோதங்களை யெல்லாம் ஆரம்பித்துவிட்டது. நான்கைந்து நாட்கள் ஓடிவிட்டன. காளை தீனியில் வாயை வைக்கவில்லை. சோலைமுத்து அருகில் சென்றால், 'உர், உர்' என்று உறுமிக்கொண்டே அது விரட்ட வந்தது.

சோலைமுத்து பல மாடுகளுடன் பழகி அனுபவம் உள்ளவன். அவனுக்குக் காரணம் புரிந்துவிட்டது. காளை இன்னும் நாகப்பனைத்தான் தன் எசமானனாகக் கருதியது. ஒருவரும் அதை அண்ட முடியவில்லை. எட்டி நின்றவாறு ஒரு நீண்ட கழியினால்தான் பருத்திக் கொட்டைத் தண்ணீரைச் சோலை கலக்கி விடுவான். ஹூஹூம்; அது இதை யெல்லாம் ஏறிட்டுக்கூடப் பார்க்கவில்லை.

மயிலையை வண்டியில் பூட்டுவதற்குப் பண்ணையில் உள்ள அவ்வளவு பேரும் முயன்று பார்த்தனர். அது அசைந்து கொடுக்கவில்லை. முதலாளி, "இரட்டை மாட்டு வண்டியில் போட்டுப் பார். இன்னொரு மாடு பக்கத்தில் இருந்தா, ஒரு சமயம் உற்சாகமாய் ஓடினாலும் ஓடும்" என்று கூறிய யோசனையையும் பரிசோதித்துப் பார்த்தார்கள். நுகத்தடி கழுத்தில் ஏறியதும், மயிலை அப்படியே தரையில் படுத்து விட்டது. உடனே, மற்றதும் உட்கார்ந்து விட்டது. "இது என்ன கம்யூனிஸ்டாய் இருக்கும்போல் இருக்கே! தான் வேலை செய்யாததோடு அடுத்தது செய்யறதையும் கெடுக்கப் பார்க்குதே!" என்று சொல்லிக் கொண்டே முதலாளி சென்றுவிட்டார்.

அவருக்குக் கோபம் பீறிட்டுக்கொண்டு வந்தது. புதுச் சலங்கை கழுத்து நிறைய வாங்கிக் கட்டி, அதன் ஓசையுடன் கம்பீரமாக மயிலை இழுக்கும் வண்டியில் 'ஜாம், ஜாம்' என்று செல்லவேண்டும் என்று திட்டமிட் டிருந்ததெல்லாம் வீணாயிற்று. ஒரு நாள் அவரே துணிவுடன் அதன் அருகே சென்று அதை வழிக்குக் கொண்டுவரப் பார்த்தார். அதன் பலன் காளையின் கூர்மையான கொம்பு அவருடைய கையில் இரண்டங்குலம் உள்ளே பாய்ந்துவிட, 'இது என்ன கைக்கட்டு?' என்று குசலம் விசாரிப்போரிடம் அவர் அவமானப்பட வேண்டி யிருந்தது.

வண்டி இழுக்கிறதோ, இல்லையோ— போனால் போகிறது. கொடுக்கிற தீனியையாவது தின்னக் கூடாதா?

நாளுக்குநாள் மயிலையின் உருவம் வெகு விகாரமாய் மாறிக் கொண்டு வந்தது. வெறும் எலும்புக் கூடாய்த்தான் தோற்ற



"அந்தப் புதிய பிளேட்டில் ரசமே யில்லை என்று சொன்னீர்களே? இதோ ரசம் கொண்டு வந்திருக்கிறேன். கொஞ்சம் இதை விட்டுப் பாருங்கள்!"

மளித்தது. பார்க்கப் பார்க்க அது பயங்கரப் பிசாசு போலக் காட்சி யளித்தது. ஒரு காலத்தில் மிகவும் பருமனாக இருந்த கன்குட்டி மயிலைதான் அது என்றுகூட ஒருவரும் ஒப்புக்கொள்ள முடியாதபடி, அது மாறிக்கொண்டே வந்தது.

## 6

டாக்டர் வாக்கு சற்றும் பிறழவில்லை. நாகப்பனின் மனைவி எழுந்து நடமாட ஆரம்பித்து விட்டாள். நூறு ரூபாய் தட்சணை ஆரம்பத்திலேயே கொடுத்தாகி விட்டது. எனவே, அவன் தோட்டத்துக் காய்கறிகள் ஒரு பை நிறையப் பறித்துக் கொண்டுபோய் அவரிடம் கொடுத்து விட்டு வந்தான். பெண்சாதிக்குத் தலைக்கு ஜலம் விட்டாயிற்று. நூறு ரூபாய் வீண் போகவில்லை யென்று அவனுக்குத் திருப்திதான்!

இனி மயிலையை மீட்டாக வேண்டுமே யென்ற கவலை பிடித்துக் கொண்டது. அவன் மயிலையின் விலைக்குப் பண்ணை முதலாளியிடம் வாங்கிய பணத்தில் நூறு ரூபாய் எஞ்சியிருந்தது. அந் நூறு ரூபாயைக் கொண்டு போய்க் கொடுத்து பாக்கியைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தருவதாகச் சொல்லி மாட்டை மீட்டுக் கொண்டு வரவேண்டும் என்று முடிவு செய்தான்.

அப்போது வாசலில் யாரோ பண்ணையான் வந்து அவனை அழைத்தான். நாகப்பன் நூறு ரூபாயுடன் முதலாளியிடம் சென்றான். முதலாளி அவனை விசாரித்தார்:

"பொஞ்சாதி உடம்பு தேவலையில்லே?"

"தேவலைங்க; தலைக்குத் தண்ணிகூட விட்டாயிடுத்துங்க!"

"பார்த்தியா, நான் உன் பொஞ்சாதி பிழைக்கணுமின்னு மனசிலே நல்ல எண்ணத்தோடேதான் உனக்கு இருநூறு ரூபாய் கொடுத்தேன். ஆனால், நீ மயிலையை நல்ல எண்ணத்தோடே கொடுக்கல்லே. இதோ பார்!" என்று முதலாளி கைக் காயத்தை அவிழ்த்து அவனிடம் காட்டினார்.

"அதுக்கு உங்களைப் பரிச்சயம் இல்லாததினாலேதான் இப்படிப் பண்ணிப் புட்டுது. இப்ப நான் வந்து நிக்கறேன். என் எதிரே உங்களை ஏதும் பண்ணுதா, பாருங்க!" என்று நாகப்பன் சமாதானம் கூறினான். அதற்கேற்றாற் போல் அதுவும் அப்போது வெகு சாதுபோல் அவருக்குக் கழுத்தைக் காட்டிக் கொண்டு நின்றது.

"எனக்கு இதைத் திருப்பிக் கொடுத்துடுங்க. பின்னாடி நூறு ரூபாய் கொண்டு வந்து தரேன். இப்ப நூறு ரூபாய் தான் இருக்கு!" என்று நாகப்பன் வாயெடுத்ததும், முதலாளி கூறினார்:

"நல்லா எடுத்துக்கிட்டுப் போ. நமக்கு இந்த மயிலை ஆசையே விட்டுப் போச்சு! எப்படியாவது அதை இங்கிருந்து நீ கொண்டு போனால் சரி. நீ இப்போது கொடுக்கிற நூறு ரூபாயே எனக்குப் போதும். பழைய விலைக்கு இதைக் கொண்டுவர நீ இன்னும் நூறு ரூபாய் ஆகாரமாவது போட வேண்டாமா?"

அவ்வளவுதான்; நாகப்பன் அதற்கு மேல் அங்கே நிற்கவில்லை. அவன் என்ன பைத்தியமா? அவன் தன் மயிலையுடன் கம்பீரமாக நடந்து சென்றான்.



டாடா கம்பெனி-மதராஸ் பிராஞ்சின் உதவி மானேஜர் ஸ்ரீ டி. என். கிருஷ்ணய்யரின் குமாரியும், ஸ்ரீவைகுண்டம் வீரபாகு ஓதுவாரின் சிஷ்யையுமான பேபி ராதாவின் பரத நாட்டிய அரங்கேற்றம், மயிலை ரஸிக ரஞ்சனி சபா ஹாலில் இந்த மாதம் 6-ம் தேதி இனிது நடந்தேறியது. அன்று கூடி ரஸித்து ஆனந்தித்த பல ரஸிக அபிமானிகளது ஆசிகளுடன் குழந்தைக்கு நமது ஆசியையும் சேர்த்துவிட விரும்புகிறோம்.

# நரிக்காட்டு ராஜா



எஸ். கோபாலன்

மொழிபெயர்ப்பு: எஸ்.வி.எஸ்

## 9. விசித்திரச் சந்திப்பு

மாலையின் மயங்கொளி மறைந்து, வெண்ணிலவின் ஆட்சி தொடங்கி விட்டது.

அந்த மயங்கொளியில் பயங்கரமாகக் காட்சியளித்த வயல்களும் வரப்புகளும் இப்போது நிலவொளியில் அழகு பெற்றுப் பொலிந்தன.

இந்த வேளையில் அந்த இரு போலீஸ்காரர்களும், மாதுவுக்குக் கைவிலங்கு மாட்டி, அழைத்துச் சென்று கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு முன்னும் பின்னும் எங்கும் ஒரே வயல்களும் வரப்புகளும் காட்சியளித்தன. ஒவ்வொரு சமயம் தூரத்தே வரப்புகளின் மேல் இரட்டை மாட்டு வண்டி செல்வது தெரியும். அதுவும் சற்று நாழிகை கண்ணுக்குத் தோன்றித் தோன்றி மறைந்து கடைசியில் பக்கத்துக் கிராமத்துக்குப் போய்ச் சேர்ந்துவிடும். அதற்குப் பிறகு ஒரே நிச்சப்தம்தான்.

அவர்கள் ஊர்க்கோடிக்கு வந்தபோது, குறவன் போந்தலி, தன் மனைவியுடன் வந்து சேர்ந்தான். மாதுவைப் பார்த்ததும், அவனுக்குப் பழைய கோபம் எல்லாம் ஞாபகம் வந்து விட்டது. அந்த ஆத்திரத்தில் "வேணும், உனக்கு நன்றாக வேண்டும்" என்று ஆள்காட்டி விரலைக் காட்டிக் கருவினான்.

இரு போலீஸ்காரர்களும் வரப்புமேல் மிகச் சிரமப்பட்டு நடந்தார்கள். மாது கையில் விலங்குடன் அவர்களைப் பின் தொடர்ந்தான். இப்படி நல்ல நரிக்காட்டிலிருந்து இரண்டு மைல் தூரம் வந்து விட்டார்கள். என்றாலும், அவர்கள் இதுவரை ஒருவருக்கொருவர் ஒரு வார்த்தைகூடப் பேசிக் கொள்ளவில்லை. ஆம், அவர்கள் எதைப் பற்றித்தான் பேசுவார்கள்? மாது பிடிபட்டது பற்றிப் பேச அது ஒரு அதிசயமான விஷயமல்ல அவர்களுக்கு. ஆகவே அவர்களுக்குப் பேசுவதற்கே ஒன்றுமிருக்கவில்லை. ஆனால் அவர்கள் போய்ச் சேர வேண்டிய போலீஸ் ஸ்டேஷன் இன்னும் சில மைல்கள் தூரத்திலிருந்தது. இந்த மணற்பாங்கான வழியல்லாத வழியில் நடக்க வேண்டியிருந்தது. ஆகவே, அவர்கள் துரிதமாக நடந்து கொண்டிருந்தனர்.

நல்ல நரிக்காட்டிலிருந்து சரியாக இரண்டாவது மைலில் காளி வயல் என்ற ஒரு 'பொட்டல்' இருந்தது. இது காளிக்குத்தான் சொந்தம் என்பதை அறிவுறுத்தும் வண்ணம், அந்த வயலின் ஒரு மூலையிலிருந்த வேப்பமரத் தடியில் ஒரு திரிசூலம் பூமியில் நடப்பட்டிருந்தது. ஆகவே இந்த வயலில் யாரும் உழுவது கிடையாது. ஆனால் சுற்றுவட்டாரக் கிராமங்களிலிருந்து மக்கள் திரண்டு வந்து வருஷத்தில் ஒரு நாள் பூஜை பண்ணுவது வழக்கம். அந்த ஒரு நாள் தவிர்த்து மற்ற நாட்களில் இங்கு யாரும் வருவது கூடக் கிடையாது.

இந்த இடத்துக்கு அந்தப் போலீஸ்காரர்கள் மாதுவுடன் வந்து சேர்ந்தார்கள். போலீஸ் ஸ்டேஷன் போய்ச் சேருவதற்கு வேறு ஒரு வழியும் இருந்தது. ஆனால் அது சற்று சுற்று வழி; இது குறுக்கு வழி. ஆகவே, இந்த வழியாக வந்தார்கள். காளிவயலில், அடியெடுத்து வைத்துக் கொஞ்ச தூரம்தான் போயிருப்பார்கள்; அப்பொழுது ஒரு நரி குறுக்கே போயிற்று.

"நரி வலமாகப் போனால் நல்லதா? இடமாகப் போனால் நல்லதா?" என்று கேட்டான் அந்தப் போலீஸ்காரர்களில் ஒருவன் நீண்ட நேர மௌனத்துக்குப் பிறகு.

"இடமிருந்து வலம் போனாலும் வலமிருந்து இடம் போனாலும் மேலே

விழுந்து பிடுங்காமற்போனால் போதும்!" என்றான் அடுத்தவன் அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே.

அவர்கள் பேசிக் கொண்டது போல், மேலே விழுந்து பிடுங்காமல் போகிற வரைக்கும், நரி எப்படிக் குறுக்கிட்டாலும், ஆச்சரியப்பட வேண்டியதில்லை. ஆனால் சாதாரணமாக நரி மனிதனைக் கண்டு விட்டால், துள்ளி ஓடிப் புதருக்குள் மறைந்து கொள்ளும். ஆனால் இந்த நரியோ, அவர்களைக் குறுக்கிட்டபோது, நன்றாகத் திரும்பி அவர்களைப் பார்த்துக் கொண்டே போயிற்று. அத்துடன் முடிந்துவிடவில்லை விஷயம். அந்த நரி அவர்கள் முன்னால் பின்னங் கால்களில் உட்கார்ந்துகொண்டு ஊளையிட ஆரம்பித்தது. நரி இப்படிச் செய்வது அவர்களுக்கு விசித்திரமாக இருந்தது.

ஒரு போலீஸ்காரன் அதன்மேல் ஒரு கழியை விட்டெறிந்தான். இது, அவர்கள் வழியிலிருந்து நரியைச் சற்று விலகச் செய்ததே ஒழிய வேறு கணிசமான பலனளிக்கவில்லை. எனினும் மேலே நடப்போம் என்று அவர்கள் அடி எடுத்து முன்னால் வைத்தார்களோ இல்லையோ, எங்கிருந்தோ இன்னொரு நரி வருவதைப் பார்த்தார்கள். உடனே, அவை யிரண்டுமாகச் சேர்ந்து கொண்டு ஊளையிட்டன. போலீஸ்காரர்களுக்கு இது ஒரு கெட்ட சகுனமாகத் தோன்றியது. அதுமட்டுமல்ல, நரிகளின் இந்தத் துணிச்சலைக் கண்டு திகைத்துவிட்டனர்.

அவர்கள் 'ஊஸ்ஸ்' என்று கையும் காலும் ஆட்டி விரட்டப் பார்த்தனர்; அடிக்க ஓடினர். ஆனால் எல்லாத் திசைகளிலிருந்தும் நரிகள் ஒன்றன்பின் ஒன்றாக வரத் தொடங்கின. இதைப் பார்த்தபோது அவர்களுக்கும் பயமும் ஆச்சரியமும் ஏற்பட்டன!

ஒருசில வினாடிகளில் ஆயிரத்துக்கு மேற்பட்ட நரிகள் காளிவயல் பூராவும் அடைத்துக் கொண்டன.

அத்தனை நரிகளும் அவர்கள் இருவர் முன்பு நெருக்கமாக உட்கார்ந்துகொண்டு சந்திரனைப் பார்த்து ஊளையிட்டன. போலீஸ்காரர்கள் பயந்து நடுங்கிக் கொண்டிருந்தனர். ஆனாலும், அவர்கள் தங்கள் பயத்தை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல், முன்னேறி நடந்தால் நரிகள் தாமாகவே போய்விடும் என்று பரிபூரணமாக நம்பினார்கள். அந்த நம்பிக்கை யெல்லாம் அடுத்த கணம் தவிடு பொடியாகி விட்டது!

ஆம், அவர்கள் முன்னால் சற்று நகர்ந்தார்களோ இல்லையோ, 'எட்'டின் 'ரைட் அபவுட் டர்ன்' என்ற கட்டளையைப் பெற்றதும், போலீஸ் பட்டாளம் திரும்புவது போல், அத்தனை நரிகளும் நேரே பின்னால் திரும்பி, தம் பின் கால்களால் அவர்கள் கண்ணில் மண்ணைத் தூவ ஆரம்பித்தன.

வானமண்டலமெங்கும் தூசி பரவிவிட்டது. தூசி போலீஸ்காரர்கள் மூக்கில் புகுந்து விட்டன; தும்மினார்கள்; சிந்தி



னார்கள்; கத்தினார்கள். மாதுகூடத் தும்மினான். ஆம், ஆயிரம் நரிகள் கூடிக் கொண்டு மண் தூவுகின்றன என்றால் அது சாதாரண விஷயமல்ல. ஆனால் மாது வுக்கோ ஒரே சந்தோஷம். அந்தச் சந் தோஷத்தில் விழுந்து விழுந்து சிரித்தான். இந்தச் சிரிப்பைப் பார்த்த போலீஸ் காரர்கள், தங்கள் பயத்தில் நூற்றில் ஒரு பங்குகூட மாது பயப்படவில்லையே! இது என்ன ஆச்சரியம்? என்று வியந்தார்கள்.

ஆனால் நிமிஷத்துக்கு நிமிஷம் நிலைமை மோசமாகி வந்தது. அந்த நரிக் கூட் டத்தை அடித்து விரட்டிவிடலாம் என்று இனியும் நினைப்பது மடமை என்பதை உணர்ந்தார்கள். மேலும், நரிகள் மண் ணைத் தூவிக்கொண்டே பின்புறமாக நகர்ந்தன. நகர்ந்து அவர்களை நெருங்கி விட்டன. ஆகவே இனியும் அவ்விடத் தில் அசையாமல் நிற்பது உசிதமில்லை என்று எண்ணினார்கள். அவர்களுக்கு ஒரே ஒரு வழிதான் தென்பட்டது. காளி வயலை விட்டு, வெளியேறிச் சுற்று வழி யாகப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகத் தீர்மானித்தார்கள். ஒரு விநாடிகூட வீணாக்காமல் மாதுவின் இரு கைகளை யும், ஆளுக்கு ஒரு கையாகப் பிடித்துக் கொண்டு வந்த வழியே திரும்ப ஓடத் தலைப்பட்டனர்.

இவ்விதம் நரிகளுக்குத் தாங்கள் தோற் றுப் போனதைப் போலீஸ்காரர்கள் ஒப் புக் கொண்டார்கள். ஆனால் நரிகள் அத் துடன் திருப்தி யடையவில்லை. அவைகள் இன்னும் ஏதோ விரும்பின.

ஆகவே நரிகள் அவர்களைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டு ஊளையிடலாயின. ஒரு சமயம் அவர்கள் காலடியில் நெருங்கி வந்து வால்களை ஆட்டின. அடுத்த நிமி ஷம் தூர விலகிச் சுற்றி நின்று நடனம் புரிந்தன. மொத்தத்தில் போலீஸ் காரர்கள் மேற்கொண்டு ஒரு அடி எடுத்து வைக்க முடியாமல் செய்து விட்டன. அவர்களோ, நிலவின் ஒளி யில் நரிகளின் கண்களில் விஷமத்தனம் ஜொலிப்பதையும், வால்களை ஆட்டு வதையும் நன்கு கவனித்தார்கள்.

இந்த நரிகளின் கூட்டத்துக்கு அவசரக் குடுக்கைதான் தலைமை தாங்கியது. அத னுடைய உற்சாகமான துள்ளலும், குதிப் பும் அவர்கள் முன்னும் பின்னும் நகர விடாமற் செய்து விட்டன. இதனிடை யில் மூத்தண்ணு நரிக் கூட்டத்தை விலக்கி மாதுவின் பக்கத்தில் போய் நின்றுவிட்டது. ஆம், என்ன இருந்தா லும் மூத்தண்ணு பெரிய தலைவர். வரு கின்ற சந்ததியின் கையில் தலைமையை வழங்கிவிட்டு, மேற்பார்வை பார்த்துக்



கொண்டிருந்தது! பயத்திலும் நடுக்கத் திலும் போலீஸ்காரர்கள் அந்தப் புழு தியை ஊடுருவி ஒரு முறை மூத்தண்ணு வைப் பார்க்க விரும்பினர். அதற்குள் எங்கிருந்தோ 'இடி இடி' என்று சிரிப் பொலி வந்தது. அவ்விதம் சிரித்தது மாதுதான் என்பதைப் பார்த்தார்கள். ஆனால் அவர்களுக்கிருந்த நடுக்கத்திலும் பயத்திலும், அவனுடைய அர்த்தமற்ற கேலிச் சிரிப்பைக் கண்டிக்க நேரமிருக்க வில்லை.

இருவரும் "இன்று நாம் தொலைந் தோம்" என்று முடிவு கட்டிவிட்டனர். ஆயினும், உயிர்த் தப்பிப் பிழைக்க ஓட லாமா என்று யோசித்தனர். அதற்குக் காரணம், நரிகள் கூட்டத்தினின்று ஓட முயல்வது ஆபத்தை விளைக்கும் என்று கேள்விப்பட்டிருந்தார்கள். ஆனால், இப் பொழுது ஓடுவது தவிர வேறு வழி யில்லை. எப்படியும் தங்களை அந்த நரிகள் பின்தொடரும் என்று பயந்துகொண்டே ஓடினார்கள். ஆனால் அவர்கள் வெகு சீக்கிரத்திலேயே நரிகள் தங்களைத் துரத்தவில்லை என்பதை உணர்ந்தார்கள்!

கொஞ்ச தூரம் ஓடின பிறகு திரும்பிப் பார்த்தார்கள். தங்கள் கைதியை நரிகள் சூழ்ந்து கொண்டிருப்பதையும், தங்களைப் பற்றிப் பொருட்படுத்தாததையும் பார்த் தார்கள். அவர்களுக்கு மாதுவின் மீது அளவு கடந்த அனுதாபம் உண்டா யிற்று. 'பாவம், அவனை அந்த நரிகளிட மிருந்து காப்பாற்றாமல் வந்து விட் டோமே' என்று தங்களையே குறைகூறிக் கொண்டார்கள். அவர்கள் மாதுவை அந்த நரிகள் கண்டம் துண்டமாகக் கடிக்கும் என்றும், மாது 'குய்யோ முறையோ' என்று அலறுவான் என்றும்

எதிர்பார்த்தார்கள். அம்மாதிரியெல்லாம் ஒன்றும் நேர்ந்துவிடவில்லை. அதற்கு மாறாக அவனிடமிருந்து சந்தோஷ ஆரவாரம் வருவதைக் கேட்டார்கள். அவர்களுக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது. அத்துடன் சிறுவன் தனக்குகந்த கூட்டத்தில் போய்ச் சேர்ந்து விட்டான் என்பதும் அவர்களுக்குத் தெளிவாகப் புரிந்தது.

மற்றுமொரு முறை நரிகள் தம்மைத் தாக்காமலிருக்கும் பொருட்டும், நரிகள் என்ன செய்கின்றன என்று பார்க்கும் பொருட்டும் ஒரு மரத்தின் மேல் ஏறிக் கொண்டார்கள். மரத்தில்சௌகரியமான இடத்திலிருந்து அவர்கள் ஒரு காட்சியைக் கண்டார்கள். அந்தக் காட்சியை அவர்கள் ஆயுள் முழுதும் மறக்க முடியாது. அந்தக் காட்சியைப் பற்றித் தங்கள் தோழர்களுக் கெல்லாம் வாழ்நாள் முழுதும் கூறிக் கூறி அலுக்கவும் முடியாது.

சுமார் இருபது நரிகள் மாது விடம் சென்று நெருக்கமாக நின்றன. இருபது நரிகளின் முதுகுகளும் ஒன்று சேர்ந்து ஒரு விசாலமான ஆசனமாயின. மாது தன் விலங்கிட்ட கைகளுடன் அவற்றின் முதுகின் மேல் ஏறிச் சௌகரியமாக அமர்ந்தான். மற்ற நரிகள் ஊர்வலத்துக்கு முன்னால் போவதுபோல் சென்றன. மாது இந்த விசித்திர வாகனத்தில் ஏறிச் சென்றான்.

இப்பொழுதுதான் அந்தப் போலீஸ்காரர்களுக்குத் தாங்கள் அழவேண்டும் போல் தோன்றிய சமயங்களில் எல்லாம் மாது விழுந்து விழுந்து சிரித்ததின் பொருள் விளங்கியது.

## 12. பிரிவுப் பிரசங்கம்

அப்பொழுது மணி எட்டு. வெளியே பூரண சந்திரன் வெண் மணலைப் பால் நிறமாக மாற்றிக்கொண்டிருந்தான். கருமான் கப்பன் தன் சிறு குடிசையில் மும்முரமாக வேலை செய்து கொண்டிருந்தான்.

கப்பன் சூரியாஸ்தமனமாயதும் தன் குடிசையை மூடுவது வழக்கம். இன்று வழக்கத்தைவிட அதிக நேரம் வேலை செய்ய வேண்டியிருந்தது. பெரிய ஏரியிலிருந்த பெரிய செட்டியார் ஒருவருடைய வண்டியை 'ரிப்பேர்' செய்து மறு நாள் காலை கொடுப்பதாகச் சொல்லியிருந்தான். அதனால்தான் அத்தனை நேரமாகியும் வேலை செய்து கொண்டிருந்தான். இதனால் கப்பன், சொன்னது சொன்னபடி சொன்ன நேரத்தில் எதையும் கொடுத்து விடுபவன் என்றோ, அவன் குலத்தாரிடமிருந்து இவ் விஷயத்தில் முற்றும் மாறுபட்டவன் என்றோ எண்ணிவிடவேண்டாம். பெரிய செட்டியார் நல்ல பணக்காரர். மேலும் ஒரு மாத காலமாக அவனுக்கு நல்ல வருமானமுள்ள வேலையாக ஒன்றும் கிடைக்கவில்லை. அதனால் இந்த வேலையைச் சீக்கிரம் முடித்துக் கொடுத்தால் நல்ல கூலி கிடைக்கும் என்ற எண்ணத்தில்தான் இரவு அத்தனை நேரமாகியும் வேலை செய்து கொண்டிருந்தான். கப்பனுடைய இந்த எண்ணம் அவனுடைய சுத்தி எழுப்பும் இனிய சங்கீதத்துக்குத் தூங்கிப் பழக்கப்பட்ட அவன் வீட்டுக்கு அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் சுலபமாக ஊகித்துக் கொண்டார்கள்.

நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்த அக்கம் பக்கத்து வாசிகள், கப்பனின் சுத்தியின் சத்தம் திடீர் என்று நின்று போனதைக் கவனிக்கவில்லை. ஆம், உண்மையிலே சுத்தியின் சத்தம் நிற்கத்தான் செய்தது. அவ்விதம் நின்றதற்குக் காரணம், இருந்திருந்தாற்போல் கப்பன் தூங்கிப்போனதல்ல சுத்தியைக் கையிலெடுத்த பிறகு கப்பனுக்குத் தூக்கம் வராது என்பதை அவனுடைய மனைவி நன்றாக அறிவாள். ஆகவே அவன் 'சுத்தியை நிறுத்தக் கூடிய அளவுக்கு அங்கே ஏதாகிலும் நிகழ்ந்திருக்க வேண்டும். ஆமாம்; தூக்கிய சுத்தி, கீழே வரவொட்டாது தடுத்து நிறுத்தும் அளவுக்கு ஏதாகிலும் நிகழ்ந்திருக்க வேண்டும். அந்தச் சம்பவத்தை ஆச்சரியத்துடன் பார்த்தவாறே அவன் உட்கார்ந்திருக்க வேண்டும்' என்று ஊகித்தாள்.

பனை ஓலை வேய்ந்த கொட்டகையில் வாசலைப் பார்த்தவண்ணம் உட்கார்ந்திருந்தான் கப்பன். அவனுக்கு ஒரு பக்கம் கரிக்கூடையிருந்தது. மற்றொரு புறம் ஆயுதப் பெட்டியிருந்தது. எதிரில் உலையிருந்தது. உலைக்கு எதிரில் ஒரு பலகை. அதன் மேல் ஒரு அரம் இருந்தது. திடீர் என்று ஒரு நரி நுழைவதைப் பார்த்தான். நுழைந்தநேரே அதிலுள்ள சாமான்களையெல்லாம் கொட்டி ஏதோ தேடியது. பிறகு மரப் பலகைக்குச் சென்று அதன் மேலிருந்த அரத்தை வாயில் கவ்விக் கொண்டது.

நரி குடிசைக்குள் வந்து, தேடி, வாயில் அரத்தைக் கவ்விக் கொண்டு போகும் வரை கப்பன் ஏன் சும்மா பார்த்துக் கொண்டிருந்தான் என்று கேட்கலாம். அவனுடைய நிலைமையை உணர அவனுடன் அந்தக் கொட்டகையில் இருந்திருக்க வேண்டும். அப்போதுதான் அவன் சும்மா இருந்ததற்குக் காரணம் தெளிவாகப் புரியும். (தொடரும்)

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி

## 295: நீயே புறப்பட்டு வரவேண்டும்.

போர்க்களத்துப் பாசறையில் இருந்தான் கும்பகர்ணன். அங்கே வந்து விட்டான் விபீஷணன்.

கும்பகர்ணன் பார்த்தான். கவலை உண்டாய் விட்டது. "ஏன் இங்கே வந்தாய்? அரக்க ஜாதியின் தன்மை, சரி, சரி இன்னும் உன்னை விட்டுப் போகவில்லை" என்று ஆற்ற முடியாத பரிவோடு கோபம் கலந்தவாறுகப் பேசினன்.

எல்லா விஷயங்களும் ஒத்துப் பேசி அரக்க குலத்தை அழிக்க அல்லவா பார்க்கின்றன!

நான் ஏற்றிய வில்லை ஏந்திய ராமன் மாத்திரமா நிற்கிறான் எதிரியாக?

ஏற்றிய வில்லோன், யார்க் கும்
இறையவன், இராமன் நின் றான்;
மாற்றரும் தம்பி நின் றான்;
மற்றையோர் முற்றும் நின் றார்;
கூற்றமும் நின்றது; எம் மைக்
கொல்லிய விதியும் நின் றான்;—
தோற்றம் எம் பக்கல் ஐ ய
வெவ்வலி தொலையவந் தாய்.

[ஏற்றிய வில்லோன் யார்க்கும் இறையவன் ராமன் நின்றான்: நாணேற்றிய வில்லோடு அதாவது சதா யுத்த சன்னத்தனாய் நிற்கிறான் ராமன்; மாற்றரும் தம்பி நின்றான்: ஒப்பற்ற தம்பி லக்ஷ்மணன் நிற்கிறான்: மற்றையோர் முற்றும் நின்றார்: மற்றும் வீரர்கள் என்று சொல்லக் கூடியவர்கள் எல்லாருமே ராமன் பக்கத்தில் நிற்கிறார்கள்; கூற்றமும் நின்றது: அவன் ஏவிய தொழிலை நிறைவேற்றுவதற்கு நின்றது போல எமனும் நிற்கிறான்; எம்மைக் கொல்லிய விதியும் நின்றான்: ஆதியிலேயே கங்கணம் கட்டிக் கொண்டு நின்ற மாதிரி நிற்கிறது விதி—எங்களைக் கொல்லத்தான்; தோற்ற எம் பக்கல்: இப்படி சதி பண்ணி நின்ற மாதிரி எல்லாருமே நிற்கும் போது தோற்றும் விட்டது என்று தானே சொல்ல வேண்டும் எங்கள் பக்கம்; ஐய வெவ்வலி தொலைய வந்தாய்: விபீஷணனே உனக்கு வந்துள்ள அபாரமான பலத்தை தொலைப்பதற்காகவே இங்கே வந்திருக்கிறாய்.]

* * *

மேலும் சொல்லுகிறான் கும்பகர்ணன்:

"தம்பி! இந்த இலங்கை ஊருக்கு நீ இப்போது வந்தது பிசகு. எப்போது வர வேண்டும் தெரியுமா? சொல்லுகிறேன்:

வருவதும் 'இலங்கைஊர்க்(கு), இப்
புலைஎலாம் மாண்டபின் னைத்;
திருவுறை மார்பனோ டும்
புகுந்தபின், என்னும்நீ ராப்




1944-ம் வருஷத்தில் யுத்த கால நெருக்கடியை முன்னிட்டு இப்படி விளம்பரம் செய்தார்கள்.

"1950-ல் தற்போதைய சூழ்நிலையை உத்தேசித்து அதே விளம்பரத்தை இப்பொழுதும் போடப் போகிறார்களா?" என்று ஒரு பயந்தாங்கொள்ளி கேட்கிறார்!

பொருவரும் செல்வம்துய்ப் பாய்;
போதுதி என்னப், பின் னோன்

கருமம்உண் டுரைப்பஎன் று;
உரைஎனக்; கழறல்உற் றான்.

[வருவதும் இலங்கை ஊர்க்கு: வர வேண்டியதுதான் நீ இந்த இலங்கை ஊருக்கு: எப்போது தெரியுமா: இப்புலை வளைம் மாண்ட பின்னை: இங்குள்ள புலைவர் கூட்டமாகிய அரக்கர் எல்லாம் இறந்தொழிந்தபோது தான்; திருவுறை மார்பனோடும் புகுந்தபின்: வெற்றி பெற்ற வீர லக்ஷ்மி தங்கும் மார்பன் ராமனோடு இலங்கைக்குள் புகுந்த பிறகு; என்றும் நீரப் பொருவரும் செல்வம் துய்ப்பாய்: என்றென்றும் ஸ்திரமாய் நீங்கக் கூடிய ஒப்பற்ற லங்கா சாம்ராஜ்யத்தை ஆண்டு அனுபவிப்பாய்; போதுதி என்ன; அதனால் இப்போதே திரும்பி ராமனிடம்போய் விட வேண்டும் என்று கும்பகர்ணன் சொல்ல; பின்னோன் கருமம் உண்டு உரைப்ப என்று: தம்பி விபீஷணன், உனக்குச் சொல்ல வேண்டிய முக்கியமான காரியம் இருக்கிறது என்று சொல்லவும்; சரி சொல் என்று கும்பகர்ணன் சொல்லவும், சொல்லுகிறான் விபீஷணன்.]

* * *

விபீஷணன் சொல்லுகிறான்:

உன்னிடத்தில் ராமனுக்கு மிக்க அனுதாபம். அவனே என்னை உன்னிடம் போய்ப் பேசும்படி அனுப்பியிருக்கிறான்.

உனக்கு என்னிடத்திலுள்ள அன்பினாலும் கருணையினாலும் எனக்காக நீ செய்ய வேண்டிய காரியம் இதுதான்.

'வேதநா யகனேஉன் னைக்
கருணையால் வேண்டிவிட் டான்;
காதலால் என் மேல்வைத் த
கருணையாற் கருமம்ஈ தே;
ஆதலால் அவனைக்கா ண
அறத்தொடு திறம்பாஐ ய!.
போதுவாய் நீயே' என் றுப்,
புந்திநைந்(து) உரைத்த தம்பி.

[வேத நாயகனே: ராமனே; கருமம் ஈதே: எனக்காக நீ செய்யும் செயல் இது தானே; ஆதலால் அவனைக் காண: ஆகவே ராமனைக் காணுவதற்காக; அறத்தொடு திறம்பா ஐய: தர்மத்தை விட்டுச் சிறிதும் விலகாத என் அப்பனே; போதுவாய் நீயே என்று: நீயே வரவேண்டும் என்று; புந்தி நைந்து உரைத்த தம்பி: மனமானது நைந்து பேசிய விபீஷணனானவன்.]

கும்பகர்ணனுக்கு மனம் இளகி நிற்கிறது; அப்படியே தம்பி விபீஷணனுக்கும் இளகி நிற்கிறது.

தம்பி என்ன செய்கிறான் என்பதை அடுத்தபடியாகப் பார்க்கலாம்.

# அண்ணா வந்தார்!

"உமா, உமா" என்று எட்டு ஸ்தாயியில் கத்திக் கொண்டே உள்ளே நுழைந்தேன். ஆனால் அதற்குப் பதிலாக 'என்ன?' என்ற உமாவின் பத்து ஸ்தாயிக் குரல் என்றும்போல் அன்று கேட்கவில்லை. "ஏ, உமா! இன்னுமா டிரஸ் பண்ணிக்கலே?" என்று கூறிக் கொண்டே எட்டிப்பார்த்த நான் ஏமாற்றமே அடைந்தேன். கண்ணாடியின் அருகே ஸ்நோவும், பவுடரும் கேட்பாரற்றுக் கிடந்தன. சினிமா என்றால் நாலு மணிக்கே முகத்தில் நாலு அங்குல பவுடரை அப்பிக்கொண்டு நிற்கும் உமாவை இன்று காணவில்லை.

அப்பொழுது உள்ளே ஏதோ அரைக்கும் சப்தம் கேட்டு நான் தாழ்வாரத்தை நோக்கினேன். இது என்ன? என் கண்களையே நம்ப முடியவில்லை. உமா உரலில் ஏதோ அரைத்துக் கொண்டிருந்தாள். அத்தகைய காரியங்கள் செய்வதெல்லாம் அநாகரிகம் என்று கூறும் உமாவா இது! "ஏது, உரல் வீட்டிலிருக்கிற ஞாபகம் வந்துவிட்டது போலிருக்கிறதே?" என்றேன் நான். ஒரு பதிலும் வரவில்லை. நான் மீண்டும் "இன்று 'ஹாம்லட்' என்பது மறந்து போச்சா? உம், எழுந்திரு. நேரமாகிவிட்டது" என்றேன்.

இப்படி நான்தான் பேசிக் கொண்டே போனேனே தவிர, அவளிடமிருந்து யாதொரு பதிலும் வரவில்லை. தன் முழு பலத்தையும் உரலில் காட்டிக் கொண்டிருந்தாள். சிறிது நேரம் நான் அங்கேயே நின்றேன். பிறகு திரும்பிப் போகும் எண்ணத்துடன் திரும்பிய என்னைக் கண்ட உமா, "இன்னிக்கு ஏகப்பட்ட வேலை கிடக்கு. சினிமாவுக்கு வரமுடியாது" என்றாள் மெதுவாக. நான் தவறினாலும், வேடிக்கைப் போகத் தவறாத உமா, 'ஏகப்பட்ட வேலை' என்றது எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

நான் "ஏன், எனக்கு என்ன விசேஷம்? அதுவும் உன்னை அழைக்கும்படித் தூண்டிய அந்தக் காரியம் என்னவோ?" என்றேன். "ஏன் இப்படிக் கேலி செய்கிறீர்கள். சமாசாரம் தெரியாதா?" என்றாள் உமா உண்மையும் பாதி கேலியுமாக. "அப்படிப் பட்ட அபூர்வ விசேஷம் என்னதென்று தெரியவில்லையே" என்றேன். உமா சற்று கோபத்துடன் "ஆமாம், எங்க அம்மா, அக்கா எல்லாரும் வராங்க அது மறந்தே போயிடும்" என்று ஓர் அஸ்திரத்தை அலக்ஷியத்துடன் வீசி எறிந்தாள். அதை எதிர்க்கும் சக்தியில்லாத நான், "ஓஹோ, ஸாரி, உமா! நான் மறந்தே போயிட்டேனே!" என்றேன் தலையைச் சொரிந்துகொண்டே.

இனி உமாவிடம் கொஞ்சவதில் பயனில்லை என்று அறிந்து கொண்டு அங்கிருந்து நழுவினேன்.

மறு நாள் காலை. நான் படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. வேணுமா வேண்டாமா என்று அரைத் தூக்கத்திலிருந்த பொழுது என் தலையில் ஏதோ 'தடார்' என்று விழவே, 'ஓ, குப்பம்மா பெருக்க வந்து விட்டாளோ?' என்று நினைத்துக் கொண்டே எழுந்தேன். ஆனால் அங்கே குப்பம்மாவைக் காணவில்லை. அதற்குப் பதிலாக நாலைந்து வாண்டுகள் என் தலை மாட்டிலிருந்த அலமாரியின் மீது உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். அலமாரியும் தலையில் விழுவதற்கு முன் எழுந்து விடுவதே நல்லது என்று எண்ணிக் கட்டிலை விட்டிறங்கிக் கொண்டே, "என்டா பசங்களா, இது என்னடா! கீழே இறங்குறீர்களா, ஆளுக்கு முதுகிலே ஒண்ணு வைக்கட்டுமா" என்று கத்தினேன். "இல்லே சித்தப்பா! சித்தி இங்கே ஒரு பந்து இருக்குன்னு சொன்னு. அதைத் தேடறோம்" என்றான் ஒரு வாண்டு. "சரி தாண்டா! பந்தைத் தலையிலே போட்டு விட்டு மேலே தேடறனும்" என்று முணு முணுத்துக் கொண்டே நடந்தேன். உமாவின் அக்கா குடும்பம் வந்திருப்பதற்கு அங்கங்கே அடையாளங்கள் தெரிந்தன.

அதற்குள் அங்கே வந்த உமா "போறுமே இப்பத்தான் எழுந்திருக்கிறீர்களா? வந்தவாளை 'வா'வென்று சொல்லத் தெரியவில்லை. குழந்தைகள் எல்லாம் 'சித்தப்பா,' 'சித்தப்பா' என்று உயிரை விடறதுகள். நீங்களானால் ..." என்றாள். நான் அதற்குமேல் அங்கே நிற்கவில்லை. பேசாமல் வாசலுக்கு நடையைக் கட்டினேன்.



குழந்தைகள் எல்லோரையும் பார்த்தவுடன், 'பாவம், உமாவின் அக்கா பொறுமைக்குப் பேர்போனவள் போலிருக்கிறதே' என்று தோன்றியது. அதற்குள் "சித்தப்பா, இந்தாருங்கோ, காப்பி" என்ற குரல் கேட்டது. நிமிர்ந்து பார்த்தேன், பாட்டைத் தலையுடனும், கிருஷ்ண பரமாத்மாவை நிகர்த்த நிறமும் உடைய நான்கு வயதுப் பெண் காப்பியை வைத்துக் கொண்டு நின்று கொண்டிருந்தாள். 'ஓஹோ, உமாவிற்கு வேலை அதிகம் போலும்' என்று நினைத்துக் கொண்டே காப்பியை வாங்கப் போனேன். அதற்குள் 'ஐயோ' என்ற கூச்சலுடன் அந்தப் பெண் குதித்தாள். வாய் திறவாமல் காபி அபிஷேகத்தை ஏற்றுக் கொண்டேன். பின் என்ன செய்வது? எல்லாம் எங்கள் வீட்டுப் பூனையின் கைங்கர்யம்தான். காபி கொட்டின சப்தம் கேட்டு, அங்கே வந்த உமா "ஐயய்யோ நீங்கள் செத்தே பார்த்துவாங்கப்படாதோ?" என்று என்மீது பாணத்தை விடுத்தாள். நான் பேசாமல் வந்த கோபத்தைச் சிரமப் பட்டு அடக்கிக் கொண்டேன்.

மணி ஒன்பதிருக்கும். ஆபீஸிற்குப் போகும் அவசரத்தில் அங்கவஸ்திரத்தைத் தேடினேன். ஆனால் அது கோட்டு ஸ்டாண்டை விட்டு பட்டுவின்மேல் மேலாக்காக எறியிருந்தது. அதைப் பார்த்த எனக்கு அளவு கடந்த கோபம் வந்து விட்டது. கையை ஓங்கியிருப்பேன், ஆனால் உமாவின் குரல் அருகில் கேட்டது. உடனே வாய் "அடே, பட்டு ஜோராயிருக்கே உனக்கு!" என்று கூறி என்னைக் கரையேற்றியது.

ஒருவாறு புறப்பட ஆயத்தமான போது தான் என் அருமைப் பேனாவின் நினைவு வந்தது. அந்த பார்க்கர் பேனாவைத் தரையில் உபயோகித்துக் கொண்டிருந்தான் 'கார்டு லிஸ்ட்' கிட்டு. கடைசியில் கிளி மூக்கு நிப்பை உடைய பேனாவையே நான் கொண்டு போனேன். கிட்டுவை ஏன் அறையவில்லை என்று தானே கேட்கிறீர்கள்? என்ன செய்வது, உமாவின் காதில் அந்தச் சப்தம் விழுந்தால் அப்புறம் என் கதி என்னாவது!

சாயந்திரம் வந்தால் வீடு பூட்டியிருந்தது. மெதுவாகப் பக்கத்து வீட்டுக்காரர் "ஸார், உங்க 'ஒய்ப்' கடை வீதிக்குப் போயிருக்காளாம். சாவியைக் கொடுக்கச் சொன்னாள்" என்று சொல்லிச் சாவியைக் கொடுத்தார். கோபம் பொங்கியது. பேசாமல் ஹோட்டலுக்கு நடையைக் கட்டினேன். என் அக்கா யாராவது வந்து விட்டால் வீட்டை விட்டு வெளியே போகமாட்டாள் உமா. புடவைக் கடைப்பக்கம் தலையைக் காட்ட மாட்டாள். ஆனால் அவள் அக்கா வந்தால்...?

★

உமா வீட்டுக்கு வந்த தன் அக்காவின் குடும்பத்தினர் எல்லோரையும் திருப்திப் படுத்துவதில் ஊக்கம் காட்டினாள். ஆனால் என்பாடுதான் திண்டாட்டமாய்ப் போய் விட்டது. மளிகைக் கடை மன்னார்சாமி என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தான். நகைக் கடை நாடி முத்து என் மனைவியின் நாடியைப் பார்க்க விரும்பினான். துணிக்கடை ஜம்புலிங்கத்தைக் கண்டு நான் அஞ்சி ஓடினேன். இதற்கிடையில் டாக்டருக்குப் பில் ஏறிக்கொண்டே போயிற்று. ஒரு நாள் உமாவின் அம்மாவுக்கு மூட்டு வலி. மற்றொரு நாள் உமாவின் அக்காவிற்குத் தலைவலி. இன்னொரு நாள் அவளுடைய பெண்ணிற்கு 'ஸ்லேட்டா ஹெட் எக்' — இப்படியாக பலதரம்.

இவைகள் எல்லாவற்றிற்கும் சரிக் கட்டி விடுவேனென்று உமா நினைத்தாள். என் அம்மா, அக்கா யாராவது வந்தால் அவர்களின் பில் ஒன்றுமே ஏறாது. உமா சம்மதித்தால்தானே அந்தமாதிரி நடப்பதற்கு. ஆனால் அதெல்லாம் அந்தக்காலம்!

இந்தத் தடவை அம்மா வரட்டும். இந்த உமாவை மட்டம் தட்டாவிட்டால் நான் நானல்ல! ஆனால் பாருங்களேன் என் தலைவிதியை. வேண்டாத நேரத்தில் வந்து கழுத்தறுக்கும் என் பெரியப்பாவின் சித்தப்பா பிள்ளையின் மச்சினி கூட என்னை இப்போது ஏறெடுத்துப் பார்க்கவில்லை. போன வருடம் எவனோ ஒருவன் நண்பன் என்று கூறிக்கொண்டு வந்து குதித்தான். ஆனால் நான் வேண்டும் இந்தச் சமயத்தில் யாரும் வரமாட்டேன் என்கிறார்கள். இப்பொழுது யார் வந்தாலும், உமாவை வீட்டுக்குக் காவல் வைத்துவிட்டு, ஊர் முழுவதும் சுற்றிக் காட்டத் தயாராயிருந்தேன்.

கடைசியாக ஒருவாறு உமாவின் அக்கா குடும்பம் ஊர் போய்ச் சேர்ந்தது. அவர்களுக்கு உமா கட்டிக் கொடுத்த சாமானைப் பற்றி அதைத் தூக்கின போர்ட்டரைத் தான் கேட்கவேண்டும்! நானும் 'பிகு'வை விடாமல் உமாவை மட்டம் தட்டச் சந்தர்ப்பம் வருமென்று காத்திருந்தேன். அதுவும் கடைசியாக வந்தே விட்டது.

★

என் அண்ணாவும் மன்னியும் வருவதாகக் கடிதம் வந்தது. எனக்கு உண்டான சந்தோஷத்தில் தலை காலே தெரியவில்லை.

மறுநாள் அண்ணா வருவதாக இருந்தது. பெரிய ஏற்பாடெல்லாம் செய்தேன். சமையல் திட்டத்தை எழுதி வீசி யெறிந்தேன். இப்பொழுது மளிகைக் கடை மன்னார்சாமியைப் பற்றிக் கவலைப்படவில்லை. 'எவ்வளவு நாள் கழித்து வருகிறான் அண்ணா' என்று தான் தோன்றியது. அண்ணாவுக்கென்று ஓர் அறை தயார் செய்தேன். இதை யெல்லாம் பார்த்த உமா ஒன்றும் கேட்காவிட்டாலும், சற்று அசந்துதான் போய்விட்டாள். நன்றாய் வேண்டும்!

மறுநாள் காலையில் வெகு சீக்கிரமே எழுந்து விட்டேன். அண்ணா வருகிறானில்லையா?

மணி ஒன்பது. வாசலில் வண்டி வருகிறதா என்று பார்த்துப் பார்த்து அலுத்து விட்டு அப்போதுதான் ஈஸிசேரில் சாய்ந்தேன். உடனே வாசலில் வண்டிச் சத்தம் கேட்டது. உள்ளே இருந்த உமாவை (அவளுக்குத் தெரியாமல்) ஒரு வெற்றிப் பார்வை பார்த்துவிட்டு, 'அண்ணா' என்று கத்திக்கொண்டே வாசலுக்குச் சென்றேன். அதே சமயத்தில் வாசலில் 'தபால்' என்ற சப்தம் கேட்டது. நான் அதைக் கவனிக்காமல் சென்றேன். அதற்குள் "அண்ணா" என்ற உமாவின் குரல் கேட்டது. நான் திடுக்கிட்டு வியர்த்தேன். வண்டியிலிருந்து உமாவின் அண்ணாதான் இறங்கிக் கொண்டிருந்தான்!

# வட்ட மேஜை

## ★ இப்படியும் சில அகதிகள்!

சென்னை சர்க்காரால் நிறைவேற்றப்பட்டுள்ள ஜமீன் ஒழிப்புச் சட்டத்தினால் நிலங்களை இழந்து பரிதவிக்கும் நூற்றுக் கணக்கான பேர்களில் நானும் ஒருவன். நானும் எனது தமையனாருமாக சுமார் 10 வருஷங்களுக்கு முன் எங்கள் உழைப்பின் மூலமாகவும் எங்கள் மனைவிமார்களின் நகைகளை விற்றும் சேமித்திருந்த தொகையான ரூ. 16000 கொடுத்து, விவசாயம் செய்து ஜீவிக்க இராமநாதபுரம் ஜமீனைச் சேர்ந்த, தர்மாசனம் இனாம் நிலங்களில் ராதானேனை என்ற ஒன்றும் விளையாமலிருந்த பொட்டல் நிலம், நன்செய், புன்செய் என்ற பெயரால் சுமார் 200 ஏக்கர் வரையுள்ள தரிசுக் காட்டையும் ரிஜிஸ்தர் பத்திர மூலம் விலைக்கு வாங்கினோம். அங்கு வீடு கட்டி, குடியேறி மேற்படி பாழ் நிலங்களை மேலும் ரூ. 3000 வரை செலவு செய்து விளை நிலங்களாக மாற்றினோம். ஆண்டுதோறும் அதிலிருந்து ரூ. 700 அல்லது ரூ. 800 வரை வருமானம் வர, ஏற்பாடு செய்து மேற்படி வரும்படியைக் கொண்டு சுமார் 12, 15 பேருள்ள எங்கள் குடும்ப ஜீவனம் நடத்தி வந்தோம்.

நடந்த இரண்டு வருஷங்களாகப் பருவ மழையின்மையால் சாகுபடி செய்ததை யெல்லாம் விளையாமல் உணவுக்குப் படும் கஷ்டம் சொல்லி முடியாது. இந்த நிலையில் நடந்த 49-ம் வருஷம் நவம்பர் மாதத்தில், மேற்படி நிலங்களின் வருமானங்களை, மேற்படி சட்டத்தின் பேரால் சர்க்காரில் எடுத்துக் கொண்டு விட்டார்கள். ஏதாவது நஷ்டயீடு கிடைக்கும் அதைக் கொண்டு வேறு தொழில் செய்து ஜீவிக்கலாம் என்று நம்பி யிருந்தோம். இது தவிர மேற்படி கிராமச் சீர்திருத்தத்தின் பொருட்டு ரூ. 3000 கடன் வாங்கிச் செலவு செய்து மேற்படி கடனும் நாங்கள் கொடுக்க வேண்டிய நிலைமையி லிருக்கிறோம். நடந்த 11-4-50 சென்னை சர்க்கார் கெஜட்டில் பாகம் II பக்கம் 453-ல் இடைக்கால நஷ்டயீட்டுத் தொகை நிர்ணயம் சர்க்காரால் செய்யப்பட்டு வெளியாகி யிருக்கிறதைப் பார்த்தேன். 24 ராதானேனை என்ற பெயரால் மேற்படி நிலங்களுக்கு நஷ்டயீடு ரூ. 92 என்று நிர்ணயம் செய்து, மதுரையிலுள்ள டிரிபியூனலிடம் டெபாசிட் செய்திருப்பதாகப் பிரசுரம் செய்யப் பட்டிருக்கிறது.

மேற்படி கிராமத்திற்கு வருஷந்தோறும் சர்க்காருக்கு வரி மட்டும் சுமார் ரூ. 100 வரை செலுத்தி வருகிறோம். நன்செய்யும் புன்செய்களுமாக 220 ஏக்கர் வரையுள்ள கிராமத்திற்கு எந்தக் கணக்குப்படி ரூ. 92 நஷ்டயீடு நிர்ணயம் செய்திருக்கிறார்கள் என்பது தெரியவில்லை. எங்கள் உழைப்பின் மூலதனம் 16,000 எங்கே? நஷ்டயீடு ரூ. 92 எங்கே? மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாச மல்லவா இருக்கிறது! நாங்கள் வேறு தொழில் நடத்த இந்த மூலதனம் ரூ. 92 போதுமா? நாங்கள் பட்டுள்ள கடனுக்கு யார் பணம் கொடுப்பது? நாங்கள் வாழ்க்கை நடத்துவது எப்படி? இது சட்டத்தின் பெயரால் சர்க்கார் நடத்தும் பகல் கொள்ளையா? இதுபோல் தங்கள் கைவசம் உள்ள சில தொகைகளை யெல்லாம் நிலங்களில் முதலீடு செய்து விட்டு இன்று இந்தச் சட்டத்தினால் நிலத்தின் வருமானங்களைப் பறிகொடுத்துப் பரிதவித்து உணவுக்கு வழியில்லாமல் கதிகலங்கி நிற்கும் என்போன்ற ஆண் பெண்கள் எத்தனை ஆயிரம் பேர்கள் என்பது கனம் மந்திரிகளில் யாருக்காவது தெரியுமா? காங்கிரஸ் போர்வையில் சட்ட சபையில் நுழைந்தது. அந்தச் செல்வாக்கினால், ஜமீன் ஒழிப்புச் சட்டத்தை அவசியம் செய்ய வேண்டுமென்று வாய் கிழியக் கத்தி விட்டு, சட்ட சபை மெம்பர் என்ற செல்வாக்கைக் கொண்டு, இன்ஷூரன்ஸ் பிஸினஸ் நடத்தி மாதந்தோறும் ஆயிரக் கணக்கில் பணத்தைக் கொள்ளை யடித்துக் கொண்டு "டொடான்" கார்களில் உலாவித் திரியும் சுயநலக் கும்பல்களா நாங்கள்? அன்றாட ஜீவனத்திற்கு விவசாயத்தை நம்பியுள்ள — ஏழைகள் நாங்கள்; எங்களைப்போல் எந்த மந்திரியாவது தம் நிலங்களை இந்தச் சட்டப்படி பறி கொடுத்திருக்கிறாரா?

ஜமீன் ஒழிப்புச் சட்டம் வரவேற்க வேண்டியதுதான். ஆனால் என்போன்ற ஏழைகளுக்கு ஒரு வசதியும் கிடையாதா? எங்கள் கடன்களுக்காவது ஏதாவது வகை சட்டத்தின் மூலம் ஏற்படுமா? அல்லது உணவுக்கு வேறு வழியில்லாது, சட்டத்தின் மூலம் பாதிக்கப்பட்ட எங்கள் நிலையும் பட்டினிதான் கொடுமையினால் வந்த அகதிகளின் நிலைதானா? 'ஜமீன் ஒழிப்புச் சட்ட அகதிகள்' என்ற பெயரில் ஒரு கஷ்ட நிவாரண முகாம் ஒன்று திறவ, சர்க்கார் ஏற்பாடு செய்யுமா? இல்லாவிடில் நாங்கள்தான் வாழ்வது எப்படி?

திருவாடானை
22—4—50

மு. ஜயாமணி

## தமிழ் நூல் அட்டவணை

நம் தமிழ் மொழியில் பண்டைக்காலமுதற் கொண்டு தற்காலம் வரை வெளிவந்துள்ள அநேக நூல்களில் சிறந்தவையுள்ளவற்றின் பெயர்களைத் திரட்டி அகர வரிசையாய் அல்லது காலவாரியாய்த் தொகுத்து நூலின் பெயர், இயற்றிய ஆசிரியரின் பெயர், காலம் ஆகிய விவரங்களுடன் ஓர் அட்டவணை தயாரித்தால் தமிழுலகுக்கு மிகவும் உதவியாயிருக்கும். அது தமிழுக்குச் செய்யப்பட்ட ஓர் அரும் பெரும் பணியாகவும் இருக்குமல்லவா?

இவ்வேலையை 1924-ல் "பஞ்சாமிர்தம்" பத்திரிகையின் வாயிலாய் அதன் ஆசிரியர் ஸ்ரீ அ. மாதவய்யர் அவர்களால் ஆரம்பிக்கப்பட்டதாகவும், அது சரியாய்த் தொடர்வதற்குள் அன்னார் காலஞ்சென்று விட்டதாகவும் தெரிகிறது. பின்னர் இவ்வேலை சென்னைப் புத்தகாலய சங்கத்தாரின் முயற்சியால் தொடங்கப் பட்டுப் பூர்த்தியுறும் தறுவாயிலிருப்பதாக 1939 லேயே கேள்வியுற்றேன். அது என்னவாயிற்று என்று அறிய பெரிதும் விரும்புகிறேன்.

இப்பணியைத் "தமிழ் வளர்ச்சிக் கழகம்" புதிய முறையில் ஆரம்பிக்குமானால் அது எல்லாவற்றையும் விடச் சிறந்த பணியாக இருக்கும். அங்ஙனம் தொடங்கப்படுமானால் இது வரை நான் சேகரம் பண்ணி வைத்திருக்கும் விவரங்களைத் தருவதற்குத் தயாராய் இருக்கிறேன்.

மாத்தளை
10—5—50 அருணேசர்

○●○

## ஒரு சிறு திருப்பணி

நான் சென்ற மாதம் வேலூருக்குச் செல்ல நேர்ந்தது. போனது தான் போனேனே கோட்டையையும் பார்த்து விட்டு வரலாம் என்று கோட்டைக்குள் சென்றேன். உள்ளே போனதும் ஓர் அருமையான கோவிலைக் கண்டேன். அக்கோவிலின் சிற்ப அமைப்புகள் மிகவும் உயர்தரமாக இருந்தன.

இவ்வாறு அக்கோயிலின் அமைப்பைப் பார்த்து வியந்து கொண்டே உள்ளே சென்றேன். ஆனால் கர்ப்பகிருஹத்திற்கு வந்தவுடன், என்ன ஆச்சரியம்! விக்ரஹத்தைக் காணவில்லை! அச்சமயம் வருத்தமும் அவமானமும் ஒருங்கே எனக்கு ஏற்பட்டன. இவ்வளவு அருமையான கோவிலை விக்ரஹம் இல்லாமல் பாழாக்கி விட்டார்களே என்று வருத்தப்பட்டேன். கலைக்கும் பண்பாட்டிற்கும் பிரசித்தமான தென்னிந்தியாவில், சுதந்திரம் வந்த பிறகும் ஓர் அருமையான தேவாலயத்தை விக்ரஹமின்றிப் பாழாக வைத்திருக்கிறார்களே என்று அவமானமடைந்தேன். பக்திக்கும் பூஜைக்கும் நிலையமான கோவில் இப்பொழுது வெறும் கண்காட்சிப் பொருளாக அமைந்துள்ளது.

குஜராத்திலுள்ள சோமநாத தேவாலயத்தைத் துருக்கர்கள் மிகவும் பாழடித்து விட்டார்கள். எனினும் குஜராத்தி மக்கள் மிகுந்த பிரயாசை எடுத்துக் கொண்டு அதை மறுபடியும் கட்டி முடித்து விட்டார்கள். ஆனால் வேலூர் கோவிலை மறுமுறை கட்ட வேண்டிய அவசியமில்லை. ஒரு விக்ரஹத்தைக் கொண்டுவந்து வைக்க வேண்டியது தான். அந்த தேவாலயம் இழந்து விட்ட தன் சோபையையும், தேஜஸையும் மறுபடியும் பெற்று விடும்.

தமிழ் மக்களுக்கு அசாத்தியமானது ஒன்றும் இல்லை. 'மனமிருந்தால் மலையும் சாயும்' என்பது பெரியோர்களின் பொன்மொழி. இந்தத் திருப்பணியை எவ்விதமாவது செய்வார்கள் என்று நம்புகிறேன்.

தியாகராயநகர்
9—5—50 பத்மாசனி

○●○

## மரம் நடுவோம்!

இந்தியாவில் ஏழு லட்சம் கிராமங்களுக்கு மேல் உள்ளன. முக்கால் பங்கு கிராமங்கள் சோடியான போக்குவரவு வசதியைப் பெற்றவையல்ல. எனவே ஒரு கிராமத்திற்கும் மற்றொரு கிராமத்திற்கும் போக்குவரவு சாலைகளின் மூலம்தான் நடைபெற வேண்டும். பஸ் போன்ற நாகரிக வசதிகளும் நம் நாட்டில் குறைவு. பெரும்பாலான மக்கள் பரம ஏழைகள். வண்டி முதலிய வசதிகளற்றவர்கள்; கால் நடையாகவே செல்பவர்கள். பதை பதைக்கும் வெய்யிலில் கால் நடையாகவே செல்லும் அவர்களுக்கு அரசாங்கம் செய்யக் கூடிய மிகப்பெரிய உதவி சாலை ஓரங்களில் நிழல் தரும் மரங்களை நட்டுவித்தலும், சிரம பரிகாரத்திற்கு ஆங்காங்கே குடிநீர் வசதி கொண்ட மண்டபங்களைக் கட்டுவதும் ஆகும்.

அந்த அந்தப் பிரதேசங்களில் நன்கு வளரக்கூடிய மரங்களைத் தேர்ந்தெடுத்து அவைகள் சாலைகளில் இருக்கத் தகுதி வாய்ந்தவையா வென்று கவனித்து வைக்க வேண்டும். முள் மரங்கள், சிறு காற்றுக்கும் மழைக்கும் கூடத் தாங்காது வேரோடு விழும் மரங்கள் இவை கூடாது. நான்கு நாட்களுக்கு முன் நானும் என் நண்பர் ஒருவரும் இங்கிருந்து வேலூருக்குச் செல்லும் ரஸ்தாவில் பஸ்ஸில் சென்று கொண்டிருந்தோம். வழியில் மழை பிடித்துக் கொண்டது. அரை அங்குல மழைகூடப் பெய்திராது. அந்த மழையையும் காற்றையும் தாங்காது சாலையின் குறுக்கே இரண்டு

மூன்று மரங்கள் விழுந்து விட்டன. பஸ்ஸை வேறு வழியில் விட முடியாததனால் எதிர்த் திசையிலிருந்து வரும் பஸ்ஸிற்காகக் கொட்டும் மழையில் காத்திருக்க வேண்டியதாயிற்று. கிராம அதிகாரி ஸ்தலத்திற்கு வந்து மரத்தை அப்புறப்படுத்தும் வரையில் போக்கு வரவு ஸ்தம்பித்து விட்டது. பொதுவாக, ஈச்ச மரம், வாதநாராயண மரம் போன்ற மரங்கள் வலுவான வேருடையன அல்ல! இவற்றை விலக்கி விட்டு ஆலமரம், புளியமரம், வேம்பு. அரசு, புங்கம் போன்ற மரங்களைப் பயிரிட்டுப் பராமரிப்பதில் சர்க்கார் தங்கள் முழு சிரத்தையையும் காண்பிக்க வேண்டும்.

திருச்செங்கோடு
8—5—50 ரா. ஜெயலக்ஷ்மி

○●○

## சில யோசனைகள்

தங்களுடைய ‘குடும்ப சால் பேட்டி’ களைப் படித்தேன். நானும் அவர்களில் ஒருவன்தான். இவை எல்லாம் மத்தியதர வகுப்பினரின் சோகக் கடிதங்களாக இருக்கின்றன. ஆகவே, மத்தியதர வகுப்பைச் சேர்ந்தவர்கள் கீழே கொடுத்திருக்கிற சில யோசனைகளை ஆராய்வது நலம்.

1. குடும்பத்தில் ஒரே ஒருவர்தான் சம்பாதிப்பது என்ற நிலை மாற வேண்டும். ஆறு பேர் உள்ள குடும்பம் என்றால் நாலு பேராவது ஒரு வகை அல்லது மற்றொரு வகையில் சம்பாதிக்க வேண்டும். இது அடுத்த தலைமுறையிலாவது நடப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும்.

2. உதாரணமாக ஜப்பான், ஸ்விட்ஜர்லந்து போன்ற நாடுகளில் பெண்கள், சிறுவர்கள் கூட ஏதாவது சிறு கைத்தொழில்கள் செய்கின்றார்கள். இங்கே நம் நாட்டிற்கேற்றவாறு பால் பண்ணை, தேனீ வளர்த்தல், தையல்வேலை, பொம்மை செய்தல், பாத்திரங்கள் செய்தல் போன்ற வேலைகளில் ஈடுபடலாம்.

3. கல்யாணம் போன்ற விசேஷங்களில் ஆடம்பரமாகக் கடனை வாங்கியாவது ஆயிரக் கணக்கில் செலவிடுகிற அநாவசியமான ஆபத்தான வழக்கத்தைக் கைவிடல் வேண்டும். நம்முடைய ஒரு மாத அல்லது இரு மாத வருவாய்க்கு மேற்பட்ட தொகையைச் செலவிடுவதில்லை என்று ஒரு கட்டுப்பாட்டை வைத்துக்கொள்ள வேண்டும்.

4. ஜனத்தொகையைக் கட்டுப்பாடு செய்வதற்கான முறைகளை ஆராய வேண்டும். நம் தலைவர் நேரு, தம் சுய சரிதத்தில் இது பற்றிக் கூறியிருப்பது சிந்தனைக்குரியது.

5. உணவு உற்பத்தி கிராமங்களில் வசிப்பவர்களுக்கென்றே ஏற்பட்டதல்ல என்பதை யாவரும் உணர்ந்து, பங்கெடுத்துக் கொள்ளுதல் வேண்டும்.

சிதம்பரம்
15—5—50 டி. பாலசுப்பிரமணியன்

○●○

## ★ உல்லாச சபையா?

எங்கள் கிராமத்தில் ஏப்ரல் 25ல் உணவு அபிவிருத்தி பிரசாரக் கமிட்டி, மது விலக்குப் பிரசாரக் கமிட்டி கூட்டப்படும் என்று அறிவிக்கப்பட்டது. அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து தரப்பட்டன.

மேற்படி உணவு ஆபீஸர்கள் தவிர ஒவ்வொரு தாலுகாவிலும், பிர்க்காவிலும் மூன்று, நான்கு மெம்பர்கள் தேர்ந்தெடுத்திருப்பதாகவும் அவர்கள் மாதம் ஒரு கூட்டம் கூட்டுவதாகவும் தெரிகிறது. அந்தக் கூட்டங்களுக்கு வருகிற மெம்பர்களுக்கு மைல் ஒன்றுக்கு மூன்று அணா வீதம் பிரயாணச் செலவு கொடுப்பதாகவும் தெரிகிறது.

மேற்படி கூட்டம் மாலை 5 மணிக்குக் கூட்டப் பட்டது. சம்பந்தப்பட்ட உத்தியோகஸ்தர்களும் மெம்பர்களும் வந்து சேர்ந்தார்கள். 6 மணிக்கு டிவிஷனல் ஆபீஸர் வந்து சேர்ந்தார். (அவர் தலைமையில்தான்



## வருந்துகிறோம்!

●●●

"கல்கி"யில் அவ்வப்போது சிறு கதைகள் எழுதி வந்த ஸ்ரீ 'தாபன்' அவர்களின் மனைவியார் ஸ்ரீமதி மீனம்பாள் சமீபத்தில் காலமானார் என்ற செய்தி கேட்டு வருந்துகிறோம். அவருடைய பிரிவாற்றாமையால் கலங்கி நிற்கும் ஸ்ரீ 'தாபன்' அவர்களுக்கு நம் ஆழ்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கூட்டம் நடைபெறுமென அறிவிக்கப்பட்டிருந்தது.) அவர் வந்து தலைமைப் பீடத்தில் அமர்ந்தார். உடனே கூட்டம் ஆரம்பிக்கப்படவில்லை. "நான் முதலில் எங்கள் கூட்டத்தை முடித்துக்கொண்டு வந்து விடுகிறேன்" என்று அவர் சொன்னார். அதற்கென்று ஒரு தனியிடமும் தயார் செய்தார்கள். அங்கு அது சம்பந்தப்பட்ட உத்தியோகஸ்தர்களும், மெம்பர்களும் சுமார் 20 பேர் வரை கூடியிருந்தனர். இரண்டொரு மெம்பர்கள் பின்னால் போய்ச் சேர்ந்தார்கள். அங்கு என்ன நடக்கும் என்று அறிய பலர் விரும்பினேனும். அங்கு என்ன நடந்தது? ஏதோ ஒரு புத்தகத்தில் எல்லோரிடமும் கையெழுத்து வாங்கினார்கள். அவ்வளவு தான்! அதன்பின் அவர்களுக்குச் சிற்றுண்டி வழங்கப பட்டது. (இதில் சிலர் கலந்து கொள்ளவில்லை.) முடிந்தவுடன் அந்த முக்கிய மாணவர்கள் போய் விட்டார்கள். பொது ஜனங்களும் என்னமோ ஏதோ என்று அநேகம் பேர் போய் விட்டார்கள். மாலை 7 மணிக்கு டிவிஷனல் ஆபீஸர் வந்து தலைமைப் பீடத்தில் அமர்ந்தார். உள்ளூர் மாணவர் மூவர் உபாத்தியாயரிடம் பாடம் ஒப்புவிப்பதுபோல் உணவுப் பிரச்னை பற்றியும், மதுவிலக்குப் பற்றியும் பேசினார்கள். மாணவிகளின் கும்மி கோலாட்டம் நடந்தது. சம்பந்தப்பட்ட அதிகாரிகளோ அல்லது மெம்பர்களோ அதுபற்றிப் பேசவில்லை. அவர்களுக்குக் கூட்டத்தில் பேசத் தெரியுமோ தெரியாதோ தெரியவில்லை. எனக்குத் தெரிந்த நண்பர் (அவர் ஒரு மெம்பர்) ஒருவரிடம் "நீங்களாவது உணவைப்பற்றி கிராம மக்களுக்குப் புரியும் படியாகக் கொஞ்சம் பேசக் கூடாதா?" என்று கேட்டேன். "அந்த வம்பு எதற்கு? என்னமோ கூட்டத்திற்கு வரச் சொன்னார்கள், வந்தேன். டி. ஏ. கூட உண்டு" என்று சொல்லிவிட்டுப் போய் விட்டார். தலைவர் பேச ஆரம்பித்தார். அவர் பேசியதில் முக்கியமானது, "எனக்கு 24 மணி நேரம் வேலை செய்யப் போதவில்லை. என்றாலும் இப்படிக் கூட்டங்களுக்கு வரத் தவறுவதில்லை. விவசாயிகளுக்குக் கிணறு வெட்ட 750 ரூபாய் கொடுக்கிறார்கள். 27 வருஷ அனுபவமுள்ள என்னுடைய இரண்டு மாதச் சம்பளம் அது" என்று கூறினார். உணவு பற்றியோ, மதுவிலக்கு பற்றியோ ஒன்றுமே கூறவில்லை.

ஆகையால் இப்படிப்பட்ட உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல திறமை வாய்ந்த உத்தியோகஸ்தர்களை நியமிப்பதோடு, மெம்பர்களாகத் தேர்ந்தெடுக்கப் படுபவர்கள் இதில் நல்ல பேச்சுத் திறமை யுடையவர்களாக இருந்து மக்களுக்கு விளங்கும் முறையில் எடுத்துச் சொல்லுபவர்களாக இருக்க வேண்டும். இவர்களுக்கு அரசாங்கத்திலிருந்து சம்பளம் கொடுத்தோ அல்லது வேறு விதமாகவோ சேவை செய்யும்படி தூண்டலாம். அதில்லாமல் இப்போது இருப்பதுபோல் இருந்தால் அதிகாரிகளுக்கும், மெம்பர்களுக்கும் செலவழியும் பணம் அரசாங்கத்திற்கு நஷ்டமே தவிர, வேறு பிரயோஜனம் இல்லை.

ஆமத்தூர்
27—4—50 கே. எஸ். குருசாமி

○●○

## ரயிலின் வேகம்

ரயில்வே நிர்வாகம் மிகத் திறமையுடன் பல காரியங்களைச் சாதித்திருப்பதாகவும், பிரயாணிகளுக்குப பல வசதிகளைச் செய்திருப்பதாகவும், ரயில்வே மந்திரி கனம் என். கோபால ஸ்வாமி அய்யங்கார் அவர்கள் 1950-51 வருஷ பட்ஜெட்டைச் சமர்ப்பித்தபோது பார்லிமெண்டில் கூறியிருக்கிறார். ரயில்கள் குறித்த காலத்தில் வருவதில் அநேகமாய்த் தவறுதலில்லை என்கிறார். ஆனால், அவர் சொல்லுகிறபடி ஒப்பிட்டுப் பார்த்தால் குறைந்த தூரத்துக்கு நிறைந்த நேரத்தைக் கொடுப்பதால் அவ்விதம் தாமதமின்றி வண்டிகள் வந்து போகின்றன என்பதை கனம் மந்திரியார் அறிந்திருக்க மாட்டார் என்றுதான் தோன்றுகிறது!

உதாரணமாக கோவை - பொள்ளாச்சி தூரம் ரயில்வே கால அட்டவணைப்படி 29 மைல்கள். இடையில் உள்ள ஸ்டேஷன்கள் ஐந்து. இந்த வழியில் ஓடும் நெ. 565 கோவை-மதுரை எக்ஸ்பிரஸ் கோவையிலிருந்து இரவு 8-25க்குப் புறப்பட்டால் பொள்ளாச்சிக்கு 10-30க்குப் போய்ச் சேருகிறது! இடையில் நிற்கும் இடங்கள் மூன்று! மொத்த நேரம் 2 மணி 5 நிமிஷம்! இந்தியாவிலேயே மிக மோசமான ட்ராம் வண்டிகள் டெல்லியிலும் சென்னையிலும்தான் இருக்கின்றன. அவற்றைவிட மோசமாய் ஓடுகின்றன இந்த 565 நெ. "எக்ஸ்பிரஸ்" என்ற பெயரால் ஓடும் ரயில் வண்டிகள்!

'எக்ஸ்பிரஸ்' இப்படியானால் 'பாஸஞ்சர்' எப்படி என்கிறீர்களா? அதைக் கேட்கவே வேண்டாம். சென்ற வாரம் உடுமலைப்பேட்டைக்கு அருகில் ஸ்டேஷனை விட்டு ஒரு மைலுக்கப்பால் வந்து கொண்டிருந்த வண்டியிலிருந்து தவறி விழுந்த மூன்று வயதுக் குழந்தை அபாயமின்றித் தப்பித்துக் கொண்டதென்றால் அந்த ரயிலின் அபார வேகத்தைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

கோவை
12—5—50 கு. சிவராமன்

---

★ வட்டமேஜைப் பக்கத் தொகை ரூ. 25-ஐ "இப்படியும் சில அதிகள்!" என்ற கடிதம் எழுதிய திருவாடானை ஸ்ரீ ஜயராமனுக்கும், "உஷார் ஜபயா!" என்ற கடிதம் எழுதிய ஆமத்தூர் ஸ்ரீ கே. எஸ். குருசாமிக்கும் ரூ. 12-8-0 விதம் பிரித்து வழங்கப்பட்டது.

# Tushar

## விடமின் சத்துக்களடங்கிய வனஸ்பதி






சமையலுக்கு
சிறந்த
சாதனம்



துங்கபத்ரா
இண்டஸ்ட்ரீஸ்
கர்நூல் (மதராஸ்)

பிரதம விநியோகஸ்தர்கள் :

தமிழ்நாடு, ஆந்திரதேசம், மதராஸ் : டி. கன்னு & கோ., சுகீல் மான்ஷன்ஸ், 35, மவுண்ட் ரோடு, மதராஸ்
மைசூர் சமஸ்தானம் : செட்டி குஞ்சப்பி நாராயணஸ்வாமி & கோ., 200, கந்தாசபேட்டை, பெங்களூர் சிடி
ஹைதராபாத் சமஸ்தானம் : காசாராம்ஜிக் & கோ., 8568/1 & 2, ஜேம்ஸ் தெரு, செகந்திராபாத்
மேற்கு கடற்கரைப் பிரதேசங்கள் : டி. கன்னு & கம்பெனி, (பிரதம மொத்த வியாபாரிகள்)
சுகீல் மான்ஷன்ஸ், 35, மவுண்ட் ரோடு, மதராஸ்

# க்ரூஷன்

## எனது ஒல்லியான பருமனற்ற தேகத்தைத் திருப்பி யளித்தது

கல்யாணமான புதிதில் சரளா அவளது அழகிய கொடிபோன்ற உருவத்திற்காகப் போற்றப்பட்டாள். ஆறு வருஷங்கள் செல்லச் செல்ல மிகுந்த பருமனும் வளர்ந்து விட்டாள்.

"வயிற்றுச் சதையினால் ஏற்பட்ட எனது தொல்லைகள் அஜீரணத்தினாலும், மூச்சுத் திணறலினாலும் அதிகரித்தன. எனக்கு நடக்கவும் முடியாமல் என்ன செய்வதென்றே தோன்றவில்லை. பின்னர் ஒரு சிநேகிதி "க்ரூஷன்" சால்ட் உபயோகிக்கச் சொன்னாள். அவள் புத்திமதிப்பிரகாரமே ஒரு பாட்டில் "க்ரூஷன்" வாங்கினேன். இப்பொழுது நான்கு மாத க்ரூஷன் சிகிச்சைக்குப் பிறகு தேகம் பருமன் குறைந்து மறுபடியும் சுறுசுறுப்பாக இருக்கிறேன். இதயத் துடிப்பு, அஜீரணம் இவை ஒழிந்து விட்டேன்.

நான் அவ்வாறிருப்பதை நிரந்தரப் படுத்திக் கொள்ளுவதற்காகப் பிரதி காலையிலும் சிறிதளவு க்ரூஷன் உட்கொள்ளுகிறேன்."

வயிற்றுச் சதையும் அதனுடன் ஏற்படும் வயிற்றுக் கோளாறுகளும் மூச்சுத் திணறலும் உடம்பின் விஷத்தன்மையுள்ள கழிவுப் பொருள்களின் சேர்க்கையாலேயே உண்டாகின்றன. இவை, கழிவுகளை வெளியே தள்ளும் அவயவங்களின் வேலையைச் சரிவரச் செய்ய முடியாதபடி தடுக்கின்றன. க்ரூஷனிலுள்ள ஜீவ தாதுக்கள் கொழுப்பை உண்டாக்கும் அசுத்தங்களை உடலினின்றும் விலக்குகின்றன. அவயவங்களை இயற்கையாகவே இயங்குமாறு செய்வதன்றி அபாயமற்றதும் இயற்கையானதுமாய் அமைந்திருக்கின்றது.

இன்றே க்ரூஷன் வாங்குங்கள். எல்லாக் கெமிஸ்டுகளாலும், வியாபாரிகளாலும், மஞ்சள் பெட்டியில் ரூ. 1-10-0க்கு விற்கப்படுகின்றது.

## நீங்களும் அந்த க்ரூஷன்

### உணர்ச்சியைப் பெறலாம்

# தினம் காலையில் எண்ணெய் தேய்த்துக் குளிப்பதைப் போன்ற

# சுகத்தை பூர்த்தியாக அனுபவியுங்கள்!

எண்ணெய் தேய்த்து குளித்தான பிறகு உங்களுக்கு சுகமாகவும் குளுமையாகவும் தென்பாகவும் இருப்பதன் காரணம், அது சருமத்தினுள் புகுந்து 'வேலை' செய்து ஓர் இன்புணர்ச்சியூட்டுகிறது. கேரள டாய்லட் ஸோப்புகளும் அத்தகைய பயனளிக்கின்றன. அவைகள் சுத்தமானவை; கேவலம் எடை பருமன் நிரப்ப வேண்டி மாற்றுப்பொருள்கள் யாதொன்றும் அவையில் சேர்க்கப்படுகிறதில்லை. இந்த ஸோப்புகளின் செழிப்பான நுரையை தணுத்த ஜலத்திலும் கூட எளிதில் கழுவலாம்.




# கேரள ஸோப்

சுத்தமான எண்ணெயே மூலப்பொருள்

**ஸான்டல்வுட்**

இதில் கலந்துள்ள சந்தனம், மல்லிகை தைலங்களின் திவ்விய பரிமளம் ஸ்நானத்திற்குப் பிறகு வெகுநேரம் நீடித்திருக்கிறது.

தயாரிப்பாளர்கள் —

**கேரள ஸோப் இன்ஸ்டிட்யூட் கள்ளிக்கோட்டை**

டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் அண்டு காமெர்ஸ்

**கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்**

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk, Madras

